# வள்ளுவர் அறம்



வித்துவான் அ. நடேச முதலியார்
தமிழ் விரிவுரையாளர் :
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.



பழனியப்பா பிரதர்ஸ்
சேப்பாக்கம் சென்னை - 5 :: தெப்பக்குளம் திருச்சி - 2

# வள்ளுவர் அறம்

## உலகம்

**நா**ம் இன்று காண்கிற இத்தனை வகையான முன்னேற்றமும் சிறப்பும் உடைய உலகம், முதன் முதலில் இப்படியே உண்டாகி இருக்க முடியுமா? முடியாது. ஆனால், இந்த உலகம் எப்படி உண்டாகி, சிறிது சிறிதாக மாறுதல் அடைந்து இந்தப் பெரிய நிலைமையினை யடைந்திருக்க முடியும் என்று சிந்திப்பதும், அதன் உண்மையினை அறிவதும் நம் கடமைதான். இதனை நம் முன்னோரும், மேல்நாட்டு நிலநூல் வல்லாரும் கண்டு நமக்கு உதவியுள்ளனர். நம் முன்னோர், இந்த உலகம் முதன் முதலில் பெருமலையாகத் தோன்றி, காலங் கழியக் கழிய, காற்றாலும் மழையாலும் மலை உடைந்து, மணலாய், மண்ணாய், பின் புல் முதலாய உயிர்ப்பொருள் தோன்ற இடமாய் அமைந்தது. பின்னர் புழு, பூச்சிகள்தோன்றின. அதன் பிறகு ஊர்வன, நீர் வாழ்வன, பறவை, விலங்குகள் என்ற பிறவிகள் வளர்ந்தன. மக்களும் தோன்றினர். அதன் பின் மக்கள் வாழ்க்கை வளம்பெற ஆரம்பித்தது என்று கூறுகின்றனர். இதனை, ''கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே முன் தோன்றி மூத்த குடி'' என்ற பழம் பாட்டால், 'உலகம் கல்லாக இருந்து, பின் காலம் செல்லச் செல்ல மண்ணாக மாறி உலகில் வாழும் உயிர்ப்

பொருள்களில் சிறந்த மக்களினம் வாழும் இடமாகவும் அமைந்தது. அங்கே முதன் முதலில் தமிழர்களின் பழங்குடி மக்கள் தோன்றினர்' என்று அறிகிறோம்.

ஆனால், மேலைநாட்டு நில நூல் வல்லார், இந்த உலகம் நெருப்புக் கோளமாக அமைந்துள்ள சூரியனிடத்திலிருந்து சிதறிய ஒரு துண்டாகும். இது பல ஆயிரம் ஆண்டுகள் நெருப்பாகவே இருந்தது. காலம் கழியக் கழிய, காற்றாலும் மழையாலும், ஆறியும் நனைந்தும் கல்லாக இறுகியது. மேலும் மேலும், காற்றும் மழையும் அடிக்க மணலாய் மண்ணாய் மாறியது. அந்த நிலத்தில் புல்லும், பூண்டும் தோன்றின. பின்னர் புழுப் பூச்சிகள் பிறந்தன. இப்படியே வளர்ந்து, நீர் வாழ்வனவும் பறவையும் விலங்கும் பிறந்தன. பின்னும் பல்லாயிரம் ஆண்டுகள் கழிந்து விலங்குகளைப் போலவே மனிதனும் தோன்றினான். அந்த மனிதன் காலம் கழியக் கழிய, வளர ஆரம்பித்தான். அந்த முயற்சி, உணவில் முதலில் சென்றது. உணவை முதன் முதலில் இறைச்சியாகவும், காய்கறி கனிகளாகவும் உண்டான். பின், அந்த உணவைப் பக்குவப் படுத்தி உண்ணக் கருதி நெருப்பைப் பயன்படுத்தினான். பின்னர் உடையைத் தேடினான். உடையும், இலையும், மரப்பட்டையும், தோலுமாகவே முதலில் உடுத்தான். பிறகு கருத்து வளர வளர, அந்த உடையை மாற்றி அணிய ஆரம்பித்தான். அதன் பிறகு, கருத்தை வெளிப்படுத்த முயன்றான். அம்முயற்சிக்கு ஒலிதான் துணை. அவ்வொலியை முதலில், பொருளைச் சுட்ட—அறிவிக்க—ப் பயன்படுத்தினான். முதலிலே, குறிப்பு ஒலியினாலே பொருளைச் சுட்டினான். அவ்வாறு, அந்த மனிதன் முதலில் சுட்டி அறிவித்த பொருளைப் பலரும் அவ்வாறே சுட்டி அறிவிக்க அறிவிக்கப், பின்னால் அந்த ஒலிக் குறிப்பே அந்தப் பொருளுக்குப் பெயராய்—மொழியாய்—அமைந்தது. இங்ஙனம் மக்களினம் வளரத் தொடங்கியது. இந்த நில

உலகத்தில், 'இலெமூரியா' என்ற ஒரு பெரு நிலப் பரப்பு இருந்தது. அஃது இப்போது கடலில் மறைந்துவிட்டது. அந்த நிலப்பரப்பில்தான், மக்கள் தோன்றினர். அவர்கள்தாம் நில உலகில் ஆதிக் குடிகள். அவர்கள் பல காலங்களில் பல இடங்களில் பரவினர். இவ்வாறு உலகம் விரிந்து, இந்நிலையில் காணப்படுகிறது. அந்தப் பழைய நிலையினை வைத்து ஆராய்ந்தால் திராவிட மக்களே ஆதிக் குடிகள் என்றும், அவர்கள் மொழியே முதன் முதலில் உண்டாய மொழியாக இருக்க வேண்டும் என்றும் கூறலாம் என்று கூறுகின்றனர்.

இனி, மொழி நூலாசிரியர்கள், உலகில் உள்ள பல மொழிகளையும் ஆராய்ந்து, முதன் முதலில், சிறு சிறு சொற்களைக் கொண்ட மொழியே உண்டாகியிருக்கும் என்று கூறுகின்றனர். அல்லாமலும், இயற்கையாக எழக்கூடிய ஒலிகளும், எழுத்துக்களும், எந்த மொழியில் அதிகமாகக் காணப்படுகின்றனவோ, அந்த மொழிதான் முதலில் உண்டாகியிருக்க முடியும் என்றும் கூறுகின்றனர். மேலும், பறவைகளில் குயில் என்ற மொழி ஒலியால் உண்டாகி யிருப்பதையும், விலங்குக்கு மா என்ற மொழி, ஒலியால் உண்டாகி இருப்பதையும், அவற்றிற் பிரிந்து, அறிவற்ற மனிதக் கூட்டத்திற்கு மாக்கள் என்ற சொல்லும், அறிவுடைய மனிதக் கூட்டத்திற்கு மக்கள் என்ற சொல்லும் இயற்கை ஒலியால் வந்த மொழிகள் என்றும் காட்டுகின்றனர். வா, போ என்ற சொற்கள் செயல்களை ஓரெழுத்தாலேயே இயற்கையாக ஒலிப்பன என்றும் எடுத்துக் காட்டுகின்றனர். ஆ என்ற ஒலி துன்பத்திற்கு அறிகுறியாக இருப்பது இயற்கையாக எல்லா மக்களிடத்தும் காணப்படுகிறது. ஆனால் தமிழில்தான், இரக்கக் குறிப்பு இடைச் சொல்லாய் அமைந்து, மொழியின் பழமையை உணர்த்துகிறது என்று விளக்கமும் கூறுகின்றனர். இதனால், தமிழ் மொழி, திராவிட மொழிகளில் பழமையும்,

இயற்கையும் உடைய மொழி என்று விளக்கம் காண்கிறோம். இப்படி, மக்கள் முதன் முதலில், இலெமூரியா என்ற கடல் கொண்ட பழந்தமிழ் நாட்டில் தோன்றியவரே என்பதால், நம் பண்டைத் தமிழரே பழங் குடிகள் என்பதை யறிகிறோம். அதன் பின், அவர்கள் பேசிய, இயற்கை ஒலிக் கூட்டங்களாகிய மொழியே—தமிழே—பழமையானது என்பதால், நம் தாய்த் தமிழின் தொன்மையும், பெருமையும் அறிந்தின்புறுகிறோம்.

## மக்கள்

மரஞ் செடி கொடிகளில் உயிர் உண்டு என்பதை நாம் எப்படி யறிவது? அதனை ஓரறிவுயிர் என்பது எதனால்? அந்த ஓரறிவுயிர்க்கும் நமக்கும்—அதாவது ஆறறிவு படைத்த நம் மக்கள் கூட்டத்திற்கும்—வேற்றுமை என்ன? வளர்ச்சி எங்கே இருக்கிறது? என்பனதாம் அறிஞர்களின் ஆராய்ச்சி. மரஞ் செடி கொடிகளில் மிகச் சிறியது புல். அதனால்தான் தமிழில் புல் என்ற சொல் புல் என்ற பொருளையும் குறிக்கும்; புன்மை, சிறுமை என்ற குணத்தையும் குறிக்கும். அந்தப் புல் முதல், ஆல் என்ற பெரிய மரம் வரையும் உள்ள, ஓரறிவு உயிரை உயிருடையது என்றறிய வேண்டுமானால், அந்த மரஞ் செடி கொடிகளிடம் பசுமை என்ற நிறப் பண்பைக் காணல் வேண்டும். பசுமையிருந்தால், உயிர் உண்டு என்றறியலாம். வாடி உலர்ந்து விடுமானால் பட்டு உயிர் இழந்துவிட்டது என்ற முடிவுக்கு வருகிறோம். இந்த ஆராய்ச்சியில் தலைப்பட்ட திருவள்ளுவர், உயிர்களின் வளர்ச்சிக்கும் வாழ்வுக்கும் மழைதான் காரணம் என்று சொல்ல வந்த இடத்தில்,

*''விசும்பில் துளிவீழின் அல்லால்மற் றாங்கே*
*பசும்புல் தலைகாண் பரிது''*

என்றருளுகிறார். இந்த அருமைத் திருக்குறளின் பிற்

பகுதியில், புல் தலையில் பசுமை காணப்படுவது அரிது என்று கூறி, ஓரறிவுயிர்களாகிய மரஞ் செடி கொடிகளின் உயிர்த் தோற்றம் பசுமையாகிய தளிர்ப்பினுல் தான் அறிய முடியும் என்று கூறியிருக்கிருர்.

இனி, அடுத்த புழுப் பூச்சிகளிடம் அசைவு காணப்படுகிறது. அங்கு அசைவால் உயிர் உண்மை யறிகிருேம். அசைவின்றிப் போய்விடுமாயின் உயிர் இருப்பினும் இருப்பதை அறிய வேறு துணையின்மையின் இறந்தனவாகக் காணப்படும்.

மேல், மூக்கென்னும் மணமறியும் காற்று உயிர்க்கும் கருவியொடு கூடிய உயிர்களிடம், மூச்சு உண்மையாலும், மூச்சின்றிப் போய் விடுவதாலும் உயிர் உண்டு-இல்லை என்பதை யறிகிருேம்.

இங்ஙனமாக உயிர்கள், ஓரறிவு முதல் ஆறறிவு வரை வளர வளர, உடல் தோற்றமும், உயிர்த் தோற்றமும் வளர்ந்து வருகின்றன என்ற உண்மையைப் பல காரணங்களாலும் விளக்கி உள்ளனர்.

முதலில் மரஞ் செடி கொடிகள், தலையாய வேரினைப் பூமிக்குக் கீழ் உடையனவாய், வேரால் நீர் உண்டு வளர்கின்றன.

இரண்டறிவுடைய புழுப் பூச்சிகளும், தம் தலையைப் பூமிக்குள் வைத்துக்கொண்டு, மண், மண்ணின் சாரம் இவற்றை உண்டு வளர்கின்றன.

மூன்றறிவுடைய உயிர்களும், மண்ணிலேயே தலை கவிழ்ந்து நின்றும், வளைக்குள் வாழ்ந்தும், அழுக்குகளை யுண்டும் வளர்கின்றன.

நான்கறிவுடைய பறவை முதலியன, தலை கவிழ்ந்து வாழ்வதையும், ஆனுல் ஓர் ஒருகால் தலை நிமிர்ந்தும் வாழ்வதையும் அறிகிருேம்.

ஐந்தறிவுடைய விலங்கினம், குனிந்த தலையுடையன வாய்ச் சக்கைகளையும், இயற்கை உணவுகளையும் உண்டு தலை கவிழ்ந்த வண்ணம் வளர்கின்றன. ஆனுல், பூமியில் தலை படாமல் சிறிது தூக்கி நிற்கின்றன.

மனிதனாகிய ஆறறிவுடையான், தலை நிமிர்ந்து தூக்கிக் குனியாவண்ணம், இயற்கைப் பொருளைத் தன்னறிவால் பக்குவப்படுத்தி உண்டு வளர்கிறான். சாரங்களையே உண்ணுகிறான். இதனாலும் மனிதப் பிறவி இயற்கையாகவே சிறப்புடையது என்றறிகிறோம்.

இனி ஓரறிவு, ஈரறிவு, மூவறிவு, நாலறிவு, ஐயறிவு, ஆறறிவு என்பது, தொடுதலை அறியும் அறிவு ஓரறிவு; தொடுதலோடுமோத்தலை அறியும் அறிவு ஈரறிவு; தொடுதல்மோத்தல் பார்த்தல்மூன்றறிவு; தொடுதல்மோத்தல் பார்த்தல் சுவைத்தல் நான்கறிவு; தொடல் மோத்தல் பார்த்தல் சுவைத்தல் கேட்டல் என்ற ஐம்பொறியும் உடைய அறிவு ஐந்தறிவு; மேற்கூறிய ஐந்தறிவோடு, மனத்தால், தீயன விலக்கி நல்லன கொண்டு வாழும் மன உணர்வும் உடைய மக்கள் வாழ்வு ஆறறிவுடைய வாழ்வு என்று, தொல்காப்பியர் முதலிய சான்றோர், பிறவியின் கூறுபாட்டினை விளங்கக் கூறியுள்ளனர்.

இப்படியாக வளர்ந்த பிறப்பில் சிறந்த பிறவி எடுத்த மக்கள், ஆணும் பெண்ணும் ஆகிய இரு பெரும் பிரிவினராய்க் காணப்படுகின்றனர். பிறப்பால் உயர்ந்த மனிதப் பிறவியினரே ஆயினும், தோற்றத்தால்—உடலமைப்பால் வேறு வேறு தோற்றமும், உடலமைப்பும் உடையராய்க் காட்சியளிக்கின்றனர்.

பல ஆயிரக் கணக்கான மக்கள் நடுவில் ஒருவர் அல்லது இருவர், பெண்ணில் ஆண் தோற்றமும், ஆணில் பெண் தோற்றமும் உடையராய் இருப்பதை இன்றும் கண்டு வியக்கிறோம். அதனால் அத்தகையோர் மாறுபிறவி பெற்றவர் என்று, அவர்களைக்கண்டு புதுமை கொள்கின்றோம். அதனாலேயே, பெண் பிறவியின் தோற்றமும் உடலும் அமைப்பும் வேறு, ஆண் பிறவியின் தோற்றமும் உடலும் அமைப்பும் வேறு என்பதை நாம் உணர்கிறோம்.

இவ்வாறு தோற்றமும் உடலும் அமைப்பும் வேறுபட்ட, பெண்ணும் ஆணும் கூடிவாழும் வாழ்க்கையும்,

பிரிக்கமுடியாத கூட்டுறவும், வளர்ச்சியும் எப்படி உண்டாயிற்று? பெண்ணின் குணம் செயல்கள் என்ன? ஆணின் குணம் செயல்கள் என்ன? அப்படிக் கூறப்படும் பெண் குணம் செயல் என்பன கற்பனையா? இயற்கையா? ஆணின் குணம் செயல் கூறப்படுகின்றனவே, அவை கற்பனையா? இயற்கையா? என்ற ஐயமும், ஆராய்ச்சியும் எழுவது இயற்கைதான். ஆனால், ஒன்று கண்கூடாகக் காண்கிறோம்.

மாடு நம்மோடு வாழ்கிறது. நம் நாட்டிலும், பிற மேல் நாடுகளிலும் கீழ்நாடுகளிலும் வளர்க்கவும் படுகின்றன. அம் மாடுகளில் ஆணும் பெண்ணும் காணப்படுகின்றன. நாம் ஆண் மாட்டினைக் காளை என்றும், பெண் மாட்டினைப் பசு என்றும் அழைக்கிறோம். காளையை உழவு, வண்டி முதலியவற்றிற்குப் பயன்படுத்துகிறோம். பசுவினைக் கன்று போடவும், பால் பயன் பெறவும் வளர்க்கிறோம். அன்றியும், பசுவில் வறடாய், கன்று இனிப்போடாது, பால் பயன் கொடாது என்ற முடிவுக்கு வந்துவிடக் கூடியனவாய் உள்ளனவற்றை, மேற்கூறிய உழவிற்குப் பயன்படுத்துவாரும் உண்டு. அன்றி, கன்று ஈனும்—பாற்பயன் கொடுக்கும்—பசுவை எங்கும், உழவிலும் செக்கிலும் கட்டிப் பாழ்படுத்துவார் இல்லை. ஆகையால் விலங்கிலும், ஆணும் பெண்ணும் வேறு வேறு தொழிலும், பயனும் உடையனவாய் அமைந்துள்ளமையும், அமைத்துக் கொள்ளப்பட்டமையும் அறிகிறோம். இனி, இவ்வாறே கீழ்ப் பிறவிகளிலும், ஆணும் பெண்ணும் அமைந்துள்ளன. அவைமட்டும், இயற்கையிலேயே உடல்வேறுபாடும், அதற்கேற்ற செயலும் குணமும் உடையனவாய் விளங்குகின்றன. அவை மக்களோடு கூடி வாழாமையின் நமக்கு, அவற்றின் திறம் விளங்கினபாடில்லை. உயிர் நூலாசிரியர், அவற்றின் உடலமைப்புகளையும், வளர்ச்சியின் முறையினையும் கூறி, ஆண் - பெண் வேற்றுமைகளை விளக்கி எழுதியுள்ளனர்.

இந்த உடற் கூறுபாடுகளை நன்கறிந்த நம் பண்டைத் தமிழ்ச் சான்றோர் ஆண்மை என்றும், பெண்மை என்றும் பெயர் கூறிக் குணங்களாகவே அமைத்து விட்டனர். வேறு வேறு என்ற முடிவில் தெளிவிக்க வந்த சொற்களே ஆண்மை என்ற சொல்லும், பெண்மை என்ற சொல்லும் என்றறிதல் வேண்டும்.

இதனை விளக்க வரும்போதே ஆண் உயர்வு, பெண் இழிவு என்ற எண்ணமோ, பெண் உயர்வு, ஆண் இழிவு என்ற எண்ணமோ வந்துவிடக் கூடாது. பிறவியில் மனிதப் பிறவியேயாயினும், பெண் வேறு, ஆண் வேறு என்ற எண்ணம் மாத்திரம் வரவேண்டும். பெண்ணியல்பு வேறு, ஆணியல்பு வேறு என்ற எண்ணம் மாத்திரம் வேண்டும். பெண்ணின் செயல் வேறு, ஆணின் செயல் வேறு என்ற எண்ணமும், பெண்ணின் பயன் வேறு, ஆணின் பயன் வேறாக உலகியலும், இயற்கையும் அமைந்துள்ளன என்ற எண்ணமுமே எழவேண்டும்.

உலகில் நெருப்பும் நீரும் வேறு வேறாக—மாறாகக் காணக் கிடக்கிறது. நெருப்பு சுடும் தன்மை உடையது. நீர் குளிரும் தன்மையுடையது. நெருப்பு உயர்வுடையதா, நீர் உயர்வுடையதா என்ற வினா எழுவதில்லை; ஐயமும் உண்டாவதில்லை. நெருப்பும், நீரும் இன்றியமையாதன என்ற அளவே அமைகிறது. உணவைச் சமைக்க நெருப்பையும் நீரையும் பயன்படுத்தி, உணவைப் பக்குவப்படுத்தும் அம்மாத்திரமே செய்கிறோம். உயர்வும் தாழ்வும் கருதுவதில்லை. உண்மையிலும், அப்பொருள்களிடம் உயர்வு தாழ்வு என்ற நிலையும் இல்லை. அது போலவே, மனிதப் பிறவியில், ஆண்—பெண் என்ற இரு பிரிவு காணப்படினும், உயர்வு தாழ்வு அவற்றில் இல்லை; இருக்கவும் முடியாது. ஆனால், குணமும், செயலும், அமைப்பும், நிலையும் வேறு வேறாக அமைந்துள்ளன என்றது மாத்திரம் உண்மையே. அந்த வேறுபாட்டினை நன்குணர்ந்து,

அதற்கு ஏற்றவாறு, ஒழுக்க வகைகளை வகுத்துக் கொடுத்து, அதன் வழி உலகியலை நடத்தச் செய்வது தான், உயர்ந்த பண்பாட்டிற்கு வேண்டிய முறையாகும். அந்த அடிப்படையில் எழுந்த நூல்கள் சிலவே. அது மொழிகள் தோறும். தேசங்கள் தோறும் வேறு வேருகக் காணப்படுகின்றன. பழமையும் பெருமையும் நிறைந்த நம் தமிழ் நாட்டில், இந்த உண்மை நிலையுணர்ந்து, இயற்கை விதி கடவாது, ஆணியல்பும் பெண்ணியல்பும் பிறழாது, அறம் வகுத்து மக்கள் சமுதாயத்திற்கு வழி காட்டிய சான்றோர் பலர் பண்டே திகழ்ந்தனர். அவருள் திருவள்ளுவர் என்னும் தெய்வப் புலவர் தலை சிறந்தவர். அவர் மக்கள் சமுதாயத்தை ஆண் என்றும் பெண் என்றும் இரண்டாகப் பிரித்து, ஆணுக்குரிய இயல்பொழுக்க முறையினையும், பெண்ணுக்குரிய இயல்பொழுக்க முறையினையும் வகுத்துக் கொடுத்திருக்கிருர். மேலும் அவர்கள் கூடி வாழும்போது எப்படித் தம் இயல்பில் குறையாது ஒழுகி, உலகில் நற்பயனை விளைத்துத் தாமும் இன்பமடைய முடியும் என்பதனையும் விளக்கிக் கூறியுள்ளார்.

## ஆண்-பெண்

தாளாண்மை, வேளாண்மை, குடியாண்மை, அரசாண்மை என்ற சொற்களை வரிசையாகக் காண்கிரும். இச்சொற்களில், தாள், வேள், குடி, அரசு என்ற சொற்களை விலக்கினுல் ஆண்மை மட்டும் நிற்கிறது. தாள் = முயற்சி, வேள் = உதவி, குடி = குடிப் பிறப்பு, அரசு = வேத்துரிமை. இவை ஆளுந்தன்மை, வேளாண்மை, தாளாண்மை, குடியாண்மை, அரசாண்மை என்று நிற்கின்றன. எனவே, முயற்சி உடையவனுயிருத்தலைத் தாளாண்மை என்கிரும். இதுபோலவே பிற சொற்களும் நிற்கின்றன என்றறியலாம். இனி, ஆண்மை என்பதும், ஆளுந்தன்மை

என்ற பொருளையுடையது. அதனை ஆசிரியர் திருவள்ளுவரே, நல்லாண்மை என்பது, ஒருவன், தான் பிறந்த குடியினைப் பிறர்க்கு அடிமையாகாதபடி காத்துத் தானே ஆளும் தகுதியுடைமைதான் என்று கூறுகிறார். அங்கே, 'இல்லாண்மை ஆக்கிக் கொளல்' என்ற விளக்கத்தால், ஆண்மை என்ற சொற்குப் பொருள் விளக்கம் காட்டுகிறார். இனி, உலகத்திலும், ஆள் என்ற சொல், மக்களில் ஆணையே குறிப்பதையும் நாம் இன்றுவரை வழக்காற்றில் காண்கிறோம். உலக வழக்கிலும், நூல் வழக்கிலும் ஆண் என்ற சொல்லும், ஆள் என்ற சொல்லும், பெண்ணொழித்து, ஆளுந்திறனுடைய மனிதக் கூட்டத்தை உணர்த்தி நிற்கின்றமையை அறிகிறோம். இந்த முறை தழுவியே குணங்களிலும் வீரம், வலிமை, துணிவு முதலிய கடிய குணங்களை ஆண்மைக் குணமாகவும், அன்பு, அருள், இரக்கம் முதலிய மெல்லிய குணங்களைப் பெண்மைக் குணங்களாகவும் கூறுவதுண்டு. ஆனால், ஒரொருகால் பெண்களிற் சிலர், வலிமையும், துணிவும், வீரமும் உடையராய் வாழ்தலும், ஆண்களிற் சிலர், அன்பு, அருள், இரக்கம் உடையராய் வாழ்தலும் உண்டு. பொதுப் பண்புகள், பெரும்பாலும் மலர்தற்குரிய உடலமைப்பு, தோற்றம் முதலிய இடம் நோக்கி அமைக்கப்பட்டன என்பதே கருத்து.

பெண்ணானவள், மெல்லிய உடலமைப்புடையள்; இயற்கையழகு மலரும் இடமாவள்; அன்பு, அருள். இரக்க இருப்பிடமாவள்; தன் வயப்படுத்தும் தனி உரிமையுடையள்; இன்ப நிலையம் என்று கருதப்படுவள்; உலக வளர்ச்சியின் உயர்ந்த சாதனம்; தன்னலனைக் கருதாத தகுதியுடையள்; பிறர் நலம் பேணும் பெருமையுடையள்; மலரினும் மெல்லியள்; தேன் கலநத பாலினும் இனியள் என்று பெண்ணின் குணம்-செயல் கூறப்படுகின்றன.

மலையும் எழுவும் (இரும்புத் தூண்) தோளுக்குவமை ஆணுக்கு. மூங்கிலும் அமிழ்தும் தோளுக்

குவமை பெண்ணுக்கு. குயிலும் கிளியும் சொல்லுக் குவமை பெண்ணுக்கு. யானையும் சிங்கமும் சொல்லுக் குவமை ஆணுக்கு. மயில் போன்ற சாயல், குயில் போன்ற மொழி, மான் போன்ற மருட்சிப் பார்வை, அன்னம் போன்ற நடை என்பர் பெண்ணை நோக்கி. களிறு போன்ற நடை, சிங்கம் போன்ற நோக்கு, ஏறு போன்ற ஏற்றம் என்பர் ஆணை நோக்கி.

இவ்வாறு, உவமைகளை உற்று நோக்கினும், செயலையும் குணத்தையும் நோக்கினும், இவை பெண்ணுக்கும் ஆணுக்கும் உள்ள இயற்கையாகவே அமைந்த வேறுபாட்டினை விளக்குவனவாய் அமைந் துள்ளமை நன்கு புலனாகும். இங்ஙனம் இரு வேறு பட்ட ஆணும் பெண்ணும் வளர்ந்து கூடும்போது ஒன்றை ஒன்று காதல் என்னும் அருங் கயிற்றால் கட்டுண்டு பிரிக்க முடியாதபடி இன்ப துன்ப நிகழ்ச்சிகளை ஒன்றாக ஏற்று வாழ்க்கை நடத்துகிறார்கள். இந்த வாழ்க்கை முறையே இயற்கையான சிறந்த வாழ்க்கை முறை என எல்லா நாட்டவரும், மொழியவரும், சான்றோரும் கூறுகின்றனர். அவர்கள் கண்ட முடிபினைத் திருவள்ளுவர் எப்படி எடுத்து நமக்கு அருளுகிறார் என்பதுதான் நம்முன் நிற்கும் சிறந்த குறிக்கோள்.

அறிவு, வீரம், வலிமை, துணிவு—இவை ஆணின் குணம் என்று முன்னே குறிப்புக் கொடுக்கப்பட்டது. அன்பு, அருள், இரக்கம் என்பவை பெண்ணின் குண மாகக் குறிக்கப்பட்டன. இவற்றுள் அறிவு என்ற ஒன்று எதனையும் செய்யும் திறனுடையது அன்று. அன்புதான் தூண்டிச் செயலாற்றுவது. அறிவு உணர வைக்கும். அன்பு செயலில் புகுத்தும். அறிவுமாத்திரம் உடை யான் உலகில் சமுதாயத்திற்குப் பயன்படான். அவன் கொடுக்கும் அறிவைப் பெற்றுப் பயன்படுத்துபவ ரால்தான் உலகம் நன்னிலையடைகிறது. அதனால்தான் வள்ளுவப் பெருந்தகையும்,

"அறிவினன் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்
தன்நோய்போற் போற்றாக் கடை"

என்று கூறினர். பிற உயிரின் துன்பம் கண்ட போது மனமிரங்கி, அத்துன்பத்தைத் தன் துன்பமாக ஏற்று, அத்துன்ப விலக்குக்கு உதவி செய்யாத அறிவினால் பயனில்லை என்றருளுவதிலிருந்து, இரக்கம் என்ற பெண்ணின் குணத்தால்தான், அறிவு என்ற ஆணின் குணம் வெளிப்பட்டுப் பயன் கொடுக்கிறது என்ற உண்மையை வெளியிடுகிருர் ஆசிரியப்பெருந்தகை.

இவ்வாறே உலகியல் வாழ்க்கையில், அன்பும் அறிவும் கூடிச் சிறந்த இன்பம் பயக்கும் நல்வினைகளை இடையருது செய்து, பிறவியின் பயனை யடையவேண்டுவதே மனிதப் பிறவியின் குறிக்கோளாகும்.

இதனையே நம் வள்ளுவர், இல்வாழ்க்கை யென ஆண் திறன் பேசி, வாழ்க்கைத் துணை நலம் என்ற பெண்ணியல்பு கூறி, அதன் பின் அவ்விருவருடைய கூட்டுறவால் விளையும் உலக வளர்ச்சிக்கான மக்கட் பேறு சொல்லுகிருர். அதனல் அவ்விருவருடைய கூட்டுறவும் குணத்தால், செயலால் பண்பட்டு முதன் முதலாக, அன்பும் அறிவும் ஒன்றி எழும் பிறர் நலம் பேணலாகிய அன்புடைமையின் செயலாம் விருந்தோம்பல் மலர்கிறது என்ற அழகுபட்ட இல்வாழ்க்கை, இயற்கையோடு இயைந்த முறையைத் தெளிவிக்கிருர்.

ஆகவே, திருவள்ளுவனரால் எடுத்துப் பேசப்படும் அறம் என்ற தலைப்பு, மக்களினத்தில், ஆணும் பெண்ணும் கூடியியற்றும் அறிவுச் செயலையும் அன்புச் செயலையும் பகுத்து, உலகியலுக்குப் பயன்படும் வகையில் வாழ்க்கையினை வகைப்படுத்தி, பிறவியின் பயனை அடையச் செய்வது என்றறிகிறேம்.

அதனல்தானே, அறம் என்று தொடங்கும்போதே, —ஏன்—தொடங்கும் முன்னரே, 'அறனெனப் பட்டதே

இல்வாழ்க்கை' என்ற முடிந்த கருத்தினையும் விளக்கி விட்டுப் பின் இல்வாழ்க்கை பேசுகிறார்.

ஆகையால் ஆசிரியர் கருத்தின்படி அறம் என்ற பெரும் பிரிவை (அறத்துப்பால்) முறையாக இல்வாழ்க்கையில் தொடங்கி, உலகியற் பயன்களை நிறையத் துய்த்து, அதன் பின் உலக நிலையாமை கண்டு, அகண்ட அளவற்ற உலகமானது எல்லார்க்கும் பொது, ஒருவனுக்கே உரிமையானது அன்று என்ற உண்மை உணர்ந்து அவா அற்று வாழும் ஒரு பெரும் வாழ்க்கையாகிய உள்ளத் துறவு உடைய துறவறமாம் இன்ப நிலை வாழ்க்கையில் முடிதலை, நாம் இந்நூலில் பரக்கக் காணலாம்.

ஒரு விதையானது முளையாய், தளிராய், பின் மலராய், காயாய், கனியாய் வளர்ந்த பின் பயன் தருவது போலவே, ஒரு மனிதன் குழந்தையாய் முளைத்து, இளமையில் தளிர்த்து, இல்வாழ்க்கையில் மலர்ந்து, விருந்தோம்பல் முதலிய கூட்டுறவு வாழ்க்கையில் காய்த்து, முடிவாக அவா அற்ற ஐம்புலன் வென்ற கனிந்த உள்ளத் துறவு பூண்ட பிறர் நலம் பேணும் பெருவாழ்க்கையில் பயன்படுகிறான்; தானும் பிறவியின் பயனையெய்துகிறான் என்ற இயற்கை முறையை ஆசிரியப் பெருந்தகை கூறியபடியே அறத்துப் பாலைத் துருவி நாம் பயனெய்த வேண்டும்.

இந்த முறையில் தொடக்கம் காணும்போது அறத்துப்பாலை நோக்குவோமானால், 'இல்வாழ்க்கை' என்ற தலைப்பு முன் நிற்கக் காண்கிறோம். இல்வாழ்க்கை, ஆண் மகன், தன் வாழ்வை நலம் பெற நடத்தத் தனித்து முடியாமையின் பெண்ணின் நல்லாளைச் சேர்த்துக்கொண்டு நல்வாழ்வு தொடங்குகிறான்; அத்தொடக்கமே இல்வாழ்க்கை என்ற தலைப்பில் ஆசிரியரால் சிறப்பித்து ஓதப்படுகிறது.

இவ்வாறே பெண்ணின் நல்லாளும் தன் வாழ்க்கைத் தொடக்கத்தைத் தனித்து நடத்த இயலாது

ஆண் மகனைத் துணையாகக் கொண்டு நல்வாழ்க்கை தொடங்குகிறாள். அதனையே பெண்ணின்பால் வைத்து 'வாழ்க்கைத் துணை நலம்' என்ற தலைப்பில் ஆசிரியரால் விதந்து ஓதப்படுகிறது.

இவ்வாறு ஆணும் பெண்ணும் நல்வாழ்வு தொடங்கிக் கூட்டுறவால் பெற்ற பெரும் பயனாக, இன்ப ஊற்றாக, உலக வளர்ச்சிக்கென்று முதன் முதலாக அடைவது, மக்கட்பேறு. அவர்கள் பெற்ற பெரும் பயனும் நன்மக்களைப் போற்றும் கடப்பாட்டின் திறனையும், அம்மக்களால் அவர்கள் அடையும் இன்பத்தையும் ஆசிரியர் மிகப் போற்றிக் கூறி அதனால் அவர்கள் உள்ளம் மலர்ந்து சமுதாயத் தொண்டை மேற்கொள்வர் என்று முதலாவதாக விருந்தோம்பல் எழுகிறது. விருந்தோம்பலாவது, தன்னை நாடிவரும், தனக்குத் தொடர்பில்லாத புதியவரை, மலர்ந்த உள்ளத்தோடு, இனிய சொல் கூறி, உணவு கொடுத்து, உபசரித்தல். இதனால், அன்பின் பெருக்கே புதியவரைப் போற்றும் கடப்பாட்டை வளர்க்கும் என்ற திண்ணிய கருத்தினை ஆசிரியர் செவ்வனே உணர்த்துகிறார். அதன் பிறகு, வாழ்க்கையில், அறியாமையால் வரும் குற்றங்களையும், அறிவுடைமையால் வரும் நன்மைகளையும் பகுத்து உணர்ந்து, குற்றங்களை விலக்கி, நன்மைகளைச் செய்து, இருவரும் (ஆண்—பெண்) ஓருயிரும் ஈருடலும் போல அவன் அறிவு, வீரம் இவளிடமும், இவள் அன்பு இரக்கம் அவனிடமும், மாறி மாறிப் புகுந்து, பின், இருவரும், எல்லாக் குணங்களும் உடையராய், பிறவியின் பெரும் பயனாய அவா அற்ற நிலையினை எய்த வேண்டும் என்று முடிவு கூறுவர். இங்ஙனமே, நல்லாசிரியராம் தொல்காப்பியனாரும், 'காமஞ் சான்ற கடைக் கோட் காலை' என்று தொடங்கி, 'சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே' என்று முடித்துக் காட்டியிருப்பதும் நமக்கு விளக்கம் கொடுக்கிறது. ஆகவே, வள்ளுவனார் காட்டிய வழியே, ஆண்—பெண்

இருபாலார்க்கும் உரிய தனித் தனிப் பண்புகளை உணர்ந்து, அவர்கள் கூடி வாழும் பொழுது மலரும் சிறந்த வாழ்கை நலனையும் அறிந்து, வாழ்க்கையின் இடையில் அறியாமையால் படும் குற்றங்களில் அழுந்தி விடாது எழுந்து, நல்லொழுக்கந் தலை நின்று பிறவிப் பயனை எய்தவேண்டும் என்பதே நம்மனோர்க்கு இதுபோது வேண்டப்படுவது ஒன்றாகும்.

திருவள்ளுவனார் இயற்றிய திருக்குறளை இரண்டாயிரம் ஆண்டுகளாகப் புலவர் பெருமக்களும், சமுதாயத் தலைவர்களும், பிறரும் போற்றிப் பயன் பெறலாயினர். எனினும், அந்நூலை எல்லா வழிகளிலும் பயன்படும் வகையில், முறை பிறழாமலும், ஆசிரியர் எண்ணத்துக்கு மாறுபடாமலும், ஒழுக்கமும் அறமும் சிதையாமலும், மொழி வழக்குக்கு முரண்படாமலும் எடுத்தாள வேண்டும். மேலைநாட்டினர் செகப்பிரியர் செய்த நாடகங்களை எத்தனை எத்தனை துறையில் எழுதித் தாங்களும் அனுபவித்துப் பிற நாட்டாரையும் அனுபவிக்க வைக்கிறார்களோ, அதுபோல, நம் திருக்குறளும் பலப்பல புதிய முறைகளில், புதிய புதிய எண்ணங்களை எழுப்புவனவாய், ஆனால், மொழி வரம்பு இகவாமலும், ஆசிரியர் கருத்துக்கு முரண்படாமலும் வெளியீடுகள் வெளிவரவேண்டும். அதுவே, இதுபோது மொழிக்கும் தமிழர் சமுதாயத்திற்கும் செய்யும் தொண்டாகும் என்று கருதுகிறேன். ஆகையால், இந்தச்சிறு நூலில் திருக்குறளின் அறத்துப்பாலை, ஆண்-பெண் இரு பிரிவாகிய மனித சமுதாயம், இல்லறமென்னும் நல்லறமியற்ற ஒன்றுகூடி, உலகில் இன்பமடைந்து, தீயன விலக்கி நல்லன செய்து பிறர் நலம் பேணும் பெருவாழ் வெய்தும் பிறவிப்பயனை யடையும் வழியினைக் கூறுவதாகக் காட்டுவதும், இதுவே திருவள்ளுவர் மனித சமுதாயத்துக்கு அளித்த அறக்கூறும் என்பதுமே என் உள்ளக் கிடக்கை. அவ்வழியே நின்று, முதலாவதாக ஆணி

யல்பை இல்வாழ்க்கை என்ற தலைப்பில், வள்ளுவர் கண்டவாறே காண்போம்.

## ஆண்

ஆண் மகன் ஆற்றலுடையவன்; ஆற்றலால் தான் பிறர்க்குத் துணையாவான். தன்னின் மெலியார்க்கு உதவி செய்வது இரக்க உள்ளத்தால்; தன்னிற் பெரியார்க்கு உதவி செய்வது கடமை யுணர்ந்து என்பதனை நாமறிதல் வேண்டும். மனிதன், இளமை வாழ்வு, பருவநிலை, முதுநிலை என்ற மூன்று பிரிவுடைய வாழ்க்கையை இயற்கையாகப் பெறுகிறான். அங்ஙனம் பெறுங்கால், இளையானுக்கு உதவல் இரக்கத்தாலும், முதியானுக்கும் துறவிக்கும் உதவல் கடமையுணர்ந்தும் செய்வதாகும். ஈண்டு ஆசிரியர் இல்வாழ்க்கை மேற்கொள்ளும் ஆண்மகன், இரக்கத்தையும் கடமையையும் நிறைவேற்றும் ஆற்றலுடையன் என்பதை உணர்த்தவே, இல்லில் மனைவியோடு வாழ்பவன் இளைஞர், முதியர், துறவி என்ற மூன்று நிலையில் உள்ள மக்கட் சமுதாயத்திற்கு அவர்களுடைய வாழ்க்கைக்குத் துணையாக உள்ளவன் என்பதாக,

> "இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
> நல்லாற்றின் நின்ற துணை"

என்றருளுகிறார்.

இரக்கத்தால், இளைஞரை மட்டுமன்றிப் பற்றுக்கோடின்றித் துறத்தப்பட்டவர்க்கும், உலக இன்பங்களை அனுபவிக்க முடியாதவர்களுக்கும், இறந்தவர்கட்கும் உதவி செய்யும் ஆற்றல் அம்மனையாளோடு கூடி வாழும் இல்லறத்தானுக்கே உண்டு என்றும் அமைக்கிறார்.

> "துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
> இல்வாழ்வான் என்பான் துணை"

என்பது குறள்.

இங்ஙனம் இரக்கம் மேற்கொண்டு ஒழுகும் நாளில் கடமை நிறைவேற்றும் பண்பும் அவன் ஆற்றலுக்கு ஏற்றது என்று அறியவேண்டும். அவன் கடமை ஐந்தென விரித்து விளக்குவார். அவை, தென்புலத்தாரை, தெய்வத்தை, விருந்தினரை, சுற்றத்தாரை, தன்னை என்ற ஐந்திடங்களில், கடமை செலுத்தும் தகுதியுடையனாய் இல்வாழ்வான் வாழவேண்டும் என்று வற்புறுத்துகிறார் வள்ளுவப் பெருந்தகை.

''தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை.''

இந்தத் திருக்குறளில் தலை என்ற சொல்லால், அவனது முதன்மையான கடமை என்பதனையும், தான் என்ற சொல்லால், கடமையை நிறைவேற்றவே தன்னைப் பாதுகாத்துக் கொள்வதும் கடமையாகிறது என்பதனையும் வலியுறுத்தும் அழகைக் காணலாம்.

இப்படியாக இரக்கமும் கடமையும் உடையவனாய் நல்வாழ்வு வாழுங்கால், அறியாமையால் இடர்ப்பாடுற்றபொழுது குற்றங்கள் செய்து, பழியடைந்து பாழ்படுவான். ஆகையால், குற்றங்களை நீக்கிப் பழி வாராது, கடமை மேற்கொண்டு, இரக்கத்தோடு மேலே கண்டபடி பலர்க்கும் பங்கிட்டுக் கொடுத்து வாழ்வானாகில், அவன் வாழ்வு என்றும் இடர்ப்படாது, நீண்டு நடந்து, நல்வாழ்வாக அமையும் என்பதனை,

''பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் இல்வாழ்க்கை
வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல்''

என்றருளி விளக்குகிறார்.

இப்படி வாழ்வானது பண்பாடு அன்பில் அமைகிறது. அன்பின் பயனாய்ச் செயலாக அறத்தில் மலர்கிறது. எனவே இல்வாழ்வான் பண்பு, அதாவது குணம் அன்பு. இல்வாழ்வான் பயன் அதாவது அன்பின் செயல் அறம் என்றறிதல் வேண்டும்; அற

மாவது பிறர்நலம் பேணி உதவும் செயல் என்றே அறிய வைக்க,

*''அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை*
*பண்பும் பயனும் அது''*

என்ற அருங்குறள் எழுந்தது.

மேலே கூறப்பட்ட இயல்பான அன்பும், அதன் செயலாம் அறமும் பெற்று ஆணும் பெண்ணும் கூடி இயற்றும் இல்லற வாழ்க்கையில் ஆண்மகன் அறவாழ்வில் குறையாது வாழ்வான் ஆகில் அவன் பிற வழிகளில் தன் வாழ்க்கையைத் திருப்பவேண்டிய நிலையே ஏற்படாது. அந்த இயல்பான இல்வாழ்க்கையானது, மனித சமுதாயத்தில் தலையான உயர்ந்த வாழ்க்கையாகக் காட்சியளிக்கும். துறவறத்தில் நின்று பணியாற்றும் தவஞ்செய்வாரினும் சிறந்த தகுதியும் பெருமையுடையதாக அமையும். அதனால்தான், அறம் என்றாலே, இல்லற வாழ்க்கையையே குறிப்பதாக அமைந்தது. துறவறமோ வெனில், பிறர் பழி கூறாமல் அமைந்தால்தான் பெருமை பெறும் என்று ஆசிரியர்,

*''அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்*
*பிறன்பழிப்ப தில்லாயின் நன்று''*

என்று கூறுகிறார்.

இங்ஙனம் ஆசிரியர் கூறியபடி, உலகில் இயற்கையாக எப்படி ஆணும் பெண்ணும் கூடி வாழவேண்டுமோ, எப்படி அன்பைப் பெருக்கிக் கொள்ள வேண்டுமோ, எப்படி அறங்களைச் செய்யவேண்டுமோ, அப்படி வழுவாது ஒருவன் வாழ்வானாகில், அவனை இவ்வுலகத்திலேயே தெய்வநிலை பெற்றவனாக மக்கள் போற்றுவார்கள். அவன் பிறவியில் அடையவேண்டிய நற்பயனை அடைந்தவன் ஆவான் என்று ஆணியல்பு

வாழ்க்கை முறையும் கூறி ஆசிரியர் இல்வாழ்க்கையை முடிக்கிறார்.

''வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.''

# பெண்

இங்ஙனம் வாழக் கருதும் ஓர் ஆண்மகன், தன் வாழ்க்கையில் அன்பைப் பெருக்கிக் கொள்ளவும், அறத்தைச் செய்யவும், இன்ப நலம் துய்க்கவும், இயற்கையாகவே, ஒரு துணை வேண்டி நிற்கிறான். அத்துணை, வேறொரு ஆணாக இருக்க முடியாது. ஆகையால், தன் நலத்துக்கும், செயலுக்கும் உதவி செய்ய முறைப்படி தகுதி வாய்ந்த பெண்ணின் நல்லாள் ஒருத்தியை மணந்து கொள்ளுகிறான். அவள் எப்படி இருக்க வேண்டும் என்பது, இனிவரும் வாழ்க்கைத் துணை நலம் என்ற தலைப்பில் விரிக்கிறார் ஆசிரியர்.

இல்லறத்துக்கு வேண்டிய பண்பு, அன்பு என்று முன்னே கூறப்பட்டது. அன்பைப் பெருக்கிக் கொள்ளவே, இல்லறம் மேற்கொள்ளப்படுகிறது என்றதும் மேலே கூறப்பட்டது. ஆகையால் ஒரு பெண், ஒரு மகனுக்கு மனைவியாக அமையும் போது, இல்லறப் பண்பாய அன்பு நிறைந்தவளாய் அமையவேண்டும். அன்பு நிறைவோடு, தன் நாயகன் செய்யும் செயலில் இடையூறு உண்டாகாதவாறு பாதுகாக்கும் தகுதியும் உடையளாய் இருக்க வேண்டும். அன்பின் மிகுதியாலோ, அளவு அறியாமையாலோ, நாயகனுடைய வருவாய்க்குத் தக்க வாழ்வு நடத்த முடியாமற் போவாளாகில், அவள் செயலால், நாயகனுடைய வாழ்க்கை இடர்ப்படும். ஆகையால், தன்னை மணந்த நாயகனின் ஆற்றலுக்கு வருவாய்க்குத் தக வாழ்க்கை நடத்தும் தகுதியும் அவள்மாட்டு அமையவேண்டும்.

"மனைத்தக்க மாண்புடைய ளாகித் தற்கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை."

ஒரு தலைவன் எத்துணை வருவாயும், எத்தனை செல்வாக்கும், தகுதியும் உடையவனாய் இருப்பினும், தன்னை நோக்கி வரும் ஆதுலர், இரவலர், சுற்றத்தார், விருந்தினர், பெரியர் என்ற இவர்களிடத்தில், தன் மனைவி, அன்பு என்ற இல்லறப் பண்பைக் காட்டாளாயின், அவன் வாழ்வும் பிறவும் என்னவது? பயனின்றிப்போகும் அல்லவா! எனவே, இல்லறம் நன்கு நடைபெற வேண்டுமானால், மனையாள் அன்பு என்ற பண்பாடு நிறைந்திருக்க வேண்டும். அவளே, இல்வாழ்க்கைத் துணையாவாள் என்பதை,

"மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல்"

என்றருளுகிறார். இதனால் பெண்ணியல்பு அன்பால் நிறைந்திருப்பது என்பதனை நாமறிகிறோம்.

ஓர்கால் நாயகன், ஆற்றல் குறைந்து, வருவாய் இன்றி இடர்ப்படுமாயினும், மனைவி அன்பால் நிறைந்து, பண்பிற் குறையா திருப்பாளாயின், அவர்களை நோக்கி வரும் அனைவரும், அவளுடைய பண்பாட்டினைப் போற்றி மகிழ்வார். அதனால் தன் தலைவனும், அவள் குண நிறைவால் இல்லறம் இனிது நடத்தலை அறிந்து மகிழ்வான். இதனையே ஆசிரியர்,

"இல்லதுஎன் இல்லவள் மாண்பானால் உள்ளதுஎன்
இல்லவள் மாணாக் கடை"

என்று மறுபடியும் வற்புறுத்துகிறார்.

அன்பின் சிறப்பால் நிறைந்த பெண் ஒருத்தி, தன் தலைவன் கொணரும் பொருள் அளவிற்குச் செலவு செய்து, அதனால் மகிழும் சிறப்புடைய வாழ்க்கையே உயர்ந்த வாழ்க்கை. எவ்வளவுதான் செல்வம் பெறினும், தலைவன்மேல் குறை சொல்லி வாழும் பெண்

களே உலகில் மிக மிகப் பலர். போதும் என்ற மனமும், தலைவன் வருவாய்க்கு ஏற்ற வாழ்க்கையும், திட்பமும், அதற்கேற்ற மன நிறைவுமே கற்பு என்ற பெருமை யாகும். முதலில் அன்பு மீதூறி, காதலால் தனக்குத் துணைவனாகப் பெற்ற தலைவனை, வாழ்க்கை மேற் கொண்டபோது, இடர்ப்பட்டால் உள்ளம் மாறுபடாமல், தானும் அவனோடு உடனிருந்து, துய்த்து, மன உறுதியோடு அறவாழ்க்கையால் — அன்பால் — நல் வாழ்வு நடத்துவதே கற்பாகும். அத்தகைய கற்புடை யாள் துணையால்தான் வாழ்க்கை நலம் பெறும். கற்பு என்பது, தான் மணந்துகொண்ட நாயகனது, கூட் டுறவு வாழ்க்கையால் அடையும் அன்பும் அறனுமே இன்ப வாழ்க்கையாகும் என்ற பெண்ணின் மன நிறைந்த உறுதியே ஆகும். அதனை,

> '' பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
> திண்மை யுண்டாகப் பெறின் ''

என்று ஆசிரியர் கூறுகிறார்.

அத்தகைய மன நிறைவு பெற்ற பெண்ணின் தக் காளுக்கு வேறு நினைவே தோன்றாது. வாழ்க்கைச் சகடம் சரிவர நடக்கவே துணைவனோடு ஒன்றி வாழ் வாள். அவள் தெய்வத்தையும் தொழும் நினைவு பெறாள். கடமையை நிறைவேற்றுவாள். அவளை உலகம் பெரியள் எனப் போற்றும். அவள் கருத்துப்படி உலகம் நடைபெறும். அதனைத்தான் வள்ளுவப் பெருந்தகை,

> "தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
> பெய்யெனப் பெய்யும் மழை ''

என்று கூறிச் சிறப்பித்தார்.

தன்னைப் பாதுகாத்து, தன்னை மணந்த நாயகனைப் பாதுகாக்கும் தனிச் சிறப்புடைய கற்புடையாளே பெண் ணிற் பெரியள். மன நிறைவு என்னும் பாதுகாவலே

வாழ்க்கையில் பெண்ணுக்குப் பெரிய பாதுகாவல். மனக் குறையுடைய பெண்ணுக்கு எந்த வேறு பாதுகாவலும் அவள் வாழ்வைச் சீர்பெறச் செய்யாது. அத்தகைய சீர் பட்ட நிறை மனமுடையாளை மணந்த நாயகன் வாழ்வே உலகில் சிறப்படையும்.

கற்பென்ற திண்மைநிலை பெருத பெண்ணைப் பெற்ருனது வாழ்க்கை பிறரால் (பகைவரால்) இகழப் படும்; அது பெரும் துன்ப இருப்பிடமாய்விடும். கடமை செய்ய முடியாது போய்விடும் என்ற அருங்கருத்தை,

> " புகழ்புரிந்த இல்லிலோர்க்கு இல்லை, இகழ்வார்முன்
> ஏறுபோற் பீடு நடை "

என்று கூறுவதால் அறிகிருேம்.

நன்மனையாளோடு, நல்லறம் பூண்ட இல்லற வாழ்க்கையைப் பெற்ருனுக்கு, என்றும் இன்பவாழ்க்கை நடக்கிறது. அந்த வாழ்க்கை மங்கல வாழ்க்கையாக எல்லாராலும் போற்றப்படுகின்றது. அத்தகைய மங்கல வாழ்க்கையின் நல்ல விளக்கமாக—குலக்கொழுந்தாக —அவர்களுடைய இன்ப வாழ்வை உலகுக்கு எடுத்துக் காட்டும் நல்ல அணிகலமாம் மணிவிளக்காக—நன் மகவு பிறக்கிறது. அதுவே அவ்விருவருடைய வாழ்க் கையையும் இன்பம் பெருகச் செய்கிறது; அன்பை வளர்க்கிறது; மேலும் மேலும் அற வாழ்க்கையை நடத்தத் தூண்டுகிறது.

> " மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
> நன்கலம் நன்மக்கட் பேறு."

## புதல்வரைப் போற்றல்

மனிதராகப் பிறந்தவர்கள் அடையக் கருதும் பேறு கள் பல. அவற்றுள் தம்மைப் பெருமைப்படுத்தி, நற் புகழை வளர்த்து, நினைக்குந்தோறும் இன்பத்தை உண்டாக்கி, தமக்குப் பின்னும் இவ்வுலகில் நிலைத்து

நிற்கக்கூடிய பேறு ஒன்று உண்டு என்றால் அது நன் மக்கட்பேறு ஒன்றுதான்.

*"பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த
மக்கட்பேறு அல்ல பிற."*

தாய் தந்தையர்களான பெற்றோரின் நல்வாழ்வைக் கண்டு அதனடியில் மலரும் குற்றமற்ற நல்வாழ்வுடைய மக்களைப் பெற்றான் ஒருவனுக்கு அடுத்துவரும் ஏழு பிறப்புகளிலும் (தலைமுறையிலும்) அவனுக்குப் புகழ் வளருமே அன்றிப் பழிபட்ட சொல் ஒருகாலும் உண்டாகாது.

*"எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்."*

அற்ப வாழ்நாளையும், பசி பிணி மூப்பும் உடைய மனிதன் தன் வாழ்நாளில் தனக்குப் பின் தன்னைப் பாதுகாக்கப் பொருளைத் தேடுகிறான். அப்பொருளால் அவன் பெருமை பெறலாம், இன்பமடையலாம், புகழ் பெறலாம் என்றெல்லாம் மனக்கோட்டை கட்டுகிறான். ஆனால் செல்வம் அவன்மாட்டு நிற்பதில்லை. அவனால், பெருமை அடையவும் முடியவில்லை. இன்பத்துக்கு மாறாகத் துன்பம் அடைகிறான். ஆனால், நன்மகவைப் பெறுவானானால் மேற்கூறிய அத்தனையும் பெறுகிறான். மகன் தன்னைப் போற்றுவதேயன்றிப் பிறரும் போற்றுவர். ஆகையால், உண்மையாக ஒருவனுக்கு நல்ல மகவுதான் அழியாத பெரும் பொருளாகும். பிற அவர்களுடைய பொருளோ எனின் அப்பொருள், அவரவர்களுடைய முயற்சியின் அளவாக வருவது.

*"தம்பொருள் என்பதம் மக்கள் அவர்பொருள்
தம்தம் வினையான் வரும்."*

அத்தகைய நன் மகவால் பெற்றோர் அடையும் இன்பத்துக்கு ஓர் அளவே இல்லை. அஃது, இருவகையின்பம்: ஒன்று, குழந்தைப் பருவத்தில் பெறும் இன்பம். மற்றொன்று, நல்ல மனிதனைத் தன்னைப்போல்

வாழ்க்கை நடத்தும்போது கண்டு கேட்டு அடையும் இன்பம் என்பன. குழந்தைப் பருவத்தில் தாயும் தந்தையுமாக உடனிருந்து உணவு ஊட்டி வளர்க்கும் போது அக்குழந்தை இட்டுந்தொட்டும், நெய்யுடை அடிசிலைச் சிறுகையால் பிசைந்த கூழுணவு அப்பெற்றோருக்கு அமிழ்தினும் மிக மிக இனிக்கும் உணவாக அமைகிறது. அக்குழந்தை தொட்ட உணவு உயிர் வளர்க்கும் நல்ல அமுதாகச் சுவைக்கிறது. அதனினும் இனிய உணவு இல்லை.

''அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ்.''

அந்த அருமருந்தன்ன குழந்தையின் உடலைப் பெற்றோர் கட்டித் தழுவினும், அந்தக் குழந்தையே, தானே விரும்பி ஓடிவந்து பெற்றோர் உடல்மேல் படினும், உடல் குளிர்ந்து, உளம் குளிர்ந்து, உயிரும் தளிர்க்கும் இன்பம் உண்டாகும். அக்குழந்தையின் பொருள் விளங்காத அம்மா, அப்பா என்ற அருஞ் சொல்லும், செவிக்குத் தெவிட்டாத இன்பத்தை வாரிக் கொடுக்கும்.

''மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு.''

மொழிக்குக் காரணமல்லாது உண்டாகும் ஓசை, இன்பத்தை யுண்டாக்கி, உணர்ச்சியை எழுப்புமானால் அதனை இசை யென்கிறோம். தமிழில் இசை முதன் முதலில், மூங்கிலில் வண்டு துளைத்த துளை வழியாகக் காற்று நுழைய, அதனிடை எழுந்த இனிய வோசையை உண்டு களித்துப் பின் அம்மூங்கில் துளை யில் தாமும் ஊதி யின்பமடைந்தனர். அதன் பின் யாழ் எழுந்தது. அதனால், குழலும் யாழும் இசைக் கருவிகளில் மிகப் பழமையானவை என்று அறிகிறோம். இன்றும் குழலிசையும் யாழிசையும், பிற இசைகளை விட இயற்கை யின்பம் அதிகம் பெற்றிருப்

பதை நாமறிகிறோம். அந்தக் குழலிசையும் யாழிசையும் கூட, தம் குழந்தைகளின் பொருள் விளங்காத இனிய குதலைச் சொல்லால் வரும் இன்பத்துக்கு இணையாகாது.

*''குழலினிது யாழினிது என்பதம் மக்கள்*
*மழலைச்சொல் கேளா தவர்.''*

இப்படியாகப் பெற்றோர் குழந்தையின்பத்தைக் கண்டும் இன்பமடைகின்றனர். அவர்கள் தொடத் தாமும் தொட்டும் இன்பமடைகின்றனர். அக்குழந்தைப் பேச்சைக் கேட்டும் இன்பமடைகின்றனர். சுருங்கச் சொன்னால் காதலர் ஆணும் பெண்ணும் ஆகிய இருவரும், ஐம்புலனும் ஆரத்துய்க்கும் காதலின்பத்தின் விளைவாகப் பெற்ற பெரும் பேறாகிய குழந்தையினிடம், தனித் தனியாகவும், தாங்கள் இருவரும் கூடியும் பலர் பார்த்து மகிழத் தாமும் மகிழ்ந்து இன்பமடைகின்றனர். அத்தகைய குழந்தையை எப்படி வளர்க்க வேண்டும்? அதனை ஆசிரியர் கூறும் முறையறிவோம்.

குதலைச் சொல் நிரம்பிய, பொருள் விளங்கப் பேசும் நிலையினைக் குழந்தை யடைவானாயின், அவனுக்கு அறிவை வளர்க்க வேண்டிய பொறுப்பு தந்தையுடையதாகும். அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை முதலிய நல்ல குணங்களை வளர்க்க வேண்டியது தாயுடைய கடமையாகும். ஆகவே, தந்தையானவன் அக்குழந்தையைக் கல்வியில் தேர்ச்சியுடையவனாய், நல்லறிவு நிரம்பப் பெற்றவனாய் ஆக்க வேண்டும். அறிவுடையார் நடுவில், அவனும் ஓர் தலைசிறந்த அறிஞன் என்று மதிக்கத் தக்க அளவிற்குக் கல்வியறிவை மகனுக்குக் கொடுக்கவேண்டும். தாயானவள் அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மையாம் நற்பண்புகள் நிறைந்தவனாய் வாழ வளரச் செய்யவேண்டும். அவனைக் கண்டோரும், அவன் செயலால் நன்மை அடைந்தோரும் அவன் அறிவைப்

புகழ்ந்தும், அவன் பண்பாட்டை விரும்பியும் போற்றுவதைக் கண்டும் கேட்டும் மகிழ்வதே நன்மகனைப் பெற்றதன் பயன் என்று ஆசிரியர்,

''தந்தை மகற்குஆற்றும் நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல்''

''தம்மில்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க்கு எல்லாம் இனிது''

''ஈன்ற பொழுதின் பெரிதுஉவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்''

என்ற மூன்று குறள்களால் அடுக்கிப் பெற்றோர் கடமையையும், அதனால் அம்மகன் உலகிற்குத் தம் பெற்றோரினும் பயன்படும் முறையையும், அதனால் பெற்றோர் அடையும் பயனையும் விளங்கக் கூறினார்.

இத்தகைய நன்மகனைப் பெற்றதால் உலகத்தார் எல்லாரும் இவனைப் பெறுவதற்கு இவன் பெற்றோர் என்ன தவம் செய்தனரோ என்று புகழ்ந்து பாராட்டுவர். அந்தப் புகழ் இவன் வாழ்நாளிலும் பின்னும் நிலைத்து நின்று, இல்லறப் பயனும் ஈகையினால் பெறும் புகழினும் சிறந்ததாய் விளங்கும். அஃது ஒன்றே, பெற்றோர்க்குப் போதுமான மகிழ்ச்சிக்குரிய செயலாம் என்று ஆசிரியர்,

''மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை
என்னோற்றான் கொல்எனும் சொல்''

என்று கூறி முடிக்கிறார். இதுவே இல்லற இன்பம் எனப்பட்டது.

இனி, இல்லறப் பண்பும், பயனும் பேசப் புகுவார். அதுதான் அறம் என ஆசிரியரால் சிறப்பித்து ஓதப் பெறும். அந்த அறம் ஆனது மூன்று வகையாகப் பிரித்து உணரும் தன்மையது. ஒன்று, மனத்தில் எழும் நினைவுகளில், தீமை நீக்கி, உயர்ந்தனவும் பிறர்க்கு நலம் பயப்பனவும் ஆன நல்ல நினைவுகளை நினைத்துப் பழகி, மனந்தூயனாதல். அதுவே நினைவு

அறம், மன அறம் என்று வகுத்துக் கூறப்படும். இரண்டு, சொல்லறம். அதாவது, மனத்தில் எழும் எண்ணங்களை வெளியிடும் கருவி சொல்லாகும். அச் சொல்லை, பொய் முதலிய குற்றம் கலவாது நீக்கி, இனிமை, வாய்மை முதலிய நல்லனவாகப் பிறர்க்குப் பயன்படும் வகையில் பேசுதல். இதனையே சொல் லறம் என்பர். மூன்றாவது, செயலறம். அதாவது, கொலை களவு முதலிய தீய செயல்கள் தன்னிடம் நிகழாது பாதுகாத்து, ஈதல் முதலாய நன்மைகளையே செய்து வாழ்தல் செயலறம் எனப்படும். இவ்வாறு மனம் மொழி மெய்களால் நிகழும் நினைவு, சொல், செயல்களில் தீமை விலக்கி நன்மையே நிகழ, ஒழுக்க முறைகளை ஆண்-பெண் இருபாலர்க்கும் ஒத்தவகை யில் விதிப்பனவும், விலக்குவனவுமே அறம் என்று கூறப்படுகிறது. ஆகவே, ஆசிரியர் கூறும் அறப் பாகுபாட்டினைச் சிறப்பாக, அறுவகையாகப் பிரித்துக் காண்போமாயின் மிக எளிதாக நாம் திருந்தி நல் வாழ்வு பெறத் துணை செய்யும். நினைவுகளில் நல்லன வும் தூயனவும் ஒன்று. விலக்கவேண்டிய வெஃகாமை, வெகுளாமை முதலியன இரண்டு. இவ்விரண்டு பிரி வும் விதி என்றும், விலக்கு என்றும் பெயர் பெற்று, மன அறம் என்ற தலைப்பில் நிகழும். அங்ஙனமே மொழியில் இனிமை முதலியன விதியறம், பொய்மை, புறங்கூறல் முதலியன விலக்கு. இவ்விரண்டும் சொல் லறம் என்ற தலைப்பில் நிகழும். மூன்றாவது செயல், ஈகை, ஒழுக்கம் முதலியன விதியறம். கூடா ஒழுக்கம், புலால் மறுத்தல், கொலை முதலியன விலக்கு. இவ் விரண்டும் செயலறம் என்ற தலைப்பில் நிகழும். இம் மூன்று நிலையும் முறையே நிகழுமாயின் அவனே மக் களில் தெய்வநிலை பெற்றவனாக வாழ்வான். அவனையே உலகம் என்றும் தெய்வமாக வணங்கும் என இல் வாழ்க்கையில் ஆசிரியரே, வையத்திலே நான் கூறப் போகும் அறத்தின் வழியாக வாழவேண்டிய முறைப்படி

வாழ்வானாயின் அவனை இந்த உலகம் தெய்வமாக நினைத்துப் போற்றி வணங்கும் என்றே முடித்துக் கூறியிருக்கிறார்.

''வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.''

இந்நிலையினைத்தான் ஜீவன் முக்த நிலை என்று கூறுவர் பிறர். இதனினும் அடையவேண்டிய சிறப்பும் செம்பொருளும் ஒன்றும் இல்லை. ஆகவே இம் முறையே அறப் பாகுபாட்டைக் கண்டு நம் வாழ்க்கையைப் பண்படச் செய்யவேண்டும்.

## மன அறம்

மனம் என்பது ஒரு அகக் கருவி. மனிதனை மனமே உயர்வையும் தாழ்வையும் அடையச் செய்கிறது. மனம் ஒருவன் வசப்படுமேல் அவன் பின்னை வருத்தும் பிறப்பில் துன்பங்களில் அழுந்திடான். மனம் ஒருவன் வசப்படாது ஓடுமேல் நாளும் பிறப்பில் துன்பங்களுள் அழுந்திடுவான். மனமானது ஐந்து புலன்களின் வழியாகச் சென்று அவாவைப் பெருக்கி, மனிதனுக்கு இன்ப துன்பங்களை விளைவிக்கிறது. மனத்தில் தீய நினைவுகள் எழுமானால், அதனால் சொல் தீயனாய், செயல் தீயனாய், அதனால் வரும் பலன்களாகிய துன்பங்களால் வருந்துவான். ஆகையால்தான் மனத்தைச் சான்றோர் குரங்கென்று கூறுவர். ஒருகணம் கூட மனம் சும்மா இராது. நல்ல நினைவுகளை எழுப்பவும் செய்யாது. பள்ளம் நோக்கி ஓடும் தண்ணீர் போல, தீய நினைவுகளையே பற்றிப் பற்றி எழுப்பும். ஆகையால், முன்னதாக மனத்தின்கண் எழுகின்ற தீய எண்ணங்களைக் களைய வேண்டும். அத் தீய எண்ணங்களைக் களைவதே மனந் தூயனாதல் என்றறிதல் வேண்டும். ஒரு நிலத்தைப்

பண்படுத்தலாவது, அந்நிலத்தில் உள்ள விதைகள் முளைக்காமல் தாமே முளைத்துள்ள முட் செடிகளைக் களைந்தெறிந்து உழுது, நீர்பாய்ச்சி, நல்ல விதைகள் முளைக்கப் பண்படுத்தலே பண்படுத்தலாகும். அது போலவே ஒரு மனிதன் பண்படலாவது, அவனது மனம் நல்லநினைவுகள் என்னும் விதை ஊன்றத் தக்க பண்பாட்டை அடையச் செய்யவேண்டும். முன்னாக, அம் மனத்தில் இயல்பாக எழும் தீய நினைவுகள் என்னும் முட்செடி கொடிகளைக் களைந்தெறிய வேண்டும். ஆகையால், தீய நினைவுகள் எவை என்றறிந்து அவற்றை முன்னாகக் களைந்து எறிய வழிகாட்டுவார் ஆசிரியர். அழுக்காறு, அவா, வெகுளி, வெஃகல், பிறனில் விழைதல் ஆகிய குற்றங் களைந்து, மனந் தூயனாக வேண்டும். இதனை ஆசிரியர் கூறும் முறைப்படி அறியவேண்டும்.

முதலாவதாக, அழுக்காறு என்பது, பிறர் செல்வம், சிறப்பு முதலியன கண்டு மனம் பொறாமை. அத் தீய நினைவு மனிதனை நல்ல நினைவுகள் உண்டாகாதபடி தடுத்துவிடும். ஆகையால், ஒரு மனிதன் நல்லொழுக்கம் கடைப்பிடிக்க வேண்டுமானால், அறத்தின் வழி நிற்க வேண்டுமானால் முதன் முதலில் தன்னுடைய மனத்தில் அழுக்காறு இல்லாத நிலையை உண்டாக்கிக்கொள்ள வேண்டும். பிறர் பெருமை கண்டு மகிழும் இயல்பைப் பெறவேண்டும். எரிச்சலை நீக்கவேண்டும். அதுவே ஒழுக்கத்தின் வழிநிற்க முதற்படியாகும்.

''ஒழுக்காறுக் கொள்க ஒருவன்தன் நெஞ்சத்து
அழுக்காறு இலாத இயல்பு.''

அறத்தையும், ஆக்கத்தையும் விரும்பாதவன்தான் பிறன் செல்வம் கண்டு பொறாமைப்படுவான். பொறாமை என்ற நினைவால் வரும் கேடுகளை அறிந்தவர் ஒருகாலும் பிறன் செல்வம் கண்டு அழுக்காறடை

யார். ஒருவனிடத்தில் தீய செயல்கள் காண்போமாஞல், அவன் பிறன் செல்வம் கண்டு பொருத அழுக்காறுடை யார் என்றறிந்து கொள்ளலாம். எவனொருவன் பிறன் செல்வம் சிறப்புக் கண்டு பொருமைப்படுகிருனே அவன் அழிவதேயன்றி அவனுடைய சுற்றத்தாரும் உடுக்க உடையும், உண்ண உணவும் இன்றி வருந்த நேரிடும்.

"கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும்."

பொருமையானது. ஒருவனுடைய செல்வத்தை யழித்து அவனைத் துன்பத்தில் ஆழும்படிச் செய்யும். அவனுக்கு ஒருகாலும் தான் இன்பமடைய வேண்டும் என்ற எண்ணம் உண்டாகாது. பிறர் செல்வம் கண்டு வயிறெரியும் துன்பமே அடைவான்.

"அழுக்காறு என ஒரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும்."

பொருமையுடையான் செல்வமுடையஞதலும், நல்ல நினைவுடையான் துன்பப்படுதலும் யாண்டாவது காணப்படுமாயின், அதனைக் கண்டு ஏமாந்து அழுக் காற்றில் விழுந்துவிடக்கூடாது. அதன் உண்மை யாது என்று ஆராய்ந்து தெளியவேண்டும். ஆஞல், உண்மையாக உலகில் பொருமை கொண்டார் பெருமை பெற்றதும் இல்லை. நல்ல நினைவுடையார் தாழ்வுற்ற தும் இல்லை. இதஞல் நாமறியவேண்டியது. பொருமை என்ற தீய நினைவை அறவே வெட்டி எறிவோமாஞல் அதனினும் சிறந்தமேன்மை ஒன்றும் இல்லை. அதுவே ஒழுக்கத்தின் உயர்ந்த சாதனம்.

"அழுக்கற்று அகன்ருரும் இல்லை அஃதிலார்
பெருக்கத்தில் தீர்ந்தாரும் இல்."

"விழுப்பேற்றின் அஃதொப்ப தில்லையார் மாட்டும்
அழுக்காற்றின் அன்மை பெறின்."

பொருமை என்ற பேய் நினைவுதான் பேராசை யாக மாறும். பிறன் முயற்சியால் பெற்ற செல்வம், சிறப்பு முதலியவற்றைக் கண்டு பொருதவன், தான் முயலாமலே அச் செல்வத்தையும் சிறப்பையும் பெற எண்ணுவான். ஆனால் முயற்சியும் வினைத் திட்பமும் உடையான் பெற்ற செல்வம்கொண்டு பெருமகிழ்ச்சி யடைவான்; பேரவா கொள்ளமாட்டான். அவாவானது, ஒருவனைத் துன்பப் பிறவியில் தள்ளி, இன்பம் என் பதையே இப்பிறவியில் தோன்றாதபடி செய்துவிடும். ஆகையால் பிறன் செல்வம் கண்டு வெஃகுதல் என்ற நினைவுக்கு இடந்தரலாகாது. நடுவுநிலை பிறழ்ந்து பிறன் பொருளைப் பேரவாவினால் விரும்பினால் தானும் அழிவான்; தன் குடியும் அழியும். அழியாத பழியும் நிற் கும்;

"நடுவின்றி நன்பொருள் வெஃகின் குடிபொன்றிக்
குற்றமும் ஆங்கே தரும்."

இதுபோது செல்வம் பெற்றால் நன்மையடைய லாம், சிறப்படையலாம் என்ற நினைவால் பிறன் பொருளை வஞ்சிக்கும் எண்ணம் எழலாகாது. உணவு, உடை முதலிய சிறிய உடலின்பங்களைப் பெறுவதற்காக, அறத்துக்கு மாறான, பிறன் பொருளை வஞ்சிக்கும் நினைவு எழுதல் கூடாது. நம்மிடத்தில் பொருளில் லையே என்ற எண்ணத்தால் பொருளிருக்கும் பிறனைக் கண்டு பொருமை கொள்ளலும், அவன் பொருளை வஞ் சித்துக்கவர நினைத்தலும் மிகவும் தீமை விளைக்கும். நுட்பமான பல நூல்களைக் கற்று அதனால் நுண்ணிய அறிவையும் பெற்றிருப்பினும் பிறன் பொருளை வெஃ கும் தீய நினைவு எழுமாயின் அவன் அறிவு பயனற்ற தாகவே முடியும். எவ்வுயிர்க்கும் இனியனாய் வாழ வேண்டும் என்று கருதும் அருளுடைமை பெறக் கரு தும் ஒருவன் பிறன் பொருளை வெஃகும் தீய நினைவு பெறுவானாயின் அவன் அருளுடையனாதல் ஒருகாலும் இல்லை.

"அருள்வெஃகி ஆற்றின்கண் நின்றார் பொருள் வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும்."

ஆகையால், பிறன் பொருளை வஞ்சித்துப் பெறும் தீயநினைவு வேண்டவே வேண்டாம். ஏன் எனின், அதன் பயன் விளையும்போது, மிகவும் கொடுமையான துன்ப விளைவுகளை உண்டாக்கிவிடும்.

"வேண்டற்க வெஃகியாம் ஆக்கம் விளைவயின்
மாண்டற்கு அரிதாம் பயன்."

நீ பிறன் பொருளை வெஃகாது உன் முயற்சியால் வாழக் கருதுவையாயின் உன்னை நோக்கி அனைத்து விதச் செல்வமும் தாமே வந்தடையும்.

"அறனறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்
திறனறிந்து ஆங்கே திரு."

ஆகையால், பிறன் பொருளை வெஃகுவானாயின் அழிந்து படுவான்; வாழ்க்கையில் இன்பம் பெறான் என்பது உறுதி. ஆனால் வெஃகாது தன் முயற்சியால் பெற்றது கொண்டு வாழக் கருதுவானாயின் அவனது ஆற்றலே சிறந்த ஆற்றலாகும்.

"இறலீனும் எண்ணாது வெஃகின் விறலீனும்
வேண்டாமை என்னும் செருக்கு."

பிறன் பொருள் கண்டு பொறாமையால் வெஃகும் தீய நினைவுடையான் அப்பொருளைத் தான் அடைய முடியாதபோது சினம் எழும். அந்தச் சினம் மனத்தை எரித்து, அறிவை மறைத்து வெளிக்கிளம்பி சொல்லில் கடுஞ் சொல்லாகவும், தீச் செயலாகவும் மாறும். ஆகையால், சினத்தில் விழுந்திடாது மனத்தைப் பண் படுத்த வேண்டும். சினம் எழுங்கால், தன்னின் மெலி யான் மேலும், தன்னை ஒத்தான் மேலும், தன்னிற் சிறந்தான் மேலும் சினம் தோன்றும். தன்னை ஒத் தான் மேலும், தன்னிற் சிறந்தான் மேலும் சினம் எழுமாயின், அதனால் எவன் கோபிக்கிறானோ அவ னுக்கே தீங்கு உண்டாகும். ஆனால் தன்னின் மெலி

யான் மேல் கோபம் எழுமாயின் அப்போதுதான் மெலியானுக்குத் தீங்கு உண்டாம். சினத்தை வாராது தடுப்பவன், தன்னின் மெலியான்மேல் சினம் உண்டாகாது தடுத்துக் காக்க வேண்டுமே தவிர, தன்னை ஒத்தான் மேலும், சிறந்தான் மேலும் காத்தல் சினம் காத்தல் ஆகாது. ஆகையால்தான், மெலியானைச் செல்லிடம் என்றும், ஒத்தானையும் பெரியானையும் அல்லிடம் என்றும் ஆசிரியர் கூறுகிறார். இதனால், ஒருவனுக்குப் பிறரைக் கெடுக்கும் ஆற்றல் இருந்தாலும் அவன் தன்னின் மெலியாரைச் சினந்து தீமை செய்து விடலாகாது என்பதை வலியுறுத்துகிறார். அதுவே, ஒழுக்கத்திற்கு முதலாவதாக வேண்டிய பண்பாடு என்றமைக்கிறார்.

''செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான் அல்லிடத்துக்
காக்கில்என் காவாக்கால் என்?''

சினம் செல்லாத இடமான ஒத்தவன் மேலும், சிறந்தான் மேலும், கோபம் எழுந்தால் அவனுக்கே தீங்கு நிகழும் என்பதை யறிகிறோம். ஆனால் மெலியான் மேல் நிகழ்வதால் என்ன தீங்கு என்று கருதாதே. மெலியான் மேல் எழுகின்ற கோபம் உன் உயர்வை அழித்து, இழிவை உண்டாக்கி, ஒழுக்கம் இலனாய்ச் செய்து துன்பத்தில் ஆழ்த்திவிடும். இவ்வளவு கொடுமைகளைச் செய்வது வேறொன்றும் இல்லை.

''செல்லா இடத்துச் சினம்தீது செல்லிடத்தும்
இல்லதனில் தீய பிற.''

ஆகையால் மேலே கூறப்பட்ட முத்திறத்தாரிடத்தும் சினம் உண்டானால் தீமை நிகழ்வதை நீ உண்மையாக உணர்வாயானால் யாரிடத்தும் சினம் உண்டாதலை மறந்தும் செய்யக் கடவாதே. இன்பம் அடைய வேண்டுமானால், துன்ப இருப்பிடமான சினத்திற்கு இடங்கொடாதே என்கிறார்.

*"மறத்தல் வெகுளியை யார்மாட்டும் தீய
பிறத்தல் அதனால் வரும்."*

நம்மிடத்திலேயே அகங்காரத்தால், அறிவின்மையால் தோன்றி நமக்கே பகையாய், நகையையும் மகிழ்ச்சியையும் கொன்றுவிடுவது சினம் என்பதை நாமறிய வேண்டும். ஆகையால், நம்மை நாமே காப்பாற்றிக் கொள்ள வேண்டுமானால், சினம் நம்மைப் பற்றாமல் பாதுகாத்துக்கொள்ள வேண்டும். அதுவே சிறந்த பாதுகாவலாகும். அது மாத்திரமன்று. அச்சினம் ஒரு நெருப்புக்குச் சமமானது. ஏன்? நெருப்பு ஒரு விறகைப் பற்றினால், அந்த விறகை அழித்துத் தானும் அழிவதுபோல, எவனிடம் சினம் தோன்றுமோ, அவனை அச்சினம், அழித்த பிறகுதான் மறையும் என்பதை நாமறிகிறோம். அந்நெருப்புக் கூட, பற்றின பொருளைத்தான் அழிக்கும். சினமென்னும் நெருப்போ எனில் பற்றினவனை அழிப்பதோடு அமையாது, அவனுக்குத் துணையாவாரையும் உடனழிக்கும் ஆற்றலுடையது. ஆகையால் நெருப்பினும் கொடியது சினம் என்றறிந்து, அதனைப் பரிகரித்தல் வேண்டும்.

*"சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும்
ஏமப் புணையைச் சுடும்."*

இவ்வளவும் அறிந்ததால் சினம் தீதென்ற முடிவுக்கு வருகிறோம். அத்தீய சினத்தை விடோமாயின் அழிவது உறுதி. ஆகையால், நெருப்பில் விழுதலான அத்தனை பெரிய துன்பம் வருமாயினும், அந்நெருப்பினும் கொடிய சினத்தில் விழுந்து போகலாகாது.

*"இணர்எரி தோய்வுஅன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று."*

எனவே, நமக்குப் பிறர் சினத்தால் தீங்கு செயினும் நாம் சினந்துவிடலாகாது. அங்ஙனம் சினவாது ஒருவன் தனக்குத் தீமை செய்த போதும் பொறுத்து

வாழ்வானுயின், அவன் நினைக்கும் எப்பொருளும் பகை வரிடமிருந்தும் பெறமுடியும் என்பதனை வள்ளுவர்,

''உள்ளிய எல்லாம் உடன்எய்தும் உள்ளத்தால்
உள்ளான் வெகுளி எனின்''

என்று கூறுகிருர்.

ஆகவே, சினத்தை நீக்கினுலேயே எப்பொருளையும் அடையலாம் என்றபோது சினந்து அழிவைத் தேடிக்கொள்ளலாகாது என்று கூறி முடிக்கிருர்.

இங்ஙனம் அழுக்காறு, வெஃகல், வெகுளலான முக்குற்றங்களையும் விலக்கினுல் அதுபோது, இன்ப நினைவுகள் தோன்றும். அப்போதும் பிறனுக்கு உரிமையாக - இன்ப நிலையமாக வாழும் பெண்ணின் நல்லாளை, மனத்தாலும் நினைத்தல் கூடாது. அங்ஙனம், மனத்தை இன்பத்தின் கண்ணும் கட்டுப்படுத்தலே, சிறந்த ஒழுக்கத்துக்கு விதையாகும். அதனுல்தான் ஒழுக்கம் என்ருலே, தன் மனையாளைத் தவிர வேறு பெண்களை விரும்பாத வாழ்வே ஒழுக்கம் என்று பிற்காலத்தில் உலக வழக்கில் வழங்கப்பட்டது. ஒருவன் எவ்வளவு நல்லனுயினும், அறஞ் செய்வானுயினும், பிறன் மனையாளை நயக்கும் தீய எண்ணம் இருந்துவிடுமாயின்' அவன் செயலும் சொல்லும் பயன்படா. எனவே, ஒழுக்கம் என்ற தலை சிறந்த அறத்திற்கு, பிறர் மனை நயவாமை என்ற உயர்ந்த மன அறமே விதையாக நிற்கிறது. ஆகையால்தான், விலக்குகளில் தலையான சிறந்த அறமாகப் பிறனில் விழையாமை நிற்கிறது.

இன்பத்தை யடைய வேண்டும் என்ற ஒரே எண்ணமுடையான், வாழ்க்கையின் குறிக்கோளையும், அறத்தையும் பொருளையும் நோக்கான். அற்ப இன்பமே பெரிதென மதிப்பான். அதனுல் அவனுக்கு வரும் தீமையும், இழுக்கும் அவனுக்குப் புலப்படா. எவனெருவன் அறத்தையும் பொருளையும் அடைய

வேண்டும் என்று கருதுகிருனே அவன் பிறனுக்கு உரியளாகிய பெண்ணை விரும்பி இன்ப நலம் துய்க்க எண்ணமாட்டான்.

"பிறன்பொருளாள் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்து
அறம்பொருள் கண்டார்கண் இல்."

உலகத்தில் மனிதனுகப் பிறந்தவன் மனத்தால் நல்லன அறிந்து தீயன விலக்கி வளர்ச்சியடைந்து உயர்வடைய வேண்டும். தாழ்வுக்கும் பலரும் வெறுப்ப தற்கும் காரணமான செயலாகிய பிறன்மனையாளை ஒரு வன் நயப்பானுஞல், அதுவே மறச் செயலுக்கு அடி வைப்பதாகும். அவனைப் போலப் பேதையர் ஒருவர் இருக்கமுடியாது. அவன் உண்மையான இன்பம் இன்னது என்பதை உணராதவன். ஆகையால், உயிரோடு வாழ்வானுயினும் இறந்தவனே ஆவன். அன்பு என்ற நற்குணம் அவனிடம் இன்மையால், உயிரற்ற பிண வாழ்க்கை நடத்துபவனே என்று அறிஞர் கருதுவர். பிறன்மனை கருதும் பேதை, வேறு எத்துணைச் சிறப்பு கள் உடையனுயினும், அவற்ருல் அவன் பெருமை யடையாது இச்சிறுமைக் குணத்தால் இகழவே படுவான். பிறன்மனையாளைத் தன்னிடம் உள்ள செல்வச் செருக்கால் பெற்று இன்புறலாம் என்று எளிதாக எண்ணு பவன் உலகம் உள்ள வரையிலும் அழியாத பழியையே பெறுகிருன்; இன்பம் பெறுவதில்லை.

"எளிதென இல்லிறப்பான் எய்தும் எஞ்ஞான்றும்
விளியாது நிற்கும் பழி."

பழி மட்டுமா? பலருடைய நட்பும் ஒழிந்து பகையாக மாறும். பகைமையால் பாவம் வளரும். தான் தீங்கு செய்வதால் தனக்குப் பிறர் தீங்கு செய்வார் என்று அஞ்சி நடுங்குவான். அவன் செய்யும் மறச் செயலால் உலகில் எஞ்சி நிற்பது பழியும் பாவமுமேயாம்.

"பகைபாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவாம் இல்லிறப்பான் கண்."

ஆகையால், இயல்பாக அறவழியில் இல்வாழ்க்கையை நடத்தவேண்டும் என்ற எண்ணமுடையான் பிறனில் வாழ்க்கைக்குத் துணையாக நிற்கும் பிறன்மனையாளை நயவாதவன்தான் என்பதை நாமறிதல் வேண்டும். இல்லற நலமாகிய இன்பமும், அறச் செயலும், அன்பும் வளர வேண்டுமானால் பிறர்க்குரியாளுடைய தோளை மறந்து நினையாத நல்வாழ்வு வளர வேண்டும். பிறன் மனையாளைத் தாயென்றும், உடன் பிறந்தாள் என்றுமே கருதவேண்டும். அங்ஙனம் கருதும் தூய எண்ணமே பேராண்மை என்னும் பேரறமாகும். அங்ஙனம் தூய எண்ணம் பெற்றவனே, தலையாய - உயிரினும் சிறந்த - ஒழுக்கத்திலும் தலைசிறந்தவனாவான்.

*" பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு*
*அறன்ஒன்றோ ஆன்ற ஒழுக்கு."*

இங்ஙனமாக அறத்திற் சிறந்ததும், ஆண்மைக்கு உயர்ந்ததும், ஒழுக்கத்தின் உயர்வும் ஆன பிறன் மனையாளை நயவாத நல்ல மனம் பெறலாகிய அறம் ஒன்றைக் கடைப்பிடித்து நடப்பானாயின் அவன் வேறு அறங்களைத் தேடாமலே அவனிடம் அவ்வறங்கள் வந்து தாமே அமையும். மனிதனுடைய அறியாமை என்னும் இருளால் இத்தகைய அழுக்காறு, வெஃகல், வெகுளல் பிறன்மனை நயத்தல் என்ற நால்வகைக் குற்றமும் மனத்தின்கண் நிகழ்வதை அறிவென்னும் கருவியால் களைந்தபொழுது மனம் தூய்மை யடைகிறது. அது தான் அனைத்துவித நல்ல நினைவுகள் விளைதற்குரிய, நன்னிலமாகும். அதனையே மிகச் சிறப்பாக,

*" மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்*
*ஆகுல நீர பிற."*

என்று வற்புறுத்திக் கூறினர்.

# நடு நிலை

மனக் குற்றம் களையாதபோது நல்ல நினைவுகள் தோன்றவே மாட்டா. குற்றம் களைந்த மனம் முன்னுக எவ்வாறு விளங்கும்? நல்ல தெளிவு பெற்ற தண்ணீர் போலவும், பளிங்கு போலவும், தராசின் நுனி போல வும் நிற்குமே, அதுதான் நடுவு நிலைமை என்பது. அந்நடுவு நிலைமை இது தக்கது, இது தகாதது என் றறிதற்குரிய மன நிலையாகும். ஒன்றனையும், முன் னுகப் பற்றினுலோ வெறுப்பினுலோ முடிவு செய்யாது, விருப்பு வெறுப்பு இல்லாமல் நின்று, எதனைச் செய் தால் தனக்கும் பிறர்க்கும் நன்மை தரும், எதனைச் செய்தால் தீமை விளையும் என்றறிதலே நடுவு நிலைமை யாகும். அதனுல், முன்னே மனத்தில் எழவேண்டிய அற நினைவு ஆகிய விதை யாதெனில், நடுவு நிலைமை என்ற தூய நிலையே. அதனை எங்ஙனம் அறிவது? ஆசிரியர் அதனைக் காட்டுமாறு காண்போம்.

விருப்பு வெறுப்பின்றிச் செய்யத் தகுவன இவை, தகாதன இவை என்றறிந்து அதன்படி ஒழுகும் தகுதி யாகிய நடுவு நிலைமை ஒருவனிடம் வாய்க்கப் பெறு மானுல் அஃதொன்றே நல்ல அறமாம்.

> ''தகுதி எனஒன்று நன்றே பகுதியால்
> பாற்பட்டு ஒழுகப் பெறின்.''

அங்ஙனம் நன்றமைந்தான் சிறுசெல்வம் சேமித் திருப்பானுயினும் அவனுக்கும், அவன் மக்களுக்கும் அச் செல்வமும் சிறப்பும் வழிவழிப் பெருமையையும் இன்பத்தையும் நல்கும். அழிந்து படாது; பயனின்றியும் போகாது. நடுவின்றி, ஒருவன் பெருஞ் செல்வத்தைப் பெற்றுனுயினும் அதனுல் அவனும் நன்மையடைய முடி யாது. அவன் வழி மக்களுக்கும் பயன்படாது. ஆகை யால், நடுவிகந்து பெறும் செல்வம் ஒருவனுக்கு எக் காரணத்தாலும் கூடாது. இதுகாலை உலகில், நடுவு

நிலை பிறழ்ந்து, மனநிலை மாறுபட்டு, நாட்டில் மறைவாகவும், அவாவினால் தீயன செய்தும் பொருளொன்றையே பெரிதெனக் கருதி அலைகிறார்களே அவர்கள், இந்த நடுவு நிலைமை என்ற தலைப்பில் ஆசிரியர் கூறும் அளவையாவது கற்பராயின் அவர்கள் வாழ்வு செப்பமடையும். நாடு நலம் பெறும். நன்றாக யார்மாட்டும் நடுவு நிலைமை பொருந்தும். அரசியல் செவ்வனே நடைபெறும். ஆகவே உலகில் நிகழும் கோளாறுகளுக்கெல்லாம் நடுநிலை இல்லா மனமே காரணம் என்பதை நாம் அறியப் பல்லாயிர ஆண்டுகட்கு முன்னரே ஆசிரியர் பொறித்துப் போயினமையை நாம் நன்குணர்ந்து நடக்க வேண்டும்.

*''நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை*
*அன்றே ஒழிய விடல்.''*

ஒருவன் பெறுகிற சிறப்பாலும், செல்வத்தாலும், பிறவற்றாலும் அவன் உயர்ந்தவன் ஆகமாட்டான். இதுபோது ஒருவன், வறுமையால் வாடலாம். உணவு உடையின்றித் துன்பமடையலாம். அது கண்டு அவன் தகவிலன் என முடிக்கப்படாது. அவனை அறிஞர்கள், அவனுக்குப் பிறகு குணநல மனநலங்களை வைத்துப் பாராட்டுவதாலும், அவன் வழிவந்த மக்கள் நலங்களைக் காணுவதாலுமே, தக்கான் தகவிலன் என்பதை நாமறிய வேண்டும்.

*''தக்கார் தகவிலர் என்பது அவரவர்*
*எச்சத்தாற் காணப் படும்.''*

எச்சம் என்பது, மிகுந்து நிற்பது என்ற பொருளையுடையது. வள்ளுவப் பெருந்தகை எச்சம் எனப் புகழையும் மகனையும் குறிப்பிடுவதைப் பிற இடங்களிலும் அறியலாம். ஒருவனுக்குத் தாழ்வும் உயர்வும், செல்வமும் நல்குரவும், இன்பமும் துன்பமும் இயல்பாக அமைந்தனவே. ஆனால், மனம் நடுவுநிலை பிறழ்வதும், பிறழ்ந்து அதனால் செல்வமோ உயர்வோ பெறலாம்

என்று கருதுவதும் அவனுக்குத் தாழ்வைத் தருமே யன்றி உயர்வைத் தராது. ஆகையால்தான் சான்றோர் நெஞ்சில் கோடாத நடுவுநிலையையே அணியாகப் போற்றிப் பாதுகாத்துப் பெருமை பெற்றனர்.

" கேடும் பெருக்கமும் இல்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க்கு அணி."

ஒரு மனிதன் எவ்வளவுதான் தாழ்ந்த நிலையில் இருப்பினும், தன் நெஞ்சில் நடுவு நிலைமை என்னும் பேரறம் பூண்டு ஒழுகுவானாயின், அவன் செல்வ மின்மை முதலியன கண்டு இழிவாகக் கருதாது அவன் உளப் பண்பாட்டைக் கண்டு சான்றோர் போற்றுவர். ஆகையால் தராசானது தன் இரு தட்டிலும் வைத் துள்ள பொருளின் உயர்வு தாழ்வு கருதாது, நிறை யளவை எவ்வாறு தன் முள் நுனியால் சமமாகத் தூக்கிக் காட்டுகிறதோ, அதுபோல, உலகின்கண் காணும் ஏற்றத் தாழ்வுகளைக் கண்டு மனம் விருப்பு வெறுப்புக் களில் சிக்கிவிடாமல், பொருளின் அளவை-மனிதனின் தகுதியை-நிறைவை அறிவெனும் தராசின் நுனியால் நுனித்து அறியவேண்டும். அந்த நிலையே நடுவு நிலை என்னும் நற்பண்பாகும். அஃதொன்றே மனிதனை மனப் பண்படுத்தும் மாசிலா மருந்தும் அணிகலமும் ஆகும்.

"சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால்
கோடாமை சான்றோர்க்கு அணி."

இவ்வாறு பொருள் தன்மை, மனிதத் தன்மை, செயல் தன்மை-இவற்றைப் பற்றின்றி நடுநிலை நின்று காண்பானுக்குத் தன் பொருளென்ற ஏற்றமோ, பிறர் பொருளென்ற புறக்கணிப்போ தோன்றுவதில்லை. பிறன் பொருளையும் தன் பொருள் போலவும், தன் பொருளைப் பிறன் பொருள் போலவுமே காண்பன். தானென்று, தன்மாட்டு நிகழும் குற்றத்தை மறைத் தலோ, பிறர் என்று பிறரிடம் காணும் குணங்களை

மறைத்தலோ, அவனிடம் உண்டாகாது. அவனே மனிதரில் மனப்பண்பட்ட சீரியன். அவனிடம் தோன்றும் உயர்குணங்களே மக்கள் சமுதாயத்தை வளர்க்கும் சிறந்த குணங்களாம். அவனிடம் நிகழவேண்டிய நல்ல நினைப்புகள் எவை என்பதனை அடக்காக இனிக் காண்போம்.

## அடக்கம்

அடக்கம், பொறை, செய்ந்நன்றியறிதல், ஒப்புரவறிதல், அன்புடைமை, அருளுடைமை என்ற அறுவகைப் பண்புகள் மனத்தின்கண் நல்ல நினைவுகளாய் அமையவேண்டும் என்று ஆசிரியர் கூறுகிருர். இந்த நிலையினை ஒவ்வொன்ருக விளக்கம் கூறின் விரியும். ஆகையால், அடக்கம் என்ற ஒன்று மனத்தில் எழுகின்ற உணர்ச்சிகளைச் செயலாற்றும் வரையும் காத்து நிற்றல். செயல் நிகழ்வதற்குமுன் செய்து விட்டவனைப் போலப் பேசவோ, பெருமிதம் காட்டவோ இல்லாமல் அடங்கிப் பணிவுடன் இருத்தல். இது ஒரு மனிதனுடைய மனத் தூய்மையையும், பணிவையும் எடுத்துக் காட்டும் பண்பாடு ஆகையால், எத்தனை நிறைவுகள் ஒருவனிடம் இருந்தாலும், பெருமிதம் கொள்ளாது அடங்கலே அடக்கம் எனப்படும். ஒரு நிலத்திற்குள், மறைத்து விதைக்கப்படுகிற விதை, நீரை ஏற்று, முளை கிளம்பி, நிலத்தின் மேல் எழுந்து, அதன் மேலும் வளர்கிறது. தெங்கு, பனை முதலியன ஆழமாய்ப் புதைக்கினும், மேற் கிளம்பி வான் வரையும் வளர்வதையும் காண்கிருேம். அதுபோலவே, நல்லபண்புகள் உடையான், அப்பண்புகளை அடக்கமாகிய மறைப்பால் மூடுவானுயின், அவன் பண்புகள் வானளாவ வளர்ந்து உயர்வு செய்யும். விதை பூமியின் மேலேயே கிடந்து விடுமாயின், அஃது முளையும் தோன்ருது பாழாவது

போலப் பண்புகள் உடையான் அடக்கம் இல்லையின், அவன் உலகுக்கும் பயன்படாது அழிவான்.

*" அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை*
*ஆரிருள் உய்த்து விடும்."*

ஆகையால், அடக்கம் என்ற உயர்வுதரும் பண்பையே பொருளைப் பாதுகாப்பது போலக் காப்பாற்ற வேண்டும். தன் நிலையினின்றும், ஒரு சிறிதும் மாறுபடாது, அடங்கி வாழ்வானது தோற்றம், மலையானது, இருந்த இடத்திலிருந்தே உயர்வினால், பல காததூரம் காட்சியளிப்பது போல, அவனது உயர்ந்த பண்பினால் மக்கள் சமுதாயத்திற்கு எடுத்துக்காட்டாக விளங்குவான்.

*" நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்*
*மலையினும் மாணப் பெரிது."*

நெல்லானது, பயிராய்த் தழைத்துக் கதிர் ஈனுகிறது. கதிரில் உள்ளீடாகிய அரிசியாம் மணியில்லாத போதும், பால் பிடிக்காதபோதும் தலைநிமிர்ந்து நிற்கிறது. ஆனால் பால் முற்றி, அரிசி மணி நிறைந்த போது, பயன்படும் நிலை நிறைந்தபோது சாய்ந்துவிடுகிறது. அதுபோல, செல்வம் முதலிய சிறப்புக்களும், கல்வி, முதலிய நலன்களும், பண்புகளும் இல்லைய காலத்தினும், செல்வமும், கல்வியும் பண்புகளும் நிறைந்தவனாய் உலகுக்குப் பயன் படும் நிலைமையுடையான் பணிவுடையனாக இருக்க வேண்டும். அப்போது தான் அச்செல்வமும் கல்வியும் பண்புகளும் அவனுக்கு உயர்வையும் இன்பத்தையும் நல்கும். அவன் உலகுக்கும் நன்மை செய்ய முடியும். செல்வமும் கல்வியும் பண்பும் பயன்பட்டன ஆகும்.

*" எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்*
*செல்வர்க்கே செல்வந் தகைத்து."*

ஆமையானது தான் வெளிக் கிளம்பி உலக இன்பங்களை அடையக் கருதிச் செல்ல முயலுங்கால், நாலு கால்களையும், தலையையும் வெளிப்படுத்திச் செல்கிறது. பிறரால் தனக்கு இடையூறு நேரும் என்று அறியும் பொழுதோ, அன்றிச் சும்மா இருக்கும்போதோ கால்கள் நான்கனையும், தலையையும் தன் உடம்பாகிய ஓட்டினுள் ஓடு மாத்திரமாய்க் காணப்பட்டு, உள்ளடக்கி வாழ்கிறதை நாம் காண்கிறோம். அதுபோலவே, அடக்கம் என்ற பண்புடையான், இல்லிருந்து நல்வாழ்வு நடத்தும் போதும், ஐம்புல இன்பங்களைத் தன் மனையாளோடு துய்க்கும் போதும் மாத்திரம் ஆரத் துய்த்து பிற இடங்களில், அவ்வின்ப அவாவினை, ஆமை அடக்குவது போல், தோற்றமும் காணாது, அடக்கும் ஆற்றலைப் பெறுவானாயின், அவன் ஏழு பிறவிகளிலும் பெருமையும் உயர்வும் பாதுகாவலும் பெறுகிறான்.

''ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப்பு உடைத்து.''

எவனொருவன் அடக்கமுடைமை பெறானாய் - அடங்காதவனாய் உள்ளானோ அவனிடம் அகங்காரம் என்ற அறியாமை மேலெழும். அதனால் மனம் நல்வழியன்றி அல்வழியிற் செல்லும். அதுபோது தீய நினைவுகள் எழும். தீயநினைவின் காரணத்தால் தீயசொல் உண்டாகும். அதனால் பிறர்க்குத் தீமை விளையும். அவன் ஒழுக்கமும் பண்பும் அழியும். ஆகையால், அறவாழ்வு சிதைவுறும். மறவாழ்வு மலியும். இல்லறம் கடைபோகாது அழிவான். ஆகையால் எக்காரணத்தாலும் அடக்கத்தை ஒருவன் விடலாகாது. அதனால்தானே நம் முன்னோர், 'அறிவோர்க்கு அழகு கற்றுணர்ந்து அடங்கல்' என்று கூறினர். கற்று - தீமைகளைக் களைந்து என்றும், உணர்ந்து - நன்மையை நடுநிலை என்று உணர்ந்து என்றும், அடங்கல் - மேன்மை பெற வெளிப்படாமல் காத்தல் என்றும் பொருள்படக் கூறினர்

என்று அப் பொருள் மொழிக்கு விளக்கம் அறிகிறோம். ஆகவே, சினம் காத்துக் கற்று அடங்கலை ஒருவன் பெறுவானாயின் அவனது வாழ்க்கையே அறவாழ்க்கை. அவன் வாழ்வையே உலகில் அறவாழ்வு வாழக் கருதும் அனைவரும் கண்டு அவன் வழி ஒழுகுவர்.

*"கதம்காத்துக் கற்றடங்கல் ஆற்றுவான் செவ்வி*
*அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து."*

இவ்வாறு அடக்க முடையான், உலகில் தீயரும் அடங்காரும் செய்யும் செயலைக் காணும் போதும், அச்செயல் தன்னை வந்து நலியும்போதும் மனம் பொறுயைத் திருப்பித் தீமை செய்ய எழுவா னன்றே, அது போதும், தனக்குப் பிறரால் தீமை நிகழ்ந்த போதும், தான் தீமையில் விழாது, தீமை நினைவுகளை எண்ணாது பிறரால் நிகழ்ந்த துன்பங்களைப் பொறுத்தலே பொறையுடைமையாகும். பொறுத்தல் இருவகை. ஒன்று: பிறர்செய்த தீமைகளால் வரும் துன்பங்களைப் பொறுத்தல் அடக்கத்தின்பாற் படும். திருப்பிப் பிறர்க்குத் தீமை செய்யக் கருதாத பொறுமையே பொறையின் பாற்படும். நிலமானது தன்னை வெட்டுவானை, உழுவானை, தோண்டுவானை, அவன் வெட்டுமளவும், உழுமளவும், தோண்டுமளவும் பொறுக்கிறது. அன்றியும், அவனையும், தாங்கிக் கொண்டு இருக்கிறது. இன்னும் ஊன்றிப் பார்ப்போமானால், வெட்டுவானுக்கும், உழுவானுக்கும், தோண்டு வானுக்கும் ஆகிய இவர்களுடைய நினைவுகளை, அவாவை என்ன என்றறிந்து, நன்மையும் செய்கிறது. வெட்டுவானுக்கு நீரையும், உழுவானுக்கு உணவையும், தோண்டுவானுக்குப் பொன் முதலிய பொருளையும் அளித்துக் காக்கிறது. அதுபோல, ஒருவன் தனக்குத் தீமை செய்வானானால், அவன் தீமையைப் பொறுப்ப தோடு அமையாது, அவனுக்குத் தீங்கு செய்யாமல் இருப்பதோடும் அமையாது, அவன் என்ன குறையினால்

இத்தீங்கு செய்தான் என்று ஆராய்ந்து அவன் எண்ணம் நிறைவேற உதவி செய்தலும் பொறையுடைமையின் பாற்படும் என்றறிதல் வேண்டும். அதுவே, அறநினைவுகள் வளர வழிசெய்வதாகும் என்ற உண்மையை ஆசிரியர் உவமையால் விளக்குகிறார்.

“ அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை.”

தாங்குதல் என்பதுதான் என்ன ? வெட்டுதலாகிய துன்பத்தைப் பொறுத்தல், வெட்டுவானைத் தள்ளிவிடாது தூக்கிக் கொண்டிருத்தல், வெட்டினவனுக்கும் உதவி செய்தல் என்ற மூன்று பொருளையும் உடையது என்பதனை நாமறிகிறோம். ஆகையால், தீமை பொறுத்தலும், தீமை செய்யாமையும், தீமைக்கு நன்மை செயலும் ஆன மூன்று நினைவுகளுமே பொறையின் பாற்பட்டமையை அறிய வேண்டும்.

ஒருவன் தீமை செய்வானாயின், அத் தீமையின் விளைவான துன்பத்தையடையும்போது, செய்தானை நினைக்கும் அவன் நினைவும் எழலாகாது. அதுவே பொறையுடைமையாகும். ஒருவன் செல்வம் உடையனாய் வாழ்கிறான். ஆனால் இரக்கம் என்ற குணமே இல்லை. அவனிடம் ஒரு விருந்தினர் வருகிறார். செல்வமிருந்தும் உதவும் இரக்கமின்மையால் இல்லை என்கிறார். அவன் செல்வமுடையன் ஆவானோ? அவன் செல்வம் அவனுக்குத்தான் பயன்படுமோ? படாது. அதுபோலவே ஒருவன் வலிமையுடையனாய் வாழ்தலாவது, தான் ஒருவருக்கும் தீங்கு செய்யாது வாழ்வதேயாகும். அதன்மேலும், தனக்கு ஒருவன் தீங்கு செய்யினும், அவனுக்குத் தீங்கு நினையாத ஆற்றலே வன்மையுள் வன்மையாகும். நற்குணங்கள் எல்லாம் நிறைந்த நிறைவு என்ற சால்பு ஒருவனிடம் நீங்காது நிற்க வேண்டுமாயின், பிறர் செய்த தீங்கு பொறுக்கும்போது தான் பிறர்க்குத் தீங்கு நினையாமையைக் காத்தலில்தான் அமைந்துள்ளது.

''நிறையுடைமை நீங்காமை வேண்டின் பொறையுடைமை
போற்றி ஒழுகப் படும்.''

ஒருவன் செய்த தீமைக்குத் திருப்பித் தீமை செய்வதால் அப்போது மனம் ஆறுதல் அடைகின்ற அம்மாத்திரமே இன்பம் உளதாகிறது. ஆனால் திருப்பிச் செய்யாது காப்பானாகில், தீமை செய்தவன் ஒருகாலும் இவனை மறவாமல், பொறுத்தவனுடைய உயர்வை நினைத்து, சொல்லிச் சொல்லிப் புகழ்வான்; பாராட்டுவான். ஆகையால் பகைவராலும் போற்றப்படும் புகழுடைகிறான். பிறன் தீமை செய்துவிடுவதால் அவன் வென்றவனாகிவிடமாட்டான். வஞ்சனையாலோ சினத்தாலோ அறிவிழந்து ஒருவன் தீமை கருதலாம். அத்தீமை நம்மை வந்து சாரலாம். ஆனால், நாம் அத்தீமையை அடைந்து, நாமும் தீமை செய்யாது வாழவும், நினைக்கவும் பண்படுவோமானால் நாமே வென்றவராவோம். செய்தவன் தோற்றவனே ஆவன். காந்தியடிகளைச் சுட்டவன் உயிரோடிருந்தும் பலராலும் பழிக்கப்படுகிறான்; துன்பமடைகிறான். காந்தியடிகள் தம் தகுதியுடைமையால் அத் தீயானது குண்டுக்கு இரையானாலும் தெய்வநிலை பெற்றார். என்றும் இவ்வுலகில் அழியாத உயர்ந்த கொள்கைகளை நிலை நிறுத்தினவர் ஆனார். ஆகையால்,

''மிகுதியால் மிக்கவை செய்தாரைத் தாம் தம்
தகுதியான் வென்று விடல்.''

என்ற அறமொழி எழுந்தது.

இங்ஙனமாகப் பொறுக்கும் ஆற்றலும் மறக்கும் ஆற்றலும் தீமை செய்தார்க்கும் நன்மை செய்யும் நினைவாற்றலும் மன ஆற்றலையே உணர்த்துகிறது. ஆகையால் பசியாற்றலைப் பொறுக்கும் தவஞ் செய்வாரினும் பிறர் செய்யும் - சொல்லும் - தீமைகளைப் பொறுக்கும் ஆற்றலே சிறப்புடைய ஆற்றலாகும்.

எனவே தவஞ் செய்வார் எய்தும் பேறினும், பிறர் செய்த தீமை பொறுப்பார் எய்தும் பேறு பெரிதென அறிகிறோம். அதனையே,

"உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்
இன்னாச்சொல் நோற்பாரின் பின்."

என்ற அருள்மொழி விளக்குகிறது. மேலே கண்ட பொறையிற் பெரியான் நினைவின் வழி நிற்கும் போது, தன் பொறையுடைமையினும் தான் பிறர்க்குச் செய்யக் கருதும் நன்மையினுமே மனஞ் செல்லும். அதனை அடக்கமுடையான், மடக்கியாள வழிகாண வேண்டும். ஆகையால் உலகியலில் உயர்வு அடையக் கருதும் மனிதன் பிறர் உதவியின்றி வாழவே முடியாது. துன்பத்துக்கு உதவி செய்தல் மாத்திரம் உதவியாகாது. வாழ்க்கையின் இடர்ப்பாடு களைவதற்கு உதவி செய்தலும் உதவிதான். ஆகையால் தன் பெருமை கருதாமைக்கும், பிறர் பெருமை கருதற்கும், தான் என்றும் பிறர்க்கு நன்மை செய்யும் நினைவுகளையே மேற்கொளற்கும் ஊன்றுகோலாக அமைவது, தனக்குப் பிறர் செய்த நன்றியை மறவாது அடிக்கடி - ஏன்-எப்போதும் நினைப்பதாகும். நினைவின் வழி மனிதன் ஒழுகுபவன் ஆகையால், தான் பிறர் செய்த நன்றியால் வாழ்கிறோம் என்ற நிலையில் இடையறாது வாழ்வானானால், தன் வாழ்வு பிறர்க்கு நன்றி செய்வதாக அமைய வேண்டும் என்ற நினைப்பையும் ஒழுக்கத்தையும் நல்கும். ஆகையால், செய்ந்நன்றியறிதல் என்ற உயர்ந்த பண்பாடு, பொறையுடையான் மனத்தில் புக வேண்டும்.

## நன்றி

பிறர் நமக்குச் செய்யும் நன்றி மூன்று வகைப்படும். அவை செய்யாமற் செய்த நன்றி, காலத்தினால் செய்த நன்றி, பயன் கருதாது செய்த நன்றி என்பன.

முன்னொரு உதவி தான் செய்யாமலிருக்கவே, தனக்கு ஒருவன் செய்த உதவிக்கு, செய்யாமற் செய்த உதவி என்று பெயர். நம் பெற்ருேர், நம்மைப் பெற்றெடுத்து அறிவு புகட்டிப் பல இன்பங்களையும் அடையக்கூடிய நல்வாழ்வை நமக்கு அளித்துள்ளனர். இந்தச் செயல், சமுதாயம் தோன்றினது முதல் இதுவரை நிகழ்ந்து கொண்டே வருகிறது. நம்மை வளர்க்கும்போதும், வாழ்வை யளிக்கும்போதும், நாம் அவர்கட்கு முன்னே என்ன உதவி செய்திருந்தோம்? ஒன்றுமே இல்லையே. கடமை யுணர்ந்து தாமே செய்தார்களேயன்றி, நாம் செய்த உதவி ஒன்றுமில்லையே. பின்னல் முதுமைப் பருவத்தில், பாதுகாப்போம் என்று வளர்ப்பதும் அளிப்பதும்கூட பின் உதவியாகுமே யன்றி முன் உதவி யாகாதே. அங்ஙனம் கருதுவதும் இழுக்கென்றே யல்லவா நம் முன்னோர் கூறியுள்ளனர்? நாம் அவர்கள் நமக்குச் செய்த நன்றிக்கு என்ன திருப்பிச் செய்துவிட முடியும்? இந்த உலகத்தையோ, அன்றி மறு உலகத்தையோ மாருகக் கொடுத்தாலும் உடலையும் உயிரையும் வளர்த்துத் தந்த அந்த உதவிக்கு ஈடாக அவை நிற்குமோ? நில்லாவே. அன்றியும் செய்யாமலிருக்கவே செய்த உதவியும் ஆகா. திருப்பி முன்னுதவிக்குப் பின்னுதவியாக அமையுமே யன்றிச் செய்யாமற் செய்த உதவியாகமாட்டா. எனவேதான்,

"செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது"

என்ற அரிய குறள் எழுந்தது.

ஒருவன் வாழுங்காலத்தில், அறியாமையால் நீரிடை மூழ்கியும் நெருப்பிடை விழுந்தும் வருந்தி யுயிரிழக்கும் நிலை ஏற்படுகிறது என்று வைத்துக்கொள்வோம். நீரிடை நீந்த அறியாது உயிரிழக்கும் தறுவாயில் இரக்க உள்ளத்தால் தன் வாழ்வையும் மதியாது திடீரெனப் பாய்ந்து தூக்கி உயிரளிக்கிருன் ஒருவன். மற்று ஒருவன் நெருப்பின் நெருக்குண்டு மீள அறியாது

தவிப்பான் ஒருவனைச் சரேலெனப் பாய்ந்து காக்கிறான். இவர்கள் ஒரு பொருளைக் கொடுத்து உதவினவர் ஆகார். ஆனால், அவர்கள் அகப்பட்டுக் கொண்ட துன்ப நிலையோ உயிரிழக்கும் நிலை. அந்தச் சூழலில் அருளுள்ளத்தால் தன்னுயிரினையும் பொருளென மதியாது, தன்னின்பத்தையும் வாழ்வையும் கருதாது காத்தானே, அதுவே காலத்தினாற் செய்த உதவியாகும். இத்தகைய உதவி என்றும் மறக்கற்பாலதன்று. தன் உயிர் உள்ள அளவும் உயிரைக் காத்தவனை நினைக்கும் கடமை அவனுக்கு இன்றியமையாதது. அவ் உபகாரி அளித்த வாழ்வு நாம் வாழும் இவ்வாழ்வு என்று இன்பமடையும் எஞ்ஞான்றும் நினைக்கும் கடமையுடையன்.

''காலத்தினால் செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது.''

பசிக்கும் உயிர்க்கு உணவளித்தலும், நோய்க்கு மருந்து நல்கலும், மானம் காக்க உடை கொடுத்தலும், அறியாமை நீங்க அறிவுக் கல்வி புகட்டலும் ஆன இன்னோரன்ன அறங்கள் பயன் கருதாது செய்யும் அறங்களாகிய நன்றிகளாம். நாம் பின்னொரு ஞான்று, பசியால், பிணியால், உடையின்மையால், அறியாமையால் வாடும்போது இவர் நமக்கு உவந்து உணவும் மருந்தும், உடையும் கல்வியும் ஈந்து காப்பர் என்ற நினைவால் செய்வன அல்ல. அறம் என்ற ஒன்றும், அன்பு என்ற உள்ளமும் கூடியியற்றும் செயலே அவை. அவற்றைப் பயன் கருதாது செய்த உதவி என்னலாம். அதனால் விளையும் நன்மையின் அளவு கடலினும் பெரிது.

''பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலிற் பெரிது.''

இம்மூவகை உதவிகளையும் நாம் இளமையிலும், அறியாத நிலையிலும், வளர்ச்சியிலும் பலர் பலர் வாயிலாகப் பெற்று வளர்ந்து மனிதநிலை பெற்றிருக்கிறோம். இந்த வித உதவிகளை நாம் பிறர்க்குச் செய்யும் கடமையுடையோம் என்பது நமக்கு எப்போது தோன்றும்? நாம் இவ்வித உதவிகளைப் பிறரால், தாய் தந்தையரால், சமூகத்தால், ஆசிரியர் அரசர் அயலார் முதலானவர்களால் பெற்று வளர்ந்திருக்கிறோம் என்ற நினைவு எழுந்தால்தானே நாமும் அதனைச் செய்யும் கடமையுடையோம் என்ற முடிவும் கடமையும் உணர்வோம். ஆகவேதான்,

*"தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்*
*கொள்வர் பயன்தெரி வார்"*

என்று வள்ளுவர் கூறினர். உதவி செய்வாரும் பெறுவாரும் என இரு திறத்தார். உதவியைச் செய்பவர், தன் அளவிற்கும், அன்பிற்கும், பெறுவானுடைய தகுதிக்கும் ஏற்பப் பொருளையும் பிற நலன்களையும் உதவுவர். ஆனல் ஏற்பவன், கொடுப்பவரின் அளவும் நிலையும் அறிந்து அந்த உதவியை ஏற்கவேண்டும். பெறுபவர், பெரிதாக நினைத்து வந்து சிறிது பெற்றோம் என்று கருதுவாராயின், கொடுத்தவர் பெரிது கொடுத்தோம் என்ற நினைவால் பயனில்லை. ஆகையால், உதவியின் அளவு கொடுப்பவனுடைய அளவால், நிலையால் பெருமையடைவதில்லை. பெறுபவனுடைய மனம் நிறைவால், பயனல்தான் பெருமை யடைகிறது. எனவே, பெற்றதைக் கொண்டு மகிழும் மன நிறைவு பற்றியே செய்த உதவி பலனையும் தருகிறது, பெருமையுமடைகிறது என்ற உண்மை,

*"உதவி வரைத்தன்று உதவி, உதவி*
*செயப்பட்டார் சால்பின் வரைத்து"*

என்ற குறளால் அமைகிறது.

எனவே, பிறர்பால் ஒருவன் அளவால் சிறிதா யினும், பெரிதாயினும் உதவி பெறுவானுகில், அந்த உதவியின் பயன்கருதிச் செய்தவனை ஏழு பிறவிகளிலும் மறவாது போற்ற வேண்டும். எவ்வாறு தான் தூயனு வதற்கு முன்னே தூய்மை பெற்ற நல்லோருடைய நட்பை மறவாது போற்றிக் கொள்ள வேண்டுமோ, அதுபோலவே, தான் பிறர்க்கு உதவி செய்ய வேண்டு மானுல், தனக்கு முன்னே உதவி செய்தாரையும், அவர் செய்த உதவியையும் போற்றி நினைந்து கொள்ள வேண்டும். பல தீமைகளைச் செய்து, ஒரு நன்மை செய்வராயினும் அவர் செய்த ஒரே நன்மையை நினைத்துப் பழகினுல், அவர் செய்த தீமைகள் நினை வுக்கு வாராது ஒழியும். உலகியலில் பல நன்மைகளையும் செய்து, ஒரு தீமை செய்துவிடுவானுனுல் அத்தனை நன்மைகளையும் மறந்து ஒரே தீமையை நினைப்பதும் தூற்றுவதும் மலிந்திருக்கக் காண்கிறேம். நினைவுகளில் நல்லனவற்றையே நினைக்க விரும்புவான், பழகுவான் பல தீமைகளையும் மறந்து, ஒரே நன்மையாயினும், அதனையே நினைத்துப் பழகும் இயல்பினைப் பெறவேண் டும். அதுவே, அவனுக்கு மன அற வளர்ச்சியைக் கொடுக்கும், உலகுக்குப் பயன்படச் செய்யும் என்பதனை,

> "கொன்றன்ன இன்னு செயினும் அவர்செய்த
> ஒன்றுநன்று உள்ளக் கெடும்."

> "நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது
> அன்றே மறப்பது நன்று."

என்ற அருமை உரைகள் தெளிவிக்கின்றன. உலகத் தில், பொதுவாகச் சமுதாயத்தில் காணப்படும் நன்மை கள் பலவற்றைச் செய்தாரையும், அவர்கள் செய்த நன்மைகளையும் ஒருவன் காலப் போக்கில் மறப்பானுயி னும், தனி மனிதர்க்குக் கிடைத்த உதவியையும், செய்தவனையும் மறக்கவே கூடாது. தான் நேரில் பெற்ற உதவியை மறப்பவனுக்குக் கழுவாயே கிடையாது.

ஏனெனில், அவன் தனக்குச் செய்த உதவியையே மறந்து வாழும்போது, பிறர்க்கு எவ்வாற்ருனும் பயன் படான். ஆகையால், அவன் மனிதப் பிறவியில் கொலை செய்தவனேடு ஒப்பாவான் என்று, நன்றி மறப்பதனுல் வரும் கேட்டை வற்புறுத்திக் கூறுகிருர்.

''எந்நன்றி கொன்ருர்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.''

ஆகையால்,

''மறவற்க மாசற்ருர் கேண்மை துறவற்க
துன்பத்துள் துப்பாயார் நட்பு''

என்று முடிவும் கட்டுகிருர்.

## அன்பு

இங்ஙனமாக ஒரு மனிதனுக்குப் பிறர் செய்த உதவியால் நாம் வாழ்கிருேம் என்ற நினைவே மேலெழ மேலெழ, நாம் பிறர்க்கு உதவும் வாழ்க்கையை மேற் கொள்ள வேண்டும் என்ற நினைவும் எழுந்துகொண்டே இருக்கும். அதற்கு அடிப்படையாக அமைந்துள்ள பண்புதான் அன்பு என்பது. அன்பின்றிப் பிறர்க்கு நன்றி செய்யவே முடியாது. தன்மாட்டு வைத்த அன்பினுல், தனக்குப் பிறர் உதவினர் என்பதை உணரும்போது, தனக்கு உதவி செய்தாரிடத்தும், பிற ரிடத்தும் உண்டாவது என்ன? அன்புதானே. அதனைத் தான் இல்வாழ்க்கையின் பண்பு என்று முன்னே ஆசிரியர் கூறியதும் என்றறிய வேண்டும். அந்த அன்பு தன் வாழ்வை யளித்த தாய் தந்தையர் மேலும், அறி வளித்த ஆசிரியர் மேலும், இன்பமளித்த மனைவிமேலும், இன்ப நலம் கனிந்த மக்கள் மேலுமாக வளர்ந்து வளர்ந்து பருவநிலை யடைகிறது. அது பின்னுல், பிறர் மாட்டும் செல்ல விருந்தினர், ஆதுலர் முதலாயரிடத் தும் சென்று, முதிர்ந்து அனைத்துயிர்க்கும் இரங்கும்

அருளாந் தன்மை யடைகிறது என்ற படியினையே நாமறிய வேண்டும். அன்பு ஒரு குணம் என்பதை தாமறிகிறோம். அன்பு என்ற குணத்தைத் தனித்துக் காண முடியாது. நிறம் முதலாயின, அந்நிறத்தை யுடைய பொருளிடம் காண்பது போல, குணம் முதலாய பண்புகளையும், அக் குணத்தையுடையானது செயலினு லும், தோற்றத்தினுலும் அறிந்துகொள்ள வேண்டும். அன்பு என்ற பண்பு ஒருவனிடம் உண்டு என்பதையறிய வேண்டுமானுல், அவனிடம் உள்ள நெகிழ்ச்சியாலும், அம் மன உருகலைக் காட்டும் அறிகுறியாகிய கண்ணீரா லுமே அறிந்து கொள்ளலாம். அன்புடையான், பிறர் நோய் கண்டபோது, எரி இடைப்பட்ட இழுதென உள்ளம் உருகிக் கண்ணீர் வடித்து நிற்பான். அவன் கண்ணீரே அவன்பால் உள்ள அன்பினை வெளிப் படையாக எடுத்துக்காட்டும். அவன், கண்ணீரைத் தடுத்து விடவோ மறைத்துவிடவோ முடியாது.

*''அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்*
*புன்கணீர் பூசல் தரும்.''*

அன்புடையானை யறிய வேண்டுமானுல், அவன் செயல் எல்லாம், பிறர் நலம் கருதிய செயலாகவே இருக்கும். அன்பிலான் செயல் எல்லாம் தன்னலம் கருதிய செயலாகவே இருக்கும். தன் உடல் பொருள் உயிர் என்ற மூன்றனையுமே பிறர்க்கென வாழுவானே அன்பின் வழி நடப்பவன் என்பதனை வெளிப்படுத்தும் சிறந்த அன்புடைய்வன் செயல். இந்த உயிர் இந்த உட லோடு கூடி வாழ்வதே, பிறரிடம் அன்பு காட்டுவதற் கென்றே வந்த தொடர்புதான் என்று கருதி வாழ்வான். அன்பு என்ற அருங்குணம் யாருக்கும் இனியனுய், உதவி செய்வானுய் வாழவேண்டும் என்ற ஆர்வத்தை யளிக்கும். அந்த ஆர்வமானது, உலகில் வாழும் அத் தனை மக்களையும் நேசிக்கச் செய்வதால், உயர்ந்த பண் பட்ட மக்களின் நட்பையும், ஏழை-பாமர மக்களின்

நட்பையும், உண்டாக்கிக் கொடுக்கும். அதனால், அவ் வன்புடையான் எல்லாராலும் நேசிக்கப்படுகிறான். அந்தத் தகுதி வேறு யாரும் பெறல் அரிது.

"அன்பீனும் ஆர்வ முடைமை அதுவீனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு."

உலகத்தில் இன்றுவரை தோன்றியுள்ள பெரியார்கள் அனைவரும் அன்பினால் மக்களை நேசித்தவர்களே என்பதை வரலாறு உண்மைப் படுத்தும். தமிழ்நாட்டில் தோன்றிய அறவாணர்களும், பிற நாட்டில் தோன்றிய மெய்ஞ்ஞானிகளும் அன்பினாலேயே இன்பமடைந்தனர் என்று வரலாறு கூறுகிறது. ஒரு வள்ளுவர், ஒரு புத்தர், ஓர் ஏசுநாதர், ஒரு காந்தியடிகள் கடைப் பிடித்த அன்பு என்ற அருங்குணப் பண்பே, அவர்களை அழியாத தெய்வநிலையடையச் செய்தது என்பதை யறிகிறோம்.

"அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்து
இன்புற்றார் எய்தும் சிறப்பு."

பிறர்க்கும் நன்மை செய்தற்கு அன்பு எப்படித் துணையோ அதுபோலவே, பிறர்க்குத் தீமை செய்யாது வாழ்தற்கும் அவ்வன்பே துணையாக அமைந்துள்ளது என்பதனையும் அறியவேண்டும். அன்பில்லாதவன், பிறர்க்குத் தீமை செய்தல் மாத்திரமன்றித் தனக்கும் தீமை செய்து கொள்ளுகிறான். அவன்மாட்டு நிகழும் தீய நினைவுகளால் தானே அழிகிறான். எலும்பில்லாத புழு, வெயிலில் சென்றால், தன் உடம்பு வெயிற் கொடுமை தாங்காது அழிவதுபோல, அன்பின்மை என்ற தீக்குணத்தால் சுட்டெரிக்கப்படுகிறான். அன் பில்லாதவன் மனித வாழ்க்கையில் வளர்ச்சி பெறுவ தென்பது அறவே இல்லை. அன்பு நீர் பாய்ச்சி அறக் கதிர் ஈன்றால்தான், இன்பம் என்னும் நல்லுணவு உயிர் வாழ்க்கையில் உண்டாகும். அந்த இன்பமே மனிதனின் குறிக்கோளாகும். பொருளும் பொன்னும்,

மனையும் மக்களும், ஏவலும் பிறவும் எல்லாம் அன்பில்லாதவனுக்கு இன்ப உறுப்புக்களாக அமையா. அத்தனையும் சுமையாக அவனுக்குத் துன்பமே விளைக்கும். ஆகையால், அன்பின் வழியாக உயிர்நிலை நடக்கிறது என்ற உண்மையை மறவாது கடைப்பிடித்து, அவ்வன்பிழந்தால் என்பு தோல் போர்த்த பிண வாழ்வு அமையும் என்பதனையும் உணர்ந்து, அன்பின் வழியே வாழ்க்கை நடத்த வேண்டும்.

''அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு.''

## ஒப்புரவறிதல்

மனிதன் உயிரோடு வாழும் வாழ்வே அன்பின் வளர்ச்சிக்காக என்றபோது, அவன் அன்பினை எங்ஙனம் வளர்த்துக் கொள்ள வேண்டும் என்ற வினா எழும் அன்றே? அதற்குரிய வழியினை அவன் நினைவில் பதித்துணர்ந்து தெளிவாக்கிக் கொளலே ஒப்புரவு அறிதல் என்பதாகும். ஒவ்வொரு மனிதனும் தான் வாழும் காலத்தில் உலக நடையினையறிதல் வேண்டும். எந்த முறையில் உலகம் வளர்ந்திருக்கிறது. நம் வாழ்வை எப்படி நடத்தினால் உலகிற்கும் பயன்பட முடியும் என்பதனையும், காலத்துக்கு ஏற்ற உதவியைச் செய்து வாழ்வதையும் அறிதலே ஒப்புரவறிதலாம். அங்ஙனம் உலக நடையறியாது பழமையையே கடைப்பிடிப்பானாயின், அக்கால மக்கட்குப் பயன்படாது அவன் வாழ்வு வீணாகும். ஆகையால் அந்நிலையறிதல் இன்றியமையாது வேண்டுவதாயிற்று. மழை என ஒன்று இயற்கையின் பாற்பட்டது. அம்மழை, நீரைத் தந்து உலகத்தை வளர்க்கிறது. அம் மழைக்குப் பெயர் பருவ மழை என்பது. மழை உலகச் சூழ்நிலையில், காலந்தவறாது பெய்தால்தான், உலகம் நன்றாக உணவு

முதலியன பெற்று, பசி பிணியின்றி வாழமுடியும். என்ன வளர்ச்சி யிருந்தாலும், பருவ மழை தவறு மாயின் இயற்கையால் ஏற்படும் இடையூறுகள் இவ்வளவு என்று சொல்லவே முடியாது. உறு பசியும், ஓவாப் பிணியும் மக்களையும் உயிரினங்களை யும் வாட்டும். விண் இன்று பொய்ப்பின் விரிநீர் விய னுலகத்து உள்நின்று பசியுடற்றும். விசும்பினின்றும் மழைத்துளி நிலத்தில் வீழாது போமாகில், இந் நிலவுல கில் பசும்புல்லின் தலையும் காண முடியாது. உழவர் ஏரினால் உழுதலைச் செய்யார். உணவுப் பொருள் உண் டாகாது. தானம், தவம் என்ற உலகியல் நடை ஒன்றும் நடைபெறாது. ஆகையால் மழையே உலகினை மாண் புற நடத்துகிறது என்பதனை நாமறிகிறோம். அம்மழை என்ன பயன் இம்மக்களிடம் எதிர்பார்க்கிறது? அல் லது மக்கள்தான் அம்மழையைப் போற்றுதலன்றி வேறு என்ன செய்துவிட முடியும்? ஆகையால், மழை எப்படிக் காலந் தவறாது வழங்கி உலகியலை ஒழுங்குற நடத்துகிறதோ அங்ஙனமே, மனிதனில் சிறந்தவனும் உலக நடையினை யறிந்து ஒழுங்குற நடைபெற் குத் தன்னாலான உதவியைக் கைம்மாறு வேண்டாது கடமையாக உணர்ந்து செயலாற்ற முற்படவேண்டும்.

"கைம்மாறு வேண்டாக் கடப்பாடு மாரிமாட்டு
என்னாற்றுங் கொல்லோ உலகு."

பயனின்றிக் கடலிலும், பிற இடங்களிலும் பரந்து கிடக்கும் நீரைப் பகலவன் வெப்பத்தால் நீராவியாக்கி, மேகமாய் மழையாய் வழங்கிக் காலத்திற் பெய்து வளஞ் சுரக்குமாறுபோல, ஒரு மனிதன் தன் முயற்சியால் உழைத்து ஈட்டிய பொருளைக் காலம் வரும் வரையும் சேமித்துக் காத்து, அப் பொருளைக் கொண்டு உலக நடை நன்றாக நடக்கத் தக்கார்க்கு உதவிப் பயன்பட வேண்டும்.

''தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு.''

அங்ஙனம் உதவுதலால் அவன் வாழ்வு, மழை போல மாட்சியடைகிறது. அவன் வாழ்வே உயிருடைய வாழ்வாக மதிக்கப்படுகிறது. உலகில் உண்டு உடுத்து, மக்களைப் பெற்று, மண்ணோடு மண்ணாய் அழிந்து போவாரை நினைப்பார் யார்? அவர்கள் வாழ்வு பிறரால் மதிக்கப்படாதபோது உயிர் வாழ்வாகுமோ? நாம் இயற்கையாகவே என்ன எண்ணுகிறோம்? சிறந்த வாழ்க்கை நடத்தவேண்டும் என்ற எண்ணம் இயற்கை யாக எழுகிறதே. அதனைப் பெற முயற்சிக்க வேண் டாவோ? யாங்ஙனம் முயற்சிப்பது? அதனை,

''ஒத்த தறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்.''

''புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறலரிதே
ஒப்புரவின் நல்ல பிற.''

என்ற இரண்டு குறள்களும் அருளுகின்றன.

பெற்ற செல்வம் பயன்படும் விதம் எப்படி? ஒரு வன் செல்வத்தைப் பெறுவதுதான் யாங்ஙனம்? ஒரு குளம். அக்குளத்தில் நல்ல நீர் நிறைந்திருக்கிறது. அதன் பெயர் ஊருணி. ஊரார் அனைவரும் பொது வாக உண்ணக்கூடிய நீரையுடைய குளம் என்பதால் அதற்கு ஊருணி என்று பெயர். அது தன்னிடம் நீர் நிறைவை எப்படிப் பெற்றது? மழைநீர் ஓடும்போது பள்ளமானபடியால் ஆங்கு வந்து நிறைந்து நின்றது. அதனை அக்குளம் தூய்மையாகப் பாதுகாத்துப் பயன் படும் வகையில் சேமித்துள்ளது. மழையில்லாக் காலத்து மக்கட்குப் பலவழிகளிலும் துணைசெய்ய, உண்ண, குளிக்க, குளிரச் செய்ய உதவுகிறது. அது போல மனிதன் தன் முயற்சியால் சேமித்த பொருளைப் பலர்க்கும் உண்ண, உடுக்க, பிணிநீங்கக் காலம் கருதி

இடமறிந்து உதவி வாழ வேண்டும். அவனே ஊருணிக்குச் சமமாவான்.

''ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு.

நல்ல சுவையுடைக் கனிகளைத் தன்னிடத்துடைய ஒரு நன்மரம் காட்டின் நடுவில் பழுத்து விடுமானால், அம்மரம் பழுத்துள்ளது என்பதனை யறிவார் யார்? அதனைப் பெற்று இன்பமடையவேண்டும் என்று முயற்சிப்பார் யார்? இல்லை. அதுபோல, ஒரு மனிதன் நன் முயற்சியால் பொருளீட்டிச் சேமித்து உளனாயினும், அவன் சமுதாயத்துக்குப் பயன்பட வேண்டும் என்ற நல்ல நினைவால், மக்கள் நடுவே தன் உள்ளக் கருத்தைத் தெள்ளத் தெளியக் காட்டி வாழ்ந்தாலன்றி அவனும், அவன் செல்வமும் பயன்பட முடியாது. அதனால், எவ்வளவு சிறப்புடையனாயினும், நல்லனாயினும், அவன் மக்கள் சமுதாயத்தைப் பிரிந்து வாழாது கூடி வாழக் கற்றுக்கொள்ள வேண்டும். அப்போதே அவனை உலகத்தார் விரும்புவர்.

''பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வம்
நயனுடை யான்கட் படின்.''

ஊருணியும், பயன்மரமும் ஊர்நடுவுள் நின்று இன்ப உணவாகப் பயன்படுவதுபோல், நடுவூரில் சமுதாயத்துக்குப் பொதுவாகப் பயன்படும் முறையை அறிந்தோம். ஆனால், அவன், பிறர் துன்பங்களையும் போக்கும் உதவியையும் ஆற்ற வேண்டும். மருந்து மரம் நடுவூருள் இருந்தால், கண்ணுக்கெதிரே காணப் பட்டுப் பலருக்கும் நோய்நீக்கி உதவி செய்கிறது. அதுபோல உபகாரியானவன், சமுதாய நடுவில் வாழ்ந்தால், அவன் மக்கட்குத் துன்பம் வந்தபோது நீக்கும் உதவியைச் செய்வான். அவன் வாழ்வு மருந்து மரத்திற்குச் சமமாகும்.

"மருந்தாகித் தப்பா மரத்தற்றூற் செல்வம்
பெருந்தகை யான்கட் படின்."

ஒரு மனிதன் நீர்போலவும், உணவுபோலவும், மருந்துபோலவும் பயன்பட வேண்டும் என்ற உண்மையான உணர்ச்சியுடையான், தன்னிடத்து உதவும் பொருள் முதலிய துணைக் கருவிகள் வாய்க்கப்பெருத இடத்தும், தன் உழைப்பாலும், சொல்லாலும், ஒப்புரவு செய்தலில் குறைய மாட்டான். நயனுடையான் வறுமையால் வருந்துவது என்பது, அவன் தான் செய்ய நினைக்கும் நன்மைகளைச் செய்ய முடியாது வருந்துவதே யன்றித், தான் உண்ணலும் இன்பமடைதலும் இல்லாது வருந்துவது வறுமையாகாது. எவன் ஒருவன் உண்மையான ஒப்புரவாளனே, அவன் ஒப்புரவு செய்தலினுல், தனக்கே அழிவு வருமாயினும், அதனைப் பெரிதெனக் கொண்டு தன் உயிரை இழந்தாயினும் செய்யக் கடவதாகிய - பிறருக்குப் பயன்படலாகிய - ஒப்புரவைச் செய்து உயர்வாம் புகழை அடைவானே அன்றித், தன் உயிரைப் பாதுகாத்து ஒப்புரவு அறிதலை - செய்தலை - மறந்தும் விடமாட்டான்.

"ஒப்புரவி ஞல்வரும் கேடெனின் அ∴தொருவன்
விற்றுக்கோள் தக்கது உடைத்து."

# சொல்லறம்

இவ்வாறு ஒருவன், தன் வாழ்வையும் பிறருக்குப் பயன்படும்படி அமைக்கும் மனப்பண்பாடு பெற்ற போது அவன் உள்ளம் மேற்கிளம்பிச் செயலாற்ற எழும். அதுபோது பிறப்பதுதான் சொல். சொல் எவ்வாறு பிறக்கிறது என்ருல், எண்ணங்களின் அழுத்தத்தால் உயிரின் ஆற்றல் மேற்கிளம்பும்போது, எண்ணங்களை வெளிப்படுத்தும் ஒலிகளாகப் பிறக்கின்றன என்பதே சான்ருேர் கண்ட இயர்கை முறை. அதனை 'உந்தி

முதலா முந்துவளி தோன்றி' என்று தொல்காப்பியனாரும், 'நிறைஉயிர் முயற்சியின் உள்வளி துரப்ப ஒலியாய் வரல் பிறப்பு' என்று நன்னூலாசிரியரும் கூறினார்கள். அங்ஙனம் எழுகின்ற ஒலிக் கூட்டமே சொல் ஆகையால், சொல் மன நிறைவையும், மனக்குறையையும் வெளிப்படுத்தும் அறிகருவியாகும் என்பதனை அறிகிறோம். பிறர்க்கு நலம் எண்ணும் நல்ல ஒப்புரவாளன் பலரையும் நேசிக்கின்ற நல்லன்புடையான், பிறர் செய்த நன்றியால் வாழ்கிறோம் என்ற நல்லெண்ணமுடையான் எந்தவிதச் சொற்களைப் பேசுவான், பேச வேண்டும் என்றதை வரை யறுப்பதே சொல்லறமாம். சொல்லறம் என்பது, எண்ணங்களின் வழி எழும் சொல். தீயனவற்றைக் குறிக்காமலும், தீய பலனை யளிக்காமலும் பாதுகாத்துச் சொல்லும் சொல் என்றும், நல்லனவற்றைக் குறிப்பனவும், நல்ல பலனைத் தருவனவுமான சொல் என்றும் இரு பிரிவினை உடையன. முன்னே, தீமை விளையாமல் பாதுகாத்தல், சொல்லறத்தில், விலக்கின்பாற் படும். பின்னே, நல்லன பயக்கும் சொல், சொல்லறத்தில் விதியின்பாற் படும். எனவே, சொல்லில் தீயன களைதல் முதலில் வேண்டும். ஆகையால், புறங்கூறல், பயனில சொல்லல் ஆகிய இருவகைக் குற்றங்களையும் சொற் குற்றமாகக் கொண்டு விலக்கிக்கொள்ள வேண்டும். புறங்கூறலாவது, மனத்தில் தீமையை மறைத்து நேரில் புகழ்ந்து பேசி, பின்னால் அவனையே குற்றம் கூறி இகழ்ந்து பேசுவது. முன்னால், அவனுடைய சிறப்பைக் கண்டு மனம் பொறாமையால், இகழ்வதற்கு அஞ்சி முகமனாக - வஞ்சகமாக-இனிய உரைகளால், புகழ்ந்து பேசி, அவன் மறைந்த வழி அவனைப் பற்றிக் குறை கூறும் - இகழ்ந்து பேசும் பொய்யுரையே புறங்கூறல் எனப்படும். ஒருவன் நன்மை பயக்கும் அற மொழிகளை முன்னாகப் பேசாமற் போனாலும், நன்மைகளை - அறங்களை-ச்செய்யும் ஆற்றல் இலனாயினும், தீமை

விளக்கும் புறங் கூறலான பொய்யுரையைப் பேசாமலாவது இருக்கப் பழகவேண்டும்.

*''அறங்கூருன் அல்ல செயினும் ஒருவன்*
*புறங்கூருன் என்றல் இனிது.''*

தனி மனிதன் வாழ்க்கையில் பலரோடு கலந்து பழகவேண்டியவனுய் இருக்கிருன். அங்ஙனம் பழகும் போது, பின்னுல் ஒருவனைப் பழித்தும், நேரில் புகழ்ந்தும் வாழ்வானுகில், அவன் பகைமையை வளர்த்துக் கொள்பவனுகவே முடியும். இகழப்பட்டவர் அவன் இகழ்ந்ததையறியும்போது பல கொடிய நிகழ்ச்சிகள் ஏற்படும். அதனுல், தீமை செய்வதினும் கொடுமையானது புறங் கூறலால் ஏற்படுகிறது என்பதையறிந்து புறங்கூறலைக் கடிய வேண்டும்.

ஒரு மனிதன் புறங்கூறிப் பலருடைய பகைமையால், துன்பமடைந்து வாழ்க்கையைப் பொய்யாக்கிக் கொள்வதைவிட, இறந்துபடுவதால் அவனுக்குப் பழியும் துன்பமும் இல்லாமலாவது போகும். ஆகையால் புறங் கூருமல் வாழ முடியாதவன் இறந்துபடுதலே நல்லது.

*''புறங்கூறிப் பொய்த்து உயிர்வாழ்தலிற் சாதல்*
*அறங்கூறும் ஆக்கந் தரும்.*

ஒருவனிடத்தில் குறைகள் காணப்படுமாயின் அவனை நேரில் கண்டபோது, இன்சொல்லால் திருத்த முயலவேண்டும். திருந்தானுயின், அவன் நட்பினைத் தூற்ருது தூரவிடல் வேண்டும். அவனே தொடர்வானுயின் அவன் குறைகளை அவன் எதிரிலேயே எடுத்துச் சொல்லிக் கண்டிக்கவேண்டுமே யொழிய புறத்தில் கூறி எதிரில் புகழலாகாது.

*' கண்ணின்று கண்ணறச் சொல்லினும் சொல்லற்க*
*முன்னின்று பின்னேக்காச் சொல்.*

ஒருவன் நட்பினனு, பகைவனு என்பதை யறிய சொல் ஒரு சாதனமாகும். சொல் மனத்துத் தூய்மை யாக எழுமானுல், எதிரில் பேசும் பேச்சும், பின் பேசும் பேச்சும் ஒன்ருகவே இருக்கும். முன்னுல் புகழ்ந்தும் பின்னுல் இகழ்ந்தும் பேசுவானுனுல், அவன் பேச்சே வஞ்சகம் நிறைந்தவன் என்பதையும், பகையுள்ளத் தான் என்பதையும், அற வாழ்வுக்கு விலக்கானவன் என்பதையும் வெளிப்படுத்தி விடும்.

"அறஞ்சொல்லும் நெஞ்சத்தான் அன்மை புறஞ்சொல்லும்
புன்மையாற் காணப் படும்.

இவ்வளவு தீமை பயக்கும் புறங்கூறலேத் தவிர்க்க வேண்டுமேயாயின், பிறன் குற்றங்களே எடுத்துப் பேச மனம் எழும்போது, தன் குற்றங்களே யாராய்ந்து அவற்றுள் தலேயான குற்றங்களேத் தானே பிறரிடம் கூறும் ஆற்றல் அவனுக்கு ஏற்பட்டால், அப் போது அவனுக்குப் பிறரைப் பழிகூறும் புறஞ்சொல் உண்டாகவே உண்டாகாது. பிறர் குறையைப் புறங் கூறும் புன்மையாளன், தனக்குப் பகையாவதோடு, நட்பினரையும் உறவினரையும் கூடாதபடி பகை உண்டுபண்ணும் தீயனுகவும் முடிவான். நட்பினர் களுடைய குற்றத்தையே புறங்கூறும் தீயன் பகைவர் களேயும், அயலாரையும் என்ன பாடுபடுத்துவான்? ஆகையால், அவனிலும் கொடியன் இருக்கவே முடி யாது. ஆகையால், இத்தகைய குற்றமுடையான் உல கில் வாழ்வதும், அவனே உலகத்தினர் கேடு செய்யாது பொறுப்பதும் அறம் நோக்கிப் பொறுக்கிருர்களே அன்றி, அவன் உலகில் வாழவே தகுதியுடையன் அல்லன்.

"அறம்நோக்கி ஆற்றுங்கொல் வையம் புறம்நோக்கிப்
புன்சொல் உரைப்பான் பொறை."

ஆகவே, உயிர்வாழும் மனிதன், தனக்குத் தீங்கு வாராது பாதுகாத்துக்கொள்ள வேண்டுமானுல், பிறர்க் குத் தீங்குவிளேயும் சொற்களேப் புறத்தே பேசவும்

கூடாது. அன்றியும், தன்னிடம் உள்ள குற்றங்களையே ஆராய்ந்து, அக்குற்றங்கள் நிகழாதபடி பாதுகாத்துக் கொள்ளவும் வேண்டும்.

*"ஏதிலார் குற்றம்போல் தங்குற்றம் காண்கிற்பின்*
*தீதுண்டோ மன்னும் உயிர்க்கு."*

புறங்கூறலின் குற்றமுணர்ந்து அது தன்னிடம் நிகழாது காத்துத் தன்னிடத்தும் குற்றம் நிகழாது காத்து நடப்பான் ஒருவன் தன்னிடம் பயனற்ற சொற்களும் நிகழாதபடி காத்துக்கொள்ள வேண்டும். பயனற்ற வீண் சொற்கள் அவன் பயனற்ற வீணன் என்ற நிலையை வெளிப்படுத்திவிடும். ஆகையால், பிறவியில் இன்பக் குறிக்கோளுடையான் தன்னைப் பய னற்றவன் என்று பிறர் கருதும்படி நடந்துவிடக் கூடாது; தன் வாழ்நாளையும் பயனற்றதாகச் செய்து விடவும் கூடாது. ஆகையால், பயனில்லாத சொற்களை ஒருகாலும் பேசாமையும் சொல்லில் நிகழும் குற்றத் தைப் போக்கிக் கொள்ளலாகும். எவனொருவன் பய னற்ற சொல்லைப் பேசுகிறானோ அவனை உலகில் உள்ள நயனுடை நெஞ்சமுடையார் விரும்பமாட்டார் கள். நல்லோர் விரும்பாமையால், மற்றையரும் அவனை இகழ நேரிடும்.

*"பல்லார் முனியப் பயனில சொல்லுவான்*
*எல்லாரும் எள்ளப் படும்."*

பயனற்ற சொற்களை, பலர் முன் ஒருவன் பேசுவ தாவது அத்தனை பேரையும் ஏமாற்றுவதாக அமைகிற தோடு, நட்பினரையும் பிரித்துவிடும். அன்றியும், வெற் றுரைகளை அடுக்கி அடுக்கி விரித்து உரை செய்தா னயின் அவனது வெற்றுரைகளே, அவன் மனத்தில், நயன் இலன் என்பதை வெளிப்படுத்திவிடும்.

*"நயனிலன் என்பது சொல்லும் பயனில*
*பாரித்து உரைக்கும் உரை."*

ஒருவன் நன்மனமும் செயலும் உடையனாய் இருந்து ஓரொருகால் பயனில்லாத சொற்களைப் பேசி விடுவானாயின் அவன் அதுவரையும் அரும்பாடுபட்டுத் தேடிய மனப்பண்பாட்டால் வந்த சீரும் சிறப்பும், அவன் வாயினின்றெழுந்த வெற்றுரையால் அழிந்துபோகும். அதனால் அவனை, நெற்பயிராக வளர்ந்து உள்ளே அரிசியில்லாத கதிரை நெல்லென்று சொல்லாமல் பதர் என்று சொல்லிவிடுவதுபோல, மனிதனாக வளர்ந்தும், பயன்படும் பண்பாடு இன்மையை விளக்கும் பயனற்ற சொல்லால் மக்கட் பதடி என்று சான்றோர் கூறிவிடுவர்.

''பயனில்சொல் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி எனல்.''

ஒருவன் நன்மை பயக்கும் இன்சொற்களைப் பேச வேண்டும் என்பது பின்னால் வரவேண்டிய பண்பாடு. ஆனால் அதற்கு முன்னாக, அவன் பயனற்ற சொற்களைப் பேசாமல் பழகக் கற்றுக்கொள்ள வேண்டும்; பண்பட வேண்டும். அதுவே சொல்லில் கடைப்பிடிக்க வேண்டிய முதன்மையான கடமையாகும்.

''நயனில சொல்லினும் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று.''

இன்சொல்லைப் பேசவேண்டும். பழக்கமின்மையால் நன்மை பயக்கும் கடுஞ்சொல் வரினும் குற்றமின்று. ஆனால், நன்மை பயவாத வெற்றுரை சான்றோர்மாட்டு நிகழலாகாது என்றதை உணரவேண்டும். ஒருவன் தன் அறிவை வெளிப்படுத்த வேண்டுமானால், ஒருவன் பிறர்க்கு அரும்பயனை ஆராய்ந்து நன்மை பயக்கும் வாழ்வுடையான் என்பதனைக் காட்ட வேண்டுமானால், மறந்தும் அவன் வாயிடத்துப் பயனற்ற சொல் உண்டாகிவிடக் கூடாது. சொல்லென்பது வெறும் பொருளற்ற ஓசையல்லவே. ஆகையால், ஒருவன் பேசுவானானால், பொருளுடைய சொற்களைத்தானே பேசவேண்டும்? பொருளாகிய பயனை அச்சொல்

அளிக்காதொழியின் பொருள் குறிக்கவேண்டிய சொல் ஆகாது. பொருளற்ற ஓசையாகவே அமைந்து விடும். பொருளற்ற ஓசையை எழுப்பும் விலங்கு, பறவை போன்ற இழிபிறவியின் செயலாக அமையுமே அன்றி, அறிவுடைய மனிதன் செயலாக அது கருதப்படாது. அதனுல் மனிதன் பேசுவதென்ருலே, பயன்தரும் பொருளுடைய சொற்களேயே பேசுவாஞகை; பயனில்லாதபொருளற்ற வெற்றுரை பேசவேண்டி வந்தால், பேசாமலே இருந்து விடுவாஞகை என்று கடுமையான விதியை ஓதி விடுகிருர்.

''சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்.''

# இன்சொல்

இந்த முறையில் சொற்குற்றங்களேக் (புறங்கூறல், பயனில சொலல்) கடிந்து, நன்மன நிறைவுடன், பயன்படும் உள்ளத்தோடு எழுகின்ற அன்பின் ஊற்ருல் வரும் சொல்லே இன்சொல் எனப்படும். சொல்லுக்கு இனிமை என்ன? பேசுவானது நல்லெண்ணமும் கேட்பானுக்குப் பயனளிக்கும் தன்மையுமே, சொல்லுக்கு இனிமையாகும். எனவே, உள்ளத்தில் இரக்கம் நிறைந்து, பொய்மை கலவாது இந்தச் சொல் கேட்பாருக்குச் சிறந்த நற் பயனே அளிக்கவேண்டும் என்ற ஆர்வத்தோடு சான்ருேரால் கூறப்படும் சொல்லே இன்சொல் என்று பெயர் பெறும். அங்ஙனமின்றிக் கேட்பதற்கு இசையாகவோ, அலங்காரமாகவோ இருக்குமானுல், அச்சொற்கள் இன்சொற்கள் ஆகா.

''இன்சொலால் ஈர மளேஇப் படிறிலவாம்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.''

ஒரு மனிதன், தன்னளவில் பயன்பட வேண்டுமானுல் மனம் மொழி மெய் என்ற முக்கரணங்களும்

ஒத்து ஒல்லும் வகையால் செயல்பட வேண்டும். அங்ஙனம் செய்ய, பொருளும் பிறவும் கைகூடாதாயினும், தன்னிடம் இயற்கையாகவே அமைந்துள்ள மன நிறைந்த அன்போடு, முகமலர்ந்து இன்சொல்லை வழங்க வேண்டும். அன்பும், இன்சொல்லும் ஆகிய இரண்டும் மனிதன் பண்பாட்டால் தனக்குத்தானே தேடிக்கொள்வனவாம். வேறிடமிருந்து பெறுவன அல்ல. தன்னிடமே அவை அமைந்து உள்ளன. ஆனால், பொருளோ எனின், முயற்சியாலும், பெற்றோர் முதலான வழிகளிலும் பெறுவது. அதனை அவன் தன் முயற்சிக்கேற்பவும், உழைப்பிற்கேற்பவும், வந்த வம்ச வழிக்கேற்பவுமே பெற்றிருப்பான். ஆகையால் ஈதல் முதலிய அறங்களை, அவன் பொருளளவிற் கேற்பவே செய்யமுடியும். ஆனால், பண்பாடுற்ற மகன், தன்னிடமுள்ள அன்பு, இன்சொல் இரண்டனையும் எவ்வளவாயினும் எங்கும், யார்மாட்டும் செய்யலாம். அதற்கு இடையூறு கிடையாது. ஆகையால் ஈதலினும், அன்புநிறைந்த இன்முகத்தோடு கூடிய இன்சொல்லே இன்றியமையாதது என்ற உண்மையை ஆசிரியர்,

> "அகனமர்ந்து ஈதலின் நன்றே முகனமர்ந்து
> இன்சொலன் ஆகப் பெறின்"

என்று கூறுகிறார்.

மன அறத்தை முடிக்கும்போதும் தொடங்கும் போதும் தூய்மையே அடிப்படையாக இருக்கிறது. அதனால்தான்,

> "மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்
> ஆகுல நீர பிற"

என்ற அருள் வசனம் எழுந்தது. அது போலவே சொல்லில் தூய்மை பெறற்கு,

> "அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
> இழுக்கா இயன்றது அறம்"

என்ற பொய்யாமொழி பிறந்தது. இனி, அச்சொல்

நன்மை பயக்கும்போதே சொல்லில் அறம் அமைதி, முடிபு நிறைவு பெறுகிறது. எப்படி எனின், மன நிறைந்த அன்பால் நடுவுநிலே பிறழாது, ஒப்புரவு என்னும் உயர்நிலேப் பண்பாட்டில், பயன்மரம் போல வும் ஊருணி போலவும், மருந்து மரம் போலவும் வருந்தித் தானே உள்ள நிறைவை முகமலர்ச்சியால் வெளிக்காட்டி, இன்சொல்லால் செவிக்கும் சிந்தைக்கும் இனிய நன்மொழி புகல்வானுயின் அதுவே, சொல்லற நிறைவாம் என்று ஆசிரியர் அருளுகிருர்.

"முகத்தான் அமர்ந்தினிது நோக்கி அகத்தானும்
இன்சொ லினதே அறம்."

உலகில் மக்கள் மூவகையினர். அயலார், பகைவர், நண்பினர் எனப்படுவர். இம்மூவகை மக்கள் மாட்டும் அயலார் என்று உதாசீனம் செய்யாமலும், பகை என்று வெறுப்புக் கொள்ளாமலும், நட்பினர் என்று நடுவு நிலே பிறழாமலும் யாரிடத்தும் இனிய சொல்லேப் பேசி விடு வானுயின், அவனுக்குப் பகையால் துன்பம் வாராது. அயலாரும் அவனே அறிந்து அன்பு செலுத்துவர். அவனே அனேவரும் போற்றலால் இன்பமே உண்டாம். அவனுலும் பிறர்க்கும், பகைவர்க்கும் கூட துன்பம் உண்டாகாது.

"துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொல் அவர்க்கு."

ஒருவனுக்கு மனத்தூய்மையைக் காட்டவும், நல் லெண்ணங்களே விளக்கவும் பணிவாகிய அடக்கம் எவ் வளவு இன்றியமையாததோ, அவ்வளவு இன்றியமை யாதது இன்சொல். பணிவுடையான் மலேயின் தோற் றம் போல் காணப்படுகிருன். இன்சொல்லன் யாராலும் விரும்பப்படுகிருன். ஒருவனுக்கு அணிகலம், தனக்கும் அழகைச் செய்து, காண்பாரையும் தகுதியுடையான் என்று விரும்பச் செய்யுமாறு போல, இன்சொல் தனக்கு

மகிழ்ச்சியைத் தந்து, கேட்பாரையும் விரும்பச் செய்வதால், இன்சொல்லே சிறந்த அணிகலம் ஆகும்.

''பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்கு
அணியல்ல மற்றுப் பிற.

நற்பயன் தரும் இனிய சொற்களை ஒருவன் தன்னறிவால் நன்கு ஆராய்ந்து பேசுவானாயின், அதற்கு முன்னே அவன் செய்த அல்லவைகள் எல்லாம் நாள் தோறும் சிறிது சிறிதாக மறக்கப்பட்டு, இனியன், நல்லான், தக்கான் என்ற அறம் கூறும் நிலையை அடைவான். ஆகையால், முன்னர் அறியாமையால் செய்த தீங்குகள் மறையவும் இன்சொல் துணைசெய்வதை ஒருவன் அறிந்து இன்சொல்லைப் பழகவேண்டும்.

''அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின்.''

தன் மனப் பண்பினின்றும் பிரியாது நன்மை பயக்கும் சொல்லை ஒருவன் பேசுவதால் வரும் நன்மைகள் பலப்பல - ஒன்று. முன்னாக தான் இழப்பது ஒன்றும், இல்லை. அன்றியும் அவனைக் கண்டவுடன் மனம் தண்ணென மகிழ்கிறது. அவனுக்கும் செவிக்கினிமை கொடுத்து அவனையும் மகிழச் செய்கிறது. பின்னாக நல்ல பயனையும் அச்சொல் அவனுக்கு அளித்துவிடுகிறது. அதுபோது கேட்டான், பேச்சின் இனிமையையும், செயலின் நன்மையையும் நினைந்து நினைந்து, உண்மையான அன்பு பாராட்டுகிறான். இத்தனை நன்மைகளையும் ஒன்றாகக் கொடுக்கும் இன்சொல்லைத் தவிர மனிதனிடத்தில் இயற்கையாக அமைந்தது வேறொன்றில்லை.

''நயனீன்று நன்மை பயக்கும் பயனீன்று
பண்பில் தலைப்பிரியாச் சொல்.''

சிறுமை எண்ணங்களைக் களைந்து, நல்லெண்ணங்களையே வெளிப்படுத்தும் இன்சொல் இருமைப் பயன்

களையும் அளிப்பதை நாமறிவோமானால் ஒருகாலும் தீச்சொல் பயிலமாட்டோம். அங்ஙனமிருந்தும், மனத்தில் கதங்காங்கும் கருத்தின்மையால், இன்சொல் இனிது ஈன்றலை யறிந்திருந்தும் வன்சொல் வழங்க நேரிடுகிறது. அதனைப் பரிகரித்தலே தலையாய அறமாம். அங்ஙனம் பரிகரிக்காதபோது, நமக்கு நாமே தீங்கைத் தேடி விளைத்துக் கொள்வதாகும். ஒருவன் நல்ல நந்த வனத்தை யடைந்தான். மாவும் பலாவும் வாழையும் தெங்கும் வரிசை வரிசையாகக் கனிந்து உள்ளன. மற்றொருபுறம் எட்டியும் வேம்பும் எழிலுடன் கனிந்து காட்சியளிக்கின்றன. இன்சுவைக் கதலியும் மாவும் தன் கண்முன்னே நன்று காட்சி தரவும், பலகால் உண்டுகளித்திருப்பவும், அவற்றைவிட்டு, நினைத்தாலும், சுவைத்தாலும், வெறுப்பையும் கசப்பையும் தரும் வேம்பையோ எட்டியையோ எட்டிப் பறித்து உண்பானாயின் அவன் மதியீனத்தை என் என்பது! காகமும் வண்டும் பறவை என்ற ஓரினத்தைச் சேர்ந்தவைதாம். ஆனால் வண்டு பூவில் உள்ள நறுமணத் தேனை உண்ண விழைந்து மலர்ப் படுக்கையில் தன் இன்ப உடலை அமைத்து உண்டு மகிழ்கிறது. ஆனால், காகமோ வேப்பம்பழத்தைக் கொத்தித் தின்று கழிக்கிறது. அல்லது, செத்த பிணத்தைக் கொத்தித் தின்ன விரைந்து வெளிச் செல்லுகிறது. அது சோலையின் குற்றமா அல்லது காகத்தின் இயல்பா? அது போல மனித உடலென்னும் பூங்காவில் வாழ்கிற உயிர், இயல்பாகவே தன்னிடத்து அமைந்துள்ள, நற்குண, தீக்குணங்கள் என்னும் இருபெருஞ் சாதனங்களையும் பெற்றுள்ளது. ஆனால், வேம்பு, நஞ்சுடை எட்டி போன்ற தீக்குணங்களை அறவே விலக்கி, ஔவை உண்ட நெல்லிக் கனி, கதலி, மா போன்ற இன்பம் பயக்கும் நற்குண வசத்தனாய்த் தானும் இன்பமடைந்து, பிறரையும் இன்புறுத்தும் இன்சொற்களைப் பேசி நன்மையடைவானாக.

"இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று."

இதுகாறும் மன அறம், சொல்லறம் என்ற இரு வகை அறங்களின், விலக்கு விதி என்ற பாகுபாட்டை ஆசிரியர் வள்ளுவர் கண்டவாறே உணர்ந்தோம். இனி மனந்தூயனாய் நல்லன நினைந்து சொல் தூயனாய் இனிய சொல் பேசும் இயல்பினைப் பெற்றான் ஒருவன், செயல் தூயனாகும் முறை அறிய வேண்டும். செயலில் படும் குற்றங்களை ஒருவன் முன்னாகக் களைந்து தூய்மை பெற வேண்டும். அப்போதுதான் அவன் செய்யும் அறங்கள் பிறர்க்கு நேராகச் சென்று பயனளிக்கும். இல்லையேல், அவனது தூய்மையற்ற நற்செயலும் தீமையாய் முடியும். தண்ணீர் உடலைக்கழுவும் சாதன மானது. ஆனால், தன்னிடத்து முன்னரே, அத்தண்ணீர் அழுக்குக் கலந்ததாக இருந்தால், அதனைக் கொண்டு தன்னழுக்கைப் போக்கக் கருதும் மகன் உலகில் இல்லை. அதனால்தானே, நம் முன்னோர் குளிக்கப் போனால் தூய தண்ணீரால் அழுக்கைப் போக்கிக் கொள்ள வேண்டும். அங்ஙனமன்றி மேலும் ஓர் அழுக்கைப் பூசிக்கொள்ளக் கூடாது என்ற விளக்க மொழியைப் பழமொழியாகக் கூறினார்கள். 'குளிக்கப் போய்ச் சேறு பூசிக் கொண்டவனைப் போல' என்று. எனவே, நாம் செய்யும் நற்செயல் பிறர்க்குப் பயன்பட வேண்டுமானாலும், நமக்கே நன்மை பயக்க வேண்டுமானாலும், நம்மிடத்துத் தீய செயல்கள் நிகழாதவாறு பாதுகாத்துக் கொள்ளலே முதலற மாகும். ஆகவே, செயலிற் குற்றங்கள் எவை என்பதை உணர்ந்தும், அவற்றால் வரும் தீமைகளை அறிந்தும், அவற்றைக் களைய வேண்டும்; அவை தான் செயலறத்தில் விலக்கின்பாற் பட்டன. அவை கூடா ஒழுக்கம், களவு, இன்னா செய்தல் என்பன. இவை செயலிற்படும் குற்றங்கள். அவைகளைக் களைந்

தெறிய வேண்டும். இங்கே சில ஐய வினக்கள் எழும். சூது, குடி முதலிய குற்றங்களும் விலக்கப்பட வேண்டிய குற்றங்கள் தாமே, அவை ஏன் இங்கு முடிக்கப்பட வில்லை என்ற வினு இயற்கையில் எழும். அவை, தனி மனிதன் செய்யும் குற்றங்கள் ஆகா. சமுதாயத் தொடர்பால், சமுதாயப் பழக்கத்தால் வரும் கூட்டுறவுக் குற்றங்கள். ஆகையால், சமுதாயத்துக்கு வேண்டாத, சமுதாயத்தைக் கெடுக்கிற குற்றங்களைக் கூறும் அரசியலில் வைத்து விளக்கிக் கூறுவார். ஆங்கு அவற்றினை யறிய வேண்டும். அதுபோலவே கல்வி, அறிவு, நட்பு முதலிய சிறந்த இன்றியமையாத வளர்ச்சிக்குரியன எல்லாம் சமுதாயக் கூட்டுறவால் பெறவேண்டியவை. தனி மனிதனுல் பெறுவன அல்ல. ஆகையால், அற வகையில் பேசாது, பொருள் வகையான, அரசியல் வகைப்படுத்தி விரித்து ஓதப்படும். எனவே, ஈண்டு ஒரு மனிதனின் தனி வாழ்வு எங்ஙனம் சீர்ப்பட வேண்டும் என்பதே அறம் என்ற கூறு என உணர வேண்டும். அப்போது செயலிற்படும் தீங்குகட்கு ஒருவகை இடம் கொடாது காத்துக் கொள்ள வேண்டும். முன்னுக ஒருவன் கூடா ஒழுக்கத்தினின்றும் விலக வேண்டும்.

## கூடா ஒழுக்கம்

கூடாத ஒழுக்கம் எது? மனம் தீயனுய், சொல் தீயனுய், வேடத்தால் மாத்திரம் தூயனைப்போல நடித்து பிறரை வஞ்சிப்பதும், மனந்தீயனுய், சொல் இனியனுய்ப் பிறரை வஞ்சித்து வாழ்வதும், புறத்தில் பற்றிலனைப் போல் வேடத்தால் காட்டியும் சொல்லால் பேசியும், அகத்தில் பொருளை வஞ்சிக்க நினைப்பதும் கூடா ஒழுக்கம் எனப்படும். இனி, கூடா ஒழுக்கம் வளர்ச்சி பெற்ற நல்லறிவும், நல்லன்பும், நற்சொல்லும் உடையானிடம் காணக்கூடாத ஒன்ருதலின், தவமுடையார்க்

கும் கூடாதென ஆசிரியர் விதிக்கிறார். அனைவர்க்குமே கூடாத ஒன்றை அறத்திற் சிறப்புடைய துறவிகட்கே கூடாதென விலக்குவது சிறப்பு நோக்கி என்றறிதல் வேண்டும். அன்றியும், துறவுநிலை பெறும் அவ்வளவு மனத்தூயனும், அறிவு நிலை கலங்கி தீய ஒழுக்கத்தில் விழுந்து படுவான். ஆகையால், மன உறுதியுடையானே தீய ஒழுக்கத்தைத் தன்னிடம் நிகழாது தடுக்க முடியும் என்ற அருமைப் பாட்டை விளக்கவும் அங்ஙனம் கூறியதாகக் கொள்க. முன்னர் மனத்தால், வாக்கால் தான் பிறர்கண் நல்லனாய் வாழவேண்டும்; ஐம்புல நுகர்வை அடக்கவேண்டும் என்ற முடிவில் நின்று அதற்குரிய வடிவும் சொல்லும் பெற்று வாழ்க்கையில் நுழைந்தான், பின்பு அதன் படியே நடக்கும் ஆற்றல் இழந்து, மன உறுதி குலைந்து விடுகிறான். என்றாலும், பலரும் பழிப்பரே என்றஞ்சி, மறைந்து தியவழியில் புலன் நுகர்வை ஆசைப்படுகிறான். அந்த இழுக்கு, வாழ்க்கையில் யார்க்கும் உண்டாகக் கூடாது. மனத்திட்பமும், முடிவை மாற்றாத நிலையும் ஏற்பட வேண்டும் என்பதை வற்புறுத்தவும், கூடா ஒழுக்கம் என்ற ஒன்றை நிறைந்த துறவிகளின் மூலம் வைத்துப் பேசுகிறார் ஆசிரியர். ஆகையால், வளர்ச்சியுறும் இளைஞர், இல்லறத்தார் முதலாயினார், கூடா ஒழுக்கத்தை யாங்ஙனம் காக்க வேண்டும் என்பதை நினைந்து, அஞ்சி, மிகமிக ஊன்றி, செயல் தொறும் செயல் தொறும் எண்ணஞ் செலுத்திக் காக்க வேண்டும். ஒருவன் உருவத்தால், தோற்றத்தால் யாரும் வணங்கத்தக்க நல்ல உருவும் தோற்றமும் பெற்றுள்ளான். அவன் உடை, நடை, சொல் முதலியன பிறரைக் கவரும் அத்தனை உயர்வுடையனவாகக் காட்சியளிக்கின்றன. ஆனால் அவன் மனம், அடக்கம், பொறை கொள்ளாது வெஃகல், வெகுளல் முதலிய தீய எண்ணங்களினின்றும் விலகவில்லை. பிறர் பொருளையும், மனைவியையும் அடைந்து இன்பமுற வேண்டும் என்ற எண்

ணம் அடிக்கடி எழுகிறது. என் செய்வான்? தோற்றத்தைக் கண்டு பிறர் வணங்கும்போது, அவன் உள்ளம் இவர் பொருளை எப்படி வஞ்சிக்கலாம் என்று எண்ணுகிறது. பிறர் காணாதபோது, உலக இன்பத்தைப் பிறர் அறியாமல் எப்படி அடையலாம் என்று உள்ளம் ஓடுகிறது. அன்றியும் ஓரொருகால் அவன் உள்ளம் நன்னிலையில் நிற்கும்போது, அவன் உள்ளமே, என்ன தீய தோற்றம், என்ன தீய சொல், என்ன தீய செயல்? இத்தனையையும் மறைக்கவா இந்த வேடம் என்று நாணுகிறது; நகைக்கிறது. அவனையே உறுத்துகிறது. துன்பப்படுத்தவும் செய்கிறது. என் செய்வான்? உறுதி குலைகிறான். பின்னும் தளர்கிறான். மறுபடியும் வானுயர்ந்த தோற்றத்தை விடானாய், நரகினும் கொடிய துன்பக் கருத்துக்களால் பீடிக்கப்படுகிறான்; விழுகிறான்; குற்றம் செய்கிறான். அவன் வாழ்வை நினைத்துப் பாருங்கள். அவன் வேடம் பூண்டது ஏன்? பிறர் நலம் பேண வேண்டும் என்றல்லவா? பொருளையும் பெண்ணையும் விரும்பாது வாழ வேண்டுமல்லவா? அவன் மனம் ஒருமைப்பட்டு உறுதி கொள்ளாதபோது சொல்லும் செயலும் அவ்வுறுதித் தளர்வுக்குத் துணை செய்து, இவனைத் தீய வாழ்வில் தள்ளுகின்றனவேயன்றி, செய்யும் நன்மையுண்டோ? தோற்றம்தான் அவனுக்கு என்ன நன்மையைச் செய்தது? இல்லையே. ஆகையால்,

''வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
ஐந்தும் அகத்தே நகும்''

''வானுயர் தோற்றம் எவன்செய்யும் தன்னெஞ்சம்
தானறி குற்றப் படின்''

என்ற அரிய குறள்கள் எத்தனை உண்மைகளை விளக்குகின்றன.

ஒரு பசு. அந்தப் பசு புல்லைத் தின்ன வேண்டும் என்ற எண்ணத்தோடு வயலைச் சார்ந்தது.

அங்கும் பாதுகாவல் அதிகமாக இருந்தது, வேலியும், வேலையாளும் உள் நுழைய முடியாத அவ்வளவு பாது காவல். ஆனால், பசுவுக்குப் பசி அதிகம். புல்லோ, பயிரோ பச்சைப் பசேல் என வயலில் காட்சி யளிக் கிறது. பசுவின் மனத்தைப் பசியினும் ஆசை வேறு அதிகம் தூண்டுகிறது. பசு பசுவாகவே சென்றால் வேலியும் இடந்தராது. முட்டித்தட்டி உள் நுழைவ தென்றால் வேலைக்காரனும் தடிகொண்டு தாக்கி வெளி யிற் செலுத்துவான். பசு என் செய்யும்? பசியைக் காக்கலாம். ஆசையைக் காக்க முடியாதே? திரும்பித் திரும்பிப் பார்த்தது. பக்கத்தில் ஒரு புலியின் தோல் கிடந்தது. அதனைத் தன் கொம்பால் குத்தி எடுத்து, உடல் மேல் போர்த்தது. விரைந்து வயல் நடுவில் சென்றது. தனித்துத் தின்றுகொண் டிருக்கிறது. அதுபோது வேலைக்காரன் பார்க்கிறான். புலியாகக் காட்சியளிக்கிறது. புலி என்ற உடனே அச்சம் ஏற் படுகிறது. அச்சத்தோடு மறுபடியும் அப்புலியின் தோற்றத்தைப் பார்க்கிறான். புலியானது பயிரைத் தின்பதாகக் காணப்பட்டது. என்றாலும், அவனுக்கு நம்பிக்கை வரவில்லை. 'புலி பசித்தாலும் புல்லைத் தின்னாது? என்ற எண்ணம் வருகிறது. ஆகையால் புலியாயிருந்தால் புல்லைத் தின்னாதே? இது புலியாகக் காட்சி யளிக்கிறதே? ஆனால் புல்லைத் தின்கிறதே? என்ற ஐயம் திரும்பத் திரும்ப வருகிறது. பின் நன்றாக உற்று நோக்கினான். புலி புல்லை உண்பதை நன்றாக உணர்ந்தான். உடனே இது புலியல்ல; நம்மை ஏமாற்றப் புலித் தோல் போர்த்த பசு என்ற முடிவுக்கு வந்தான். பெருந்தடியோடு சென் றான்; ஓங்கியடித்து விரட்டினான். அந்த வஞ்சப் பசு, அவன் அஞ்சித் தன்னிடம் வரும் வரை, எங்கே வந்து விடுவானோ, தன்னைப் பசு என்று அறிந்துவிடுவானோ என்ற அச்சத்தால், அப் புல்லைத் தானும் மகிழ்ச்சியோடு தின்னவும் இல்லை; புல்லால் பசி தீரவும் இல்லை.

பெரும் அடிபட்டு விரட்டப்பட்ட அம்மாத்திரமே அப் பசு பெற்ற பலன். அதுபோல, உலகினரை ஏமாற்ற முயற்சியும் உழைப்பும் அற்றவன், பிறர் பொருளேயும், மனேயையும் அடைந்தின்புறக் கருதி, தவ வேடம் பூண்டு வஞ்சிப்பதனுல், அவ் வஞ்சனே வெளிப்படுங் காறுமே, அவன் செயல் ஈடேறும். அதுபோதும் எப் போது தன் பொய் வேடம் வெளிப்பட்டு விடுமோ என்ற அச்சமே மீதூரப் பெற்றுத் துன்பமே அடை வான்.

> ''வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
> புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று''

என்று கூறுகிருர்.

வேடன் பறவைகளேப் பிடிக்கச் சூழ்ச்சி செய் வான். சில உணவுப் பொருள்களே வலேயின் நடுவே கொட்டி இறைத்துவிட்டுப் புதர் நடுவில் மறைந்து இருப்பான். பறவைகள், வலே கண்ணுக்குப் படாமை யால் உணவை உண்ணவரும். வரும்போது, வேடன் வெளிவந்து கண்ணியை இழுத்துக் காலே இறுக்கிப் பிடித்துக் கொன்று தின்பான். அதுபோலவே, தீயன், தன் பொய் வேடத்தில் மறைந்து, அவன் இன்சொல் என்னும் வலேயினேப் பரப்பி, நற்செயல் என்னும் உணவுப் பொருளே வீசி எறிந்து அந்நன்மைகளே அடைய வரும் மக்களாகிய பறவைகளேத் தன் தீய எண்ணம் என்னும் கொடிய முடிச்சுக்களால் இறுக்கி, அவா என்னும் பசியை நிரப்பத் துணிவான். அவன் கொலே செய்யும் கொலேஞனே ஆவன்; அருளொழுக்கம் பூண்டவன் ஆகான் என்பதனே,

> ''தவமறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து
> வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று''

என்று கூறுகிருர்.

'நான் இந்த உலகில் ஒரு பொருளின் மேலும் பற்றுடையேனல்லேன்' என்று சொல்லும் சொல்லால், பயனில்லை. அவன் பொய்யொழுக்கம் அவன் செய்யும் தீமைகளை வெளிப்படுத்துவதனுல், அவன் வேடமும் சொல்லும், பொய் என்பதனை வெளிப்படுத்தும். உலகில் கொடியர் பலர் உளர். அவர்கள், வெளிப்படையாகச் சொல்லாலும் செயலாலும் கொடுமை செய்வர். அவர்களை நாம் நம்பலாம். வேடம் பூண்டு வஞ்சிப்பானைவிடச் சிறந்த கொடியர் இருக்கவே முடியாது. ஏனெனில், நம்மை நல்லவன் என்று நம்பும்படி வைத்துத் தீமை செய்கிருன். ஆகையால், அத்தகைய தீயோர், குன்றி மணியானது, உடல் முழுதும் செந்நிறம் பெற்றிருப்பினும் மூக்கில் அதிகக் கருமை பெற்றிருப்பது போல, உடலெல்லாம் தவவேடம் பூண்டிருப்பினும் மனக் கறுப்புடையர் என்றறிதல் வேண்டும். இதனுல் உலகில் வேடநெறி நில்லாரே பலருளர். வேட நெறி நிற்பார் சிலரேயாவர். வேடத்திற்கேற்ற நெறிநிற்பார் வேடமே மெய்வேடம் என்றறிதல் வேண்டும். அம்பு இருக்கிறது; நல்ல கூர்மையும், நேர்மையும் உடையதாகத் தான் இருக்கிறது. ஆனுல் அது வில்லினின்றும் புறப்பட்டால் கொன்றுவிடுகிறது. யாழ் வளைவாகவும், நேர்மை யற்றும் இருக்கிறது. ஆனுல் அதனைத் தடவினுல் இசை இன்பம் பிறக்கிறது. ஆகையால், வேடம் சிறந்ததாயினும் செயல் கொடியதாயின், வேடங் கொண்டு அவனை ஏற்கலாகாது. வேடமிலனுயினும் செயல் தூயனுயின் அவன் செயல் பயன்படுமாற்றைக் கொண்டு போற்ற வேண்டும்.

> ''கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்ன
> வினைபடு பாலால் கொளல்''

இதுகாறும் கூறியவாற்ருல் ஒருவன் வேடம் பூண்டு தான் பிறரை வஞ்சித்து ஒழுகுவதினும் வேடம் பூணுமல் நல்ல மனத்தனுய் வாழ வேண்டும் என்பதும், மன

உறுதி யற்றவனே, வேடத்தால் பிறரை வஞ்சிக்க நினைக்கிருன் என்பதும், அவன் கொலைஞனினும் கொடியவன் என்பதும், ஆகையால் கூடா ஒழுக்கம் ஒருவனை நல்வழிக்குச் செல்லாதபடி தடுத்துவிடும் என்பதும், நல்வழிக்கண் நிற்பான் ஒருவன் வேடம் பூண வேண்டிய கட்டாயம் இல்லை என்பதும் பெறப்பட்டன.

*"மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்*
*பழித்தது ஒழித்து விடின்."*

## கள்ளாமை

பிறர் நலனை அடையக் கருதும் தீமையே தீமையிற் பெரிது என்ற ஒன்றைப் பலபடப் புனைந்து கூறலாம். ஆசிரியர் பெண்ணின்பத்தையும், பொன்னையுமே பெரிதாக எடுத்தோதுகிருர். முன்னே, பிறர் நலனுக்குரியாளை வஞ்சித்தலைக் கூடா ஒழுக்கம் என்ற தலைப்பில் பெரிதும் பேசிக் கண்டித்தார். களவு என்ற தலைப்பில் பிறர் பொருளை வஞ்சித்தலைக் கண்டிக்கிருர். இந்தக் காலத்தில் நாட்டில்-சமுதாயத்தில்-நிகழும் பெரிய புரட்சிகளும் பூசல்களும் என்ன என்று உற்று நோக்கினுல் நன்கு விளங்கும். வாழ்வில் மேம்பாடு என்ன என்பதையும் உற்று நோக்கினுல் ஆசிரியரின் குறிக்கோள் தெற்றென விளங்கும். உலக இன்பங்களுள், நாகரிக வாழ்க்கையில் சிறந்தது எது? ஒருவனும் ஒருத்தியும் கூடி வாழ்தலும், அவ் வாழ்க்கையின்பத்துக்குப் பொருள் முட்டுப்பாடு இன்மையுமே, சிறந்த நாகரிக வாழ்க்கையாகும். இந்த வாழ்க்கை அடிப்படையில்தானே எல்லா அரசியலும், கட்டப்படுகிறது. இந்தப் போர்வை அணிந்துதான் ஒரு நாட்டை மற்ருெரு நாடு வஞ்சிக்கவும் நினைக்கிறது. ஆகையால் ஒவ்வொரு தனி மனிதனும், பிறர் மனைவியரைக் கருதாமலும், பிறர் பொருளை வஞ்சிக்காமலும் வாழும் சீர்திருத்த வாழ்க்கையை மேற்கொண்டால், பூச

லேது? புரட்சியேது? இந்த உண்மையை அறிந்த நம் புலவர் பெருமான், கூடா ஒழுக்கம் என்ற தலைப்பில் இல் வாழ்க்கையின் ஒப்பற்ற பண்பாட்டையும், களவு என்ற தலைப்பில், பொருளைப் போற்றும், தேடும், அடையும் முறையினையும் எடுத்தோதிச் சிறப்பிக்கிறார். உலகத்தில் பெரும்பாலோர் பசிக்கு உணவும், மானத்துக்கு உடையும், காதலின்பத்துக்கு மனைவாழ்க்கையுமே இம்மனித வாழ்வின் குறிக்கோள் எனக் காலம் கழிக்கின்றனர். அவர்கட்கு, அது அவை முட்டுப் படும்போது, அவற்றைப் பெறுவதே உழைப்பாக நின்று விடுகிறது. பசிக்கும்போது உணவு வேண்டும். உடையில்லாத போது உடை வேண்டும். இன்பம் நாடும்போது இன்பம் வேண்டும் என்ற எண்ணமே மேலெழுகிறது. அதன்பின் அவர்கட்கு, என்ன வேண்டும் என்ற எண்ணம் உண்டாவதும் இல்லை. அவற்றைப் பெறுவதே பெரும் முயற்சியானபோது, பெற முடியாமல் நிற்கும் போது, அதன் பிறகு பெற வேண்டியதை நினைக்கவும், முடிவு செய்யவும், முயலவும் வழியில்லை. ஆகையால், உலக வாழ்வு சீரழிந்து, வெறும் அறிவுக்குப் புறம்பான, பொய்யான, நிலைக்காத அவாவில் வீழ்ந்து, அதனையும் முற்றுப்பெற அடையாமல் முடிந்துபோகிறார்கள். அந்த உணவைத் தன் முயற்சியால் பெற முடியாதபோது, எளிய உணவால் அமைதி பெறாதபோது, பிறர் உண்ணும் நல்லுணவைப் பெற அவாவுகிறான். அந்த உணவுப் பொருள் நேராகக் கிடைக்காதபோது, வஞ்சித்தாயினும் பெற நினைக்கிறான். அதுபோலவே உடையும். அதுபோலவே காம இன்பமும். தன் அளவில், தன் முயற்சியில், தான் தேடிய, தனக்கென்று அமைந்த, தானே அமைத்துக் கொண்ட உணவு, உடை, மனைவாழ்க்கையில் அமைதி பெறும் ஆற்றலின்மையே, பிறர் பொருளையும் இன்பத்தையும் வஞ்சிக்க நினைப்பதற்கும், வஞ்சிப்பதற்கும் உரிய காரணம் என்பதை முன்னே நாம் அறிந்து

கொள்ளவேண்டும். ஆகையால், முறையாக இளமை தொட்டு மக்களினத்துக்கு உண்மையான வளர்ச்சி முறையையும், வாழ்க்கையின் குறிக்கோளையும் எடுத்துக் கூறி, ஒழுக்க வளர்ச்சியினைப் புகட்ட வேண்டும். இல்லையேல், மக்கள் வாழ்வு வேறு ஆடம்பரங்களால் வளருமே தவிர, உண்மையான ஒழுக்க - நாகரிக வளர்ச்சியினை யடையமுடியாது. அதனால்தான் ஆசிரியர், அறிஞர்களால் இகழப்படாத நல்வாழ்வு ஒருவன் வாழக் கருதுவானாயின், அவன் பிறர் பொருளைக் கவரும் வஞ்சக நினைப்பில் விழுந்து, தீச்செயலாகிய களவில் அழுந்தாமல் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என்று கூறுகிறார். அங்ஙனம், பிறர் பொருளை வஞ்சிக்காதவனே தன் வாழ்க்கை நலமடைய நன்று முயற்சித்து நலமடைவான் என்பது சொல்லாமலே விளங்கும்.

''எள்ளாமை வேண்டுவான் என்பான் எனைத்தொன்றும்
கள்ளாமை காக்கதன் நெஞ்சு.''

தன் இன்பத்துக்குத் தன் முயற்சியே வேண்டப்படுமாயின், அம்முயற்சியைத் தடுக்கும் எந்தச் செயலையும் ஒருவன் செய்தலாகாது. பிறன் பொருளைக் களவு செய்ய மனம் எழுமாயின் தான் தேடவேண்டும், உழைக்கவேண்டும் என்ற மன எழுச்சி உண்டாகாது. பின் கவர்வதற்குரிய வழியை ஆலோசிக்கும். பின் அக்களவுச் செயலில் தள்ளிவிடும். ஆகையால், ஒருவன் உள்ளத்தாலும் களவு செய்ய நினைக்கலாகாது. அங்ஙனம் களவு செய்து பொருளை அவன் கொணர்வானாலும், நானுண்ணும்போதும், உடுக்கும் போதும், பிறர் இவனுக்கு, இவை ஏது என்று ஐயப்படுவரல்லவா? அதுகாலை அவன் மறைந்து வாழ நேரிடும். அல்லது, அப்பொருளை இழக்கவும் நேரிடும். அங்ஙனம் இழத்தல்தானும் சும்மா நிகழாது. துன்ப விளைவுகளோடு பொருளை இழப்பான். உயிரிழக்கும் அத்தனை

துன்பமும், என்றும் மறவாத அவமானமும், அழியாத பழியும் உண்டாகும். ஆகையால், களவுச் செயலானது எளிமையாகப் பொருளைப் பெறும் வழி என்று நினைத்து விட முடியாது. விளைவும் பழியும் பெரிதாக அமைந்து, இன்பமும் புகழும் இலதாகச் செய்கிற ஒரு பெரும் கொடிய செயல் என்றே கொளல் வேண்டும்.

''களவினால் ஆகிய ஆக்கம் அளவிறந்து
ஆவது போலக் கெடும்.''

''களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமம் தரும்.''

ஆகவே, வளர்ச்சி கருதி அருளுள்ளம் பெற்றுப் பிறர் பொருளையும் தன் பொருள்போல் போற்ற வேண்டும் என்ற எண்ணமுடையான் பொருளால் இன்பமடையலாம். அப்பொருளும் பிறர் பொருளை வஞ்சித்துப் பெறல் வேண்டும் என்ற எண்ணத்துக்கு இடங் கொடான். எவனொருவன் பிறன் பொருளை வஞ்சித்து வாழலாம் என்ற நினைவுக்கு வந்துவிடுகிறானோ, அவன் தன்னளவில் வாழவும் முடியாது; வாழவும் தெரியாது. ஏனெனில், உழைப்பின்றிப் பொருளைப் பெறுவதால், அருமை தெரியாது, இனமாகப் பெற்ற பொருளென நினைந்து அளவின்றிச் செலவு செய்வான். இல்லாதபோது மேலும் களவில் உள்ளம் செல்லுமேயன்றி, முயற்சியில் செல்லாது. எப்போதும் அவன் மனம் பிறர் பொருள் மேல் சென்றுகொண்டே இருக்கும்.

''அளவின்கண் நின்றொழுகல் ஆற்றார் களவின்கண்
கன்றிய காதலவர்.''

இதனால், அவனுக்கு அறியாமையும் தீச்செயலுமே வளருமன்றி, அறிவும் நற்செயலும் அறவே தோன்றா. தன்னளவறிந்து தன் முயற்சியால் வாழும் நல்வாழ்வுடையான் எப்படித் தன் உழைப்பின் பலனைப் பலர்க்கும் பயன்படுத்த நடுவூருள் பழுத்த மரம்போலப்

பல்லோரையும் நன்கு பாராட்டி வாழக் கருதுவானே அதுபோலவே, பிறர் நலனைக் கவரும் தீயவாழ்வுடையான், கள்ளவுள்ளத்தால் மறைந்தே வாழ்வான். நஞ்சுடைய நாகம், வளையில் கரந்துறைவது போல, அவன் கொடிய செயலும் நினைவும் பிறர்முன் வந்தால் வெளிப்படும் என்ற தீய நினைவால் மறையவே தூண்டும்.

''அளவறிந்தார் நெஞ்சத்து அறம்போல நிற்கும்
களவறிந்தார் நெஞ்சிற் கரவு.''

வளர்ச்சிக்குரிய நற்செயலை அவன் அறியாமையால், அதன் அருமையால், அவனால் செய்ய முடியாமையால் அழிவுக்குரிய களவுச்செயலால் அப்போதே அவன் அழிவைத் தேடிக்கொள்கிறான். உலகிலுங்கூட ஓர் இழிவழக்கு உண்டு. திருடினவன் வாழ்வதும், அவன் உயிரோடிருப்பதும், ஓர் இமைப்பொழுதும் நிச்சயமின்று. எந்த நேரத்திலும் அவனுக்கு இறப்பு எதிர் நோக்கிக்கொண்டே இருக்கும் என்ற கருத்தை வேறு வகையாகவும், அவனுக்கு மாத்திரம் அன்று அந்த அழிவு, அவனோடு தொடர்பு கொண்ட வாழ்க்கையுடையார்க்கும் அக்களவுப் பொருளை உண்டு உடுத்து அடைந்த அவர்க்கும் அந்த இழிவும் துன்பமும் உண்டு என்பதனையும் சேர்த்து, 'திருடினவன் பெண்டாட்டி என்றைக்கும் கைம்பெண்' என்ற பழமொழி வழங்கி வருகிறது.

''அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்றா தவர்.

களவுச் செயலுடையானை, சமுதாயம் வெறுத்து ஒதுக்கும். ஏன்? தானே சமுதாயத்தினின்றும் பிரிந்து ஒதுங்குவான். சுற்றத்தார் அவனை வெறுப்பர். உடன் வாழும் மனைவி மக்களும் வெறுப்பர். அன்றியும், அவன் உயிர் அவனுடலில் வாழ்வதற்கு ஒருப்படாது. அவன் தீய செயலால், அவன் உடல்படும் பாட்டால், 'ஐயா நீ

இந்த உடலைத் திருட்டினுல் படுத்தினபாடு போதும், வெளியே போ' என்று உடம்புகூட அவனோடு வாழ ஒருப்படாது என்ருல் என்னென்பது? அத்தனை பெரிய துன்பப்போராட்டத்துக்குரியது களவு என உணர்ந்து, மனத்தாலும், செயலாலும் களவினை ஒழித்து வாழ முற்படவேண்டும்.

> "கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை, கள்ளார்க்குத்
> தள்ளாது புத்தேள் உலகு."

# தீவினையச்சம்

மேற்கூறிய களவின்கண் நிற்பானுக்குப் பல இடையூறுகள் எதிர்ப்படும். தன் களவைத் தடுக்க முற்படுவார் தனக்குத் தீமைசெய்வர். அத்தீமையை எதிர்த்துத் தடுப்பதற்கும், தன் களவு வெளிப்படாமல் பாதுகாத்தலுக்கும் களவு தடைப்படுமாயின் தடையாக நின்றவரைக் கெடுப்பதற்கும் பல தீமைகளைச் செய்ய நேரிடும். ஆகையால், களவினுல் தனக்கு வரும் தீவினைகட்கும், களவு கருதித் தான் செய்யவேண்டிய தீவினைகளையும் ஒருவன் உளத்தில் சிந்திப்பாளுயின், களவென்னும் கரிய கொடிய செயல் அவனிடம் நிகழாது ஆகையாலும், தீவினை யஞ்சாதவனே பிறர்க்கு இன்னுசெயல், புலால் உண்ணல், கொலை முதலிய தீயசெயல்களை மேற்கொள்ளுகிருன் ஆகையாலும், தீவினையச்சம் வேண்டும் என்ற ஒன்று முன்னுக வைத்துப் பேசப்படுகிறது. தான் மேற்கொள்ளும் தீயசெயல், அறியாமையால் நிகழ்கிறது என்பதனை உணராமையால்தான் தீவினை நிகழ்கிறது. ஆகையால் ஒருவன் செயல் மேற்கொள்வதற்குமுன், நாம் என்ன செய்யப்போகிருேம், இதன் விளைவால் நமக்கு என்ன நன்மை? பிறர்க்கு என்ன நன்மை? என்பதை ஆராய்ந்து பின் தொடங்குவாளுகில் தீவினை நிகழாது. அங்ஙனம் ஆராய்பவனே உயர்ந்தவன்.

''தீவினையர் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர்
தீவினை என்னும் செருக்கு.''

தீயவை என்ற சொல் தீமைகள் என்ற பொருள் படும். தீ என்பதனோடு, பண்புப்பெயர் விகுதி மை சேர்ந்து தீமை என்றாகிறது. தீயின் தன்மை என்று பொருள்படுகிறது. தீ சுடுந்தன்மை உடையது. அது போல அவன் செயல், கேடுவிளைக்கும் தன்மை உடைமையால் தீய செயல் என்றும், அந்தப் பண்பைத் தீமை என்றும் கருதுகிறோம். ஆனால், ஆசிரியர் தீய செயல், தீயினும் கொடியது என்று கூறுகிறார். எங்ஙனம் என்று காண்போம். தீயானது, தன்னைச் சார்வானை மாத்திரம் சுடும்; தன்னைச் சுட்டுக் கொள்ளாது. ஆனால் தீய செயல் சார்வானையும் கெடுக்கும். தீய செயலைச் செய் வானையும் கெடுக்கும். தீயானது, சாரும்போதுதான் சுடும். பின் சுடாது. ஆனால் தீய செயல் சாரும்போதும் கெடுக்கும்; பின்னும் கெடுக்கும். தீயானது, தூரத்தில் உள்ளவனைச் சுடாது. தீயசெயல் தூரத்தில் உள்ளானை யும் கெடுக்கும். ஆகையால், தீய செயல் தீயினும் கொடிது என்று கூறுகிறார்.

''தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும்.''

காலத்தினாலும் இடத்தினாலும் வேறுபட்டவனையும் சென்று கெடுப்பது தீய செயல். அது மட்டுமின்றிச் செய்தவனையும், வேறு உடம்பிலும், வேறு காலங்களி லும் சென்று துன்பப்படுத்தும் தீய செயல் என்றறிதல் வேண்டும். ஆகையால்தான் நம் முன்னோர் 'வினை விதைத்தவன் வினையறுப்பான்; தினை விதைத்தவன் தினையறுப்பான்' என்ற பழமொழி கூறினர். பகைமை கருதியோ அல்லது தன்னலம் கருதியோ வெகுளியின் பாற்பட்டுப் பிறர்க்குத் தீங்குசெய்ய நினைவானாயின் பின்னால் விளையும் பயன் தீமையாகவே இருக்குமாத லால் அறிவிற் சிறந்தவன் தனக்கு வரும் தீங்கு கருதி

யாவது பிறர்க்குத் தீங்கு செய்யான். வறுமை காரண மாக முயற்சி இல்லாத மடியுளான் பிறர்க்குத் தீமை செய்து இன்பம் அடையலாம் என்று கருதுவானுயின், பின்னும் வறுமைத் துன்பமே யன்றி, பிற துன்பங் களையும் தேடிக் கொண்டவனுவான். தான் மாத்திரம் பிறர்க்குத் தீமை செய்துவிட்டுத் தனக்குப் பிறர் நன்மை செய்ய வேண்டுமென்று கருதினுல் அஃது எங்ஙனம் முடியும்? ஆகையால் தனக்குத் துன்ப மின்றி வாழ வேண்டும் என்பதற்காவது, தான் பிறர்க்குத் தீமை செய்யாது வாழவேண்டும். பகல வன் பனிபடு காலையில் கடல் முகட்டில் காட்சி யளிக் கும்போது அவன் ஒளியின் அழகை நேர் நின்று நோக்குவாரின் நிழல் நீண்ட தூரம் பின்னின்று காட்சி யளிக்கும். பகலவன் மேலே எழ எழ நிழலும் சுருங்கி வரும். உச்சிப் போதிலும் காண்பானது நிழல் காலடி யையே சுற்றி நிற்கும். நிழல் ஒருபோதும் அவனை விட்டுப் பிரிவதில்லை; பிரிக்கவும் முடியாது. அது போலவே ஒருவன் செய்த நன்மை தீமைகள் அவனை இன்ப துன்ப நுகர்ச்சிகளுக்கு உள்ளாக்கிவிடுமே தவிர விட்டு விலகா.

"தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வியாது அடியுறைந் தற்று."

ஆகையால், ஒருவன் தன் வாழ்வில் கருத்துடை யானுய்த் தனக்குத் துன்பம் வாராது பாதுகாத்துக் கொள்ளவேண்டின், இன்ப விளைவுகள் ஏற்படவேண் டின் எக்காலத்தும் மறந்தும் பிறன் கேடு சூழாது வாழ் வானுக. இங்ஙனம் தீவினைக்கு அஞ்சி வாழ்பவன் ஒழுக்கம் உடையனுய் வாழ்வான்.

# ஒழுக்கம்

ஒழுக்கம் பல திறப்படும். ஒழுக்கத்தில் முன்னிற்பது, நீரானது பள்ளங் கண்டவழி ஓடுவதுபோல கண்ட இடத்தில் மனம் சென்ற வழிச் செல்லாது மனத்தை நிறுத்தி நன்மை இது, தீமை இது என்றும், தக்கது இது, தகாதது இது என்றும், செய்யக் கூடியது இது, செய்யக்கூடாதது இது என்றும் பகுத்துணர்ந்து நன்மை, தக்கது, செய்யக் கூடியது ஆகியவற்றிற்சென்று, தீமை, செய்யக்கூடாதது, தகாதது ஆகியவற்றினின்றும் விலகி நிற்றலே ஒழுக்கம் உடைமை. எவ்வாறு நீரானது மாமழையாய் மலையில் பெய்தபோது பெருக்கெடுத்து நிலம் நோக்கி ஓடிவருகிறது? அப்பெருநீரை இருமருங்கினும் கரைகட்டி ஒழுகச்செய்து அது பாழ்பட்ட காட்டிலும் பாலைவனத்திலும் பயனின்றிப் போகச் செய்யாது, பண்பட்ட வயலிலும், வாய்க்காலிலும்வடியும்படியாகச் செய்துபயனெய்துமாறு போல, ஐந்து புலன்களின் வழியாக மனமானது ஓடிக் கண்டவாறு கண்ட இன்பங்களை நுகர்ந்து பாழ்பட்டுப் போகாது, அறிவென்னும் அணைகட்டித் தடுத்து நடுவு நிலை எனும் வாய்க்காலால் ஒழுக்கம் என்னும் உயர் வயலில் செலுத்தி இன்பமென்னும் இனிய விளைவினை எய்தல் வேண்டும். ஆகவே, ஒழுக்கம் உயர்ந்த இன்ப விளைவுக்கு இருப்பிடம் ஆதலின் ஒழுக்கத்தை மிகச் சிறந்த பொருளாகக் கருதிப் போற்றவேண்டும்.

''ஒழுக்கம் விழுப்பம் தரலால் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்.''

ஒழுக்கமானது மனிதப் பிறவியில் சிறந்த மேன்மையைக் கொடுக்கிறது. மனிதப் பிறவியே மற்றைய பிறவியினும் சிறந்தது. அந்த மனிதப் பிறவியை எடுத்த உயிர் அம் மக்களுட் சிறந்தவராக வாழக் கருதுவது இயல்பு. அந்தச் சிறப்பினை இந்த ஒழுக்கம்

கொடுப்பதால் அந்த ஒழுக்கத்தை உயிரைவிடச் சிறப்பாகப் போற்ற வேண்டுமென்று ஆசிரியர் வற்புறுத்துகிறார். ஒருவன் தன் வாழ்நாளில் குடிமையால், செல்வத்தால், கல்வியால், பிறர் நலம் பேணலால், இன்னோரன்ன பிறவற்றால் பெருமையடைகிறான். ஆனால் இவ்வளவு இருந்தும் ஒழுக்கத்தை விட்டுவிடுவானானால் அவனுடைய பிற பெருமைகளனைத்தும் இலவாய்க் கழிகின்றன. ஆகையால் அவனுடைய முன்னோர் பலரும் தேடி வைத்த பெருமைகூட இவன் சிறுமையால் இல்லையாய் விடுவதைக் காண்கிறோம். எனவே ஒருவனுக்கு உண்மையான குடிப் பிறப்பு என்பது எது? ஒருவனுக்கு உண்மையான செல்வம் என்பது எது என்றால், எந்த ஒன்று உண்மையான உயர்வளிக்கிறதோ அதுவே குடிமையும் செல்வமும் ஆகும். அதனைத்தான் ஆசிரியர்,

> "ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்
> இழிந்த பிறப்பாய் விடும்."

என்றும்,

> "பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்தோம்பித்
> தேரினும் அஃதே துணை"

என்றும் கூறினார்.

ஒருவன் கல்வி பெற்றிருப்பானானால் பல நூல்களை ஓதி நுண்ணறிவு பெற்றிருப்பான். அவன் நூலறிவு குறையக் குறைய நுண்ணறிவும் குறையும். வைத்ததொரு கல்வி மனப் பழக்கமாதலின் மறப்பினால் நூலறிவு குறையும். ஆனால் மறந்த ஒன்றைத் திருப்பியும் படித்து மனப் பழக்கம் உடையனாய் நுண்ணறிவு பெற்றுக்கொள்ளலாம். மேலும் மேலும் வளரவும் முடியும். ஆனால் ஒருவன் உயிரினும் ஓம்ப வேண்டிய ஒழுக்கத்தை இழந்துவிடுவானானால், தன் சிறந்த மனிதப் பிறவிக் கேற்ற நன்னடை தவறுவானானால்

அவன் உயர்வு இழந்து மனிதப் பிறவியினும் இழிந்த பிறவியாகவே கருதப்படுவான். ஆகையால் மனிதப் பிறவி உயர்பிறவி என்று பார்ப்பவன் ஒழுக்கத்தினின் றும் தவறக்கூடாது.

"மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்."

எப்படிப் பொருமை உடையவனிடத்தில் செல்வம் நின்று நிலைபெருதோ, அதுபோலவே ஒழுக்கம் இல் லாதவனிடத்தில் உயர்வு நிலைக்காது என்ற உண் மையை அறிந்த சான்ரோர் ஒழுக்கத்தினின்றும் தளர்ச்சி யடைய மாட்டார். இருகரையும் இன்றிப் பெருகுகிற ஆறு புரண்டு சென்று வயலையும் ஊரையும் அழித்து நீரும் பாழாவதுபோல ஒழுக்கமில்லாதவன் பிறரையும் கெடுத்துத் தானும் கெடுகிருன். கரையுடைய ஆறு கால்வாயின் வழியாக வயலிற்சென்று பயன்பட்டு வழி பாட்டினைப் பெறுவதுபோல ஒழுக்கம் உடையான் தானும் பிறர்க்குப் பயன்பட்டுத் தன்னையும் பிறர் போற்றும்படி வாழுகிருன்.

"நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும்."

ஒழுக்கம் உடையவன் மனம் தூயனுய், சொல் தூயனுய், செயல் தூயனுய் இருக்கவேண்டும். மனம் தூய்மையைக் காட்டுவது சொல்; செயலைப் பயனடை யச் செய்வதும் சொல்தான். ஆகையால் ஒழுக்கத் தைக் கடைப்பிடிப்பான் ஒருவன் தவறியும்கூட தீய சொற்களைச் சொல்லிவிடலாகாது. உலகில் ஒரு மனி தன் கல்வி பயிலுங்கால் அறிவுக் கென்று தன்னைவிடப் பெரியோர் செய்த நூல்களை நன்று படிக்கிருன்; அக் கல்வியால் நுண்ணறிவும் வாய்க்கப் பெறுகிருன். என்ருலும் காலமறிந்து, இடமறிந்து, செய்வினையின் மூலம் அறிந்து, விளைவு அறிந்து, காலத்துக்கும் சமுதாயத்துக்கும் ஏற்ற ஒழுக்கக் கல்வியை மாத்திரம்

கல்லாஞயின் அவன் கற்றவஞகக் கருதப்படலாமே யன்றி அறிவுடையஞக உலகோரால் ஏற்றுக்கொள்ளப் பட மாட்டான்.

> ''உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
> கல்லார் அறிவிலா தார்.''

## விருந்தோம்பல்

இங்ஙனம் ஒரு மனிதன் காலத்துக்கும் இடத்துக்கும் ஏற்பப் பயன்படும் வகையிஃனயறிந்து மனம் தூயஞய், சொல் தூயஞய் வாழக்கருதும் மனிதன் வாழ்க்கையில் தீய செயல்களை விலக்கி நல்ல செயல்களை மேற்கொள்ளக் கருதி அன்பு மீதூரப் பெற்று மனேவியையும் மக்களேயும், சுற்றத்தையும் பேணி வாழுங்கால் விருந்தினரைப் போற்ற முன்வருகிருன். விருந்தினர் என்பார் இதுகாலே நாம் கருதும் சுற்றத்தார் அல்லர். 'விருந்தே புதுமை' என்பது தொல்காப்பியம். எனவே, நம்மிடத்துத் தொடர்பின்றிப் புதியராய் வருவோரே விருந்தினராவர். அவர் இருதிறத்தினர். முன்னமேயே நம்மையறிந்து அதனுல் வந்தோரும், இப்போது வந்தவர் இனி எப்போது வருவார் என்று எதிர்பார்க்க முடியாது காரணங் கருதாது வந்தோரும் என்று இரு திறத்தினர். இவ்விரு வகையினருமே விருந்தினராவர். நம்மிடத்தில் வரும் சுற்றத்தாரையும் மனேவி மக்களேயும் போற்றி வாழ்வது கடமையைச் செய்வதாகுமே தவிர அன்புச்செயல் ஆகாது. நாம் அறியாது வந்தாரை நமக்கு இவர் திருப்பிச் செய்வார் என்று கருதாமல் செய்கின்ற உதவியே அன்புச் செயலின்பாற்படும். அதனுல்தான் திருவள்ளுவஞர் அன்புச் செயல் அறச் செயலுக்கு முதன்மையாகத் தன்னிடம் வந்த விருந்தினரை ஓம்புதல் என்னும் தலேப்பில் பல அருங்குறள்களே அருளுகிருர். ஒரு மனிதன் அன்பை வளர்த்துக்கொள்வதற்கு வீட்டிலிருந்து

மனைவி மக்களோடு சுற்றந்தழுவ வாழும்போது தனது இன்ப வாழ்க்கையில் ஒரு சிறிது தன்னை நாடி வருவோர்க்கும் பங்கிட்டுக் கொடுப்பதுதான் விருந்தோம்பல் என்னும் உயர்ந்த அறம். அதனால்தான்,

> ''இருந்தோம்பி இல்வாழ்வது எல்லாம் விருந்தோம்பி
> வேளாண்மை செய்தற் பொருட்டு''

என்று கூறினர்.

ஒரு பெரிய மரம். பல கிளைகள். அடர்ந்த இலைகள். தண்ணென்ற நிழல். பூவும் பிஞ்சும் காயும் கனியும். நீண்ட தூர வழிப்பாதை. அதன் நடுவேயுள்ளது அந்த மரம். வான் வளர்ந்த தோற்றம். காண்பார்க்குப் பச்சைப் பசேலென்ற இனிய காட்சி. வந்து தங்குவார்க்கு நறுமணமும் குளிர் நிழலும் கொடுத்து உதவுகிறது. பசித்து வரும் பறவைகளுக்குப் பழமும் காயும் பரிந்து அளிக்கிறது. மரம் பழுத்தால் வௌவாலை வா என்று இரந்தழைப்பார் இவ்வுலகில் யாருமில்லை. அது போலத்தான் ஒரு இல்லறத்தான் வாழ்வு. அவன் மனைவி மக்களோடு வாழும் தோற்றமும், அவன் உழைப்பாற் பெறும் செல்வமும் சிறப்பும் மக்களிற் பலர் மனத்தைக் கவருகிறது. வழி நடப்போரும் வானுறை பறவையும் மரத்தின் நிழலையும் பழத்தையும் நாடிச் செல்வதுபோல வாழ்க்கையின் இடர்ப்பட்டோரும் பிறரும் அவன் வாழ்வு நாடி அவனைச் சார்வர். மரம் தண்ணிழலையும், காய் கனிகளையும் கொடுத்துக் காப்பாற்றுவதுபோல இவன் தன்னியல்பால் இன்முகமும் நற்செல்வமும் கொடுத்துக் காப்பாற்றுவதே அன்பின் பெருக்குக்குரிய செயல் ஆகும். அங்ஙனமின்றிப் பற்றுள்ளம் உடையவனாய், தன் பொருளை ஈத்துவக்க மனமிலானாய் வாழ் வானாயின் அவன் வாழ்வு வீணாகும். அவன் தன்னை நோக்கி வருவாரைத் தாழும்படிச் செய்து தன் வாழ்வையே பெரிதெனக் கருதின் அது நஞ்சு வாழ்வாகும். சர்க்கரையில் இனிப்பு இருக்கிறது என்றால்,

அந்த இனிப்பு சர்க்கரைக்குத் தெரியாது; உண்பவனுக்கே புலப்படும். அதுபோல, ஒருவன் வாழ்வு இன்பவாழ்வென்ருல் அது அவனுக்குத் தெரியாது; அவனைச் சார்ந்து வாழ்வோர்க்கே தெரியும். அவர்கள் இன்பப்படுவதைக் கண்டு தன் வாழ்வு இன்பமுடையது என்று அறியவேண்டும். ஆகையால் தன்னிடம் வரும் விருந்தினரைப் புறங்காக்க வைத்துத் தானுண்டல் அது அமுதமேயாயினும் நஞ்சன்றி நல்லுணவு ஆகாது.

"விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று."

எவனொருவன் தன்னிடம் வரும் விருந்தினரை இன்முகத்தான் நன்மொழி கூறி ஏற்று உணவளித்து ஓம்புகிருனே அவன் வாழ்வு துன்பத்தில் வீழ்ந்து பாழாவது என்பது ஒருகாலும் இல்லை. நாள்தோறும் தன்னிடம் வரும் விருந்தினரைப் போற்றுவானிடம் செல்வம் என்னும் திருமகள் மகிழ்ந்து உறைவாள். அதாவது, அவனே செல்வப் பயனை உடையன் ஆவான். அவன் செல்வம் பல்லோர்க்கும் பயன்படலால், அவனே உலகுக்கு ஓர் உபகாரியாய் அமைகிருன். அவனுக்கென்று ஒரு பொருள் வேண்டியதில்லை. அவனுடைய நிலம் நற்பயனையளிக்கும். எவன் ஒருவன் தன் கடனைச் செவ்வனே ஆற்றுகிருனே அவனுக்கு உலகம் இயற்கையாகவே, தன் கடமையைச் செய்கிறது. ஆகையால் அவன் விதையிட்டுப் பயிர் செய்து வாழவேண்டும் என்பதில்லை. தானே நற்பலனைத் தரும். அதாவது உலகினர் அவன் உழைப்பைத் தம் உழைப்பாய் நிரப்புவர்.

"வித்தும் இடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம்."

பிறர்க்குப் பயன்பட்டன போக மிச்சிலை உண்டு வாழும் வாழ்க்கையைக் கண்டவர்கள் அவன் வாழ்வுக்

கமைந்தன போக மிச்சிலை நாம் உண்டு வாழ்வோம் என அவன் வாழ்வைப் பெரிதும் போற்றுவர் என்ற உண்மை விளங்க வைப்பது அக்குறள் என அறிகிறோம்.

நாம் நம் வாழ்க்கையில் பலரைப் பல காலங்களில் நம் வீட்டில் இருந்து வரவேற்று உபசரித்து உணவு உடை கொடுத்துக் காத்து வாழ்ந்து வருவோமானால் இங்ஙனம் நம்மிடம் நலம் பெற்ற அனைவரும் நம்மை மறவாது எப்போது அவரை நாம் உபசரிப்பது என்று பலகாலம் சிந்தித்துக்கொண்டே இருப்பர். அவரும், பலகாலமும் காத்திருந்து உபசரிக்க நாம் விருந்தினராக அமைய நேரிடும் உயர்ந்த வாழ்வையளிப்பது அந்த விருந்தோம்பல் என்னும் பேரறமே யாகும். அன்றியும் இறந்துபட்ட ஞான்றும், அறவாழ்க்கையால் மேம்பாடுற்று, வானவர் உலகிலும் பெரும் சிறப்புடை விருந்தினனாக வரவேற்கப்படுவான். இங்கு ஒரு வரலாறு நினைவுக்கு வருகிறது.

பண்டைக் காலத்துக் கபிலனும் பாரியும் என்ற இரண்டு பெரிய புலவனும் புரவலனும் நட்புரிமை பூண்டு வாழ்ந்தனர். பாரி என்ற புரவலன் தன்னிடம் வரும் புலவர் முதலாய விருந்தினரைப் பேணி இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்ந்து வந்தான். அதுபோது அவனிடம் அழுக்காறு கொண்ட முடியுடை மூவேந்தர் அவன் உயிரைக் குறையிரந்து போர் கொண்டனர். போர் முடிவில் புகழுடலை நிறுத்துப் பொன்னுலகு சென்றான் பாரி. பொன்னுலகம் காக்கும் புரந்தரன் மண்ணுலகில் மாயாய்ப் புகழ் பெற்ற பாரி வருகிறான் என்பதறிந்து விண்ணுலக முரசமார்ப்ப விண்ணவர் புடைசூழ விரும்பி விருந்தேற்றுக்கொண்டான். அப்பாரியின் புகழ் நிறுத்த கபிலன் என்னும் புலனழுக்கற்ற அந்தணாளன் பாரியின் புகழ் பாடும்போது விண்ணுலகில் பாரியை விருந்தேற்ற இந்திரனின் முரசொலி

ஈண்டுக் கேட்டது என்று எடுத்து இயம்பினன். இவ் வரலாறு,

"செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு"

என்ற திருக்குறளை உண்மைப்படுத்துகிறதன்றோ?

தமிழ் நாட்டில் வேள்வி என்பது தானே விரும்பிச் செய்யும் அறத்தினை உணர்த்துவதாகும். தன்னுழைப் பால் வந்த பலனைத் தக்கார்க்கு உதவுவதே வேள்விப் பயன் என்று கண்டார் திருவள்ளுவர். அதனால்தான்,

"தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தல் பொருட்டு"

என்று வழங்கினர். ஆனால் தக்காரை நாடிச் சென்று உதவுவது யாங்ஙனம்? தகுதியை அறிவதுதான் எப்படி? இயலாதன்றோ! ஆகையால் தன்னை நாடி வரும் நல்விருந்தினரை நாம் உபசரித்துப் பாதுகாத் தலே வேள்விப்பயன் கைகூடுவதாகும். தன்னை நாடி வரும் விருந்தினரின் அளவிற்கு வேள்வியின் அளவும், விருந்தினரின் தகுதி அளவிற்கு வேள்விப்பயன் அளவும் வந்து தாமே அமைகின்றன. நல்லான் ஒருவன் இல்லிலிருந்து அறவாழ்க்கை நடத்துவானா யின் அவனை நாடிவரும் விருந்தினரும் நல்லாராகவே அமைவர். தீயர் அவனை நாடி வருதல் என்பது கூடாது. அப்படியே தீய வாழ்க்கை உடையவனிடத்து நல்லார் வருவதென்பதும் முடியாது. எனவே தன்னு டைய இல்லற வாழ்க்கையின் சீர்பாட்டின் அளவே தன்னை நாடிவரும் விருந்தினரின் தகுதியின் அளவாக அமையும். ஆகவே ஒருவன் தக்க விருந்தினரை உபசரிக்க வேண்டுமானால், தன்னை நாடித் தக்கோர் விருந்தினராக வரவேண்டுமானால் முதலில் தான் தகுதி உடையவனாக வாழ வேண்டும். இந்த அற உண்மையை வள்ளுவனார்,

"இனைத்துணைத்து என்பதொன்று இல்லை விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன்"

என்று அருளுகிருர்.

இல்லறத்தில் எவ்வளவோ அரிது முயன்று செல்வத்தைத் தேடிப் பாதுகாக்கிருன். வாழ்நாளெல் லாம் வருந்தித் தேடிய பொருளை வைத்து இழக்கும் படியான காலம் ஒன்று வருகிறது. அதுபோது அவன் தன்னைச் சூழ்ந்துள்ள மனைவி மக்கள் சுற்றம் பொருள் இவற்றையெல்லாம் உற்று நோக்குகிருன். தன்னைத் தொடர்ந்து வரும் பொருள் ஒன்றையும் கண்டிலன். அப்போது நினைக்கிருன்: "என்னேடு தொடர்ந்து வருவதற்கு ஒன்றும் செய்து கொண்டேனில்லையே, எல்லாம் விட்டுப் பிரிகின்றனவே! வாழ்நாள் வீழ்நாள் ஆயிற்றே!" என்று கவல்கிருன்.

"பரிந்தோம்பிப் பற்றற்றேம் என்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார்."

அதனுல் செல்வம் உடைய காலத்து விருந்தினரை உபசரிக்காததே செல்வ நிலையில் வறுமை என்று அறிய வேண்டும்.

இல்லறப் பண்பு அன்பு என்பது. அவ்வன்பு வளர்ச்சிக்குத் துணைசெய்வது விருந்தோம்பல் என்பது. அன்பை வளர்த்துக் கொள்ளாதவன் அறிவுடைய ஞகான். தன்னிடம் வரும் விருந்தினரைப் பாதுகாக் காதவன் அன்பு மீதூரப்பெற்றுத் தானே பிறரிடம் சென்று உதவிசெய்யவும் மாட்டான். ஆகையால் அவன் இல்லறத்தின் பயஞகிய ஈகை என்னும் அருஞ் செயலைப் பெருன். அதனுல் அவன் வாழ்க்கை அறிவுடை வாழ்க்கை ஆகாது. அதனையே,

"உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா
மடமை மடவார்கண் உண்டு"

என்று அழகுபடக் கூறினுர். பூக்களுள் பலவகை.

வாடா மல்லிகை என்று கேள்விப்படுகிறோம். வண்டு மொய்க்காத பூவை அறிகிறோம். தொட்டால் சிணுங்குவதும் உண்டு. ஆனால் அனிச்சமென்ற பூ மோப்பக் குழைந்துவிடும். அந்த அனிச்சப் பூவினும் மெல்லியர் விருந்தினர். அவர்களுடைய நெஞ்சமாகிய பூ விருந்து ஏற்பானுடைய திரிந்த நோக்கங் கண்ட மாத்திரத்தில் வருந்திக் குழைந்துவிடும். ஆகையால் தம்மிடம் வரும் விருந்தினரை மகிழ்ச்சியோடு இன்முகங் காட்டி ஏற்கானாயின் அவர்கள் உள்ளம் வருந்திப் பிரிந்து போவர். அவ்வில்லறத்தான் வாழ்வு நடுவூருள் நச்சு மரம் பழுத்ததுபோல் பயனற்றதாய் முடியும். எனவே விருந்தினரைக் கண்ட மாத்திரத்தில் மனத்தில் மலர்ந்த அன்பினை முகத்தில் மலர்ந்துகாட்டி ஏற்றலே அன்புச் செயலுக்கும் அறச் செயலுக்கும் அடிப்படையாகும்.

"மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து."

## ஈகை

இதுகாறும் தன்மாட்டு வந்த விருந்தினரைப் பாதுகாத்து அன்பை வளர்த்தவன் அவ்வன்பின் வளர்ச்சியால் ஆர்வம் மீதூரப்பெற்றுத் தொடர்பில்லாதாரிடத்துக் காணும் துன்பத்தைத் தானே தன் இரக்க உள்ளத்தால் விரைந்துசென்று நீக்கக் கருதுகிறான். உணவின்றி வாடுவார்க்கு உணவும், உடையின்றித் தவிப்பார்க்கு உடையும், உறையுள் இன்றி இருப்பார்க்கு உறையுளும் இன்னும் பிற வாழ்க்கைத் துறைகளுக்கு வேண்டுவனவற்றையும் வறுமையால் வருந்தி வந்தார்க்குத் தம் இரக்க உள்ளத்தால் இரங்கி ஈவதே ஈகை எனப்படும். அங்ஙனமின்றித் தன்னை ஒத்தவன் தன்னிடத்து வந்து ஒன்று பெறக் கருதுவானாயின் அவனுக்குத் தந்து உதவுவது ஈகை யாகாது. தருதல் எனப்படும். தன்னிற் சிறந்தானொருவன் தன்னிடத்து

வந்து ஒரு பொருளைப் பெறுவது பிறிதொரு பொழுது அதனினும் பெரும்பொருள் பெறுதற்கு ஏதுவாய் அமைதலின் அதுவும் ஈகையாகாது. அது 'கொடு' என்று கேட்ட அதிகாரத்தின் பாற்படும். அதனால்தான் தமிழில் பிறரிடம் பொருள் பெறுவதை மூன்றுவகை யாகப் பிரித்தனர். வறுமையால் வாடி வாழ வகை யின்றி, இழிந்த நிலையில் இரப்பவர்க்கு 'ஈ' என்ற சொல்லும், சமநிலையில் பிறிதொரு பொழுது தான் தந்து உதவுவான் பெறுதலை 'தா' என்ற சொல்லும், தக்கான் ஒருவன் தன்னில் தாழ்ந்தான் இடம் பெறுதலை 'கொடு' என்ற சொல்லும் குறிக்கும் என வகைப் படுத்திக்கூறினர். இதனை, 'ஈ', 'தா', 'கொடு' எனும் மூன்றும் முறையே, 'இழிந்தோன், ஒப்போன், மிக்கோன் இரப்புரை' என்று சிறு இலக்கண நூலிலும் கூறிப் போந்தனர். ஆகையால் வறியவர்க்கு அவர்படும் துன்பம் கண்டு இரங்கி ஈதலே ஈகை எனப்படும். அங் ஙனமின்றி இதுபோது கொடுத்தால் பின்னொரு காலத் தில் பயன்படும் என்று கருதியோ அல்லது இம்மைச் செய்தால் மறுமைக்கு ஆம் எனும் அறத்தை விலை பகரும் நினைவோ ஈகையாகாது. அவையெல்லாம் குறி யாகிய லட்சியத்தை எதிர்பார்த்த தன்மை உடையன வாகும். இரக்க உள்ளம் அங்கு வேலை செய்யாது.

"வறியார்க்கு ஒன் றுஈவதே ஈகைமற் றெல்லாம்
குறிஎதிர்ப்பை நீரது உடைத்து."

உலக நாகரிகங்களுள் தலைசிறந்தன இரண்டு. ஒன்று திராவிட நாகரிகம். மற்றொன்று ஆரிய நாகரிகம் என்பது. ஆரிய நாகரிகத்தில் மனிதனுடைய வரலாறு வருணம் என்றும், ஆச்சிரமம் என்றும் பிரிக்கப்பட்டு வாழ்க்கை முறையும் ஒழுக்க முறையும் கற்பிக்கப்படுகிறது. வருணம் நால்வகையினதாய் அவ் வவ் வருணத்தார்க்குரிய செயல்கள் வெவ்வேறாய் விரித் துரைக்கப்படுகிறது. அவற்றுள் முதல் வருணத்தானாய

பிராமணன் ஆறு தொழில்களை உடையவன் என்றும், அவ் ஆறு தொழில்களுள் ஏற்றல் என்பது ஒன்று என்றும் அந்த ஆரியமுறை கூறுகிறது. ஆனால், திராவிட நாகரிகத்தின் உயர்ந்த வாழ்க்கை வரலாற்று நூலாக இருக்கும் திருக்குறள் பிறப்பையும் தொழிலையும் வேறு வேருகப் பிரிக்கிறது. வருணங்கள் என்பது பிறப்பினால் உயர்வு தாழ்வு பெறுவது. ‘பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்’ என்பது திருக்குறள். தொழிலால் பிறவி சிறப்பெய்துகிறது என்பது ‘தொழில் வேற்றுமையான் சிறப்பு ஒவ்வா’ என்பதைத் திருக்குறள் கூறுவதால் அறியலாம். தொழிலிற் சிறப்பாவது தன் உழைப்பானது பிறருக்குப் பயன்படும் வகையில் அமைவது ஆகும். பிறர் உழைப்பின் நலனைத் தான் அடையக் கருதுவது இழிந்த தொழிலாகும். அதனால்தான் வள்ளுவர்,

> “ தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
> வேளாண்மை செய்தற் பொருட்டு”

என்றும்,

> “ இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
> வேளாண்மை செய்தற் பொருட்டு”

என்றும் கூறினர்.

இத்திருக்குறளினால் போந்த உண்மை யாதெனின், தன் உழைப்பின் பலனைப் பிறருக்குப் பயன்படுத்த வேண்டும் என்பதேயாகும். அங்ஙனமின்றிப் பிறருடைய உழைப்பின் நலனைப் பெறுவதால் அறமோ இன்பமோ பிற சிறப்புக்களோ வருவதாய் இருப்பினும் அது தாழ்வுக்குரிய செயல் என்று தமிழர் கருதினர். அன்றியும், தன்னுடைய உழைப்பின் பலனைப் பிறருக்குக் கொடுப்பதால் புகழன்றிப் பழி வருமாயினும், புண்ணியமன்றிப் பாவமே நிகழினும், மேலுலகமின்றி நரகமே புகினும்

தமிழர் கொடுத்தலையே கடமை என்றும் அறமென்றும் கருதுவர் என்ற திராவிட நாகரிகத்தின் உயர்வை,

'' நல்லா றெனினும் கொளல்தீது மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று''

என்ற திருக்குறளால் விளக்கிக் காட்டினர். இனி, கொடுப்பானும் ஏற்பானும் எந்நிலையில் இருக்க வேண்டும் என்பதைச் சிறிது உற்றுநோக்குவோம். ஏற்றல் இழிவாதலின் வறுமையாலோ வாழ்க்கை நடத்த மாட்டாமையாலோ பல்லெலாம் தெரியக் காட்டிப் பருவரல் முகத்தில் கூட்டிச் சொல்லெல்லாம் சொல்லி நாட்டித் துணைக்கரம் விரித்து நீட்டி மல்லெலாம் அகல ஒட்டி மானம் என்பதனை வீட்டி ஒருவன் இரக்க வருகிருன். இவ்வளவு இழிந்த நிலையினைக் கண்ட மாத்திரத்தில் மனத்தில் இரக்கம் மீதூறி இளகினவனுய் அவன் தன் குறையிரந்து சொல்வதற்கு முன் அவன் குறிப்பறிந்து கொடுக்கவேண்டும். அல்லாமலும் இந்த இழிவான இரப்புரையைத் தன்னிடத்திற் சொன்னற்போல் மற்று மொருவ னிடத்துச் சொல்லாமல் அந்த அளவிற்கு மனம் உவந்து கொடுக்கவேண்டும். மேலும் பொருட் பற்றினுல் கேட்பவனுடைய உளம் நோகும்படித் தானும் இல்லை என்ற தீய உரையைச் சொல்லாது கொடுக்க வேண்டும். இந்த நிலையே தமிழனின் தலையாய குலப் பிறப்பின் குணமாகும்.

'' இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே உள.''

இந்தத் தகுதி ஒருவனிடத்தில் வந்து அமைய வேண்டுமானுல் கேட்பார் மிகப் பலராய் வந்து கூடுவர். அத்தனை பேரையும் ஏற்று அவர்க்கு ஏற்றவாறு ஈந்து மகிழ்வதென்பது அரிது. ஆகையால் இரத்தல்தான் துன்பமென்பதில்லை. கொடுத்தலும் ஆங்கே கொடுந்

துன்பந்தான். எப்படி எனில், பெற்றுக்கொண்டவனின் மனம் மகிழ்வதைத் தான் கண்டு மகிழ்ந்தாலன்றிக் கொடுத்தவன் மனம் நிறைவுபடாது. பெற்றவன் மனம் நிறைபடாதபோது பெற்றவனுக்கு முகமலர்ச்சி தோன்ருது. இரந்தவனுடைய இன்முகம் காணுத போது கொடுத்தவன் மனமும் குளிராது. அதனுல் தான் கொடுத்தலும் துன்பம் எனப்பட்டது. இருவர் மனமும் குளிர்ந்தபோதே மகிழ்ச்சி உண்டாகிறது. அதுவே அன்பின் அருஞ்செயல். அதனையே,

"இன்னுது இரக்கப் படுதல் இரந்தவர்
இன்முகம் காணும் அளவு"

என்று கூறினுர்.

கொடுத்தலானது பல திறப்படும். அவற்றுள் தலையாயது பசிக்கு உணவு கொடுத்தலே. எல்லா உயிர்க்கும் பொதுவானது பசித்துன்பம் ஒன்றே. அப்பசித் துன்பத்தைப் போற்றுவானே எவ்வுயிரையும் தன்னுயிர்போல் கருதும் அன்பு வழியில் நடப்பவனுவான். தனக்குற்ற துன்பமாகிய பசியைத் தானடக்கி வாழ்பவன் தவமுடையான். தானும் பசியாறிப் பசித்த உயிர்களுக்கும் உணவு அளித்துக் காப்பவன் தவமுடையானினும் பெரியன். அங்ஙனம் பசித்த உயிர்களுக்குத் தன்னுணவைப் பங்கிட்டுக் கொடுத்துக் காக்கும் உயர்நலமுடையானைப் பசியென்னும் தீப்பிணி ஒருநாளும் தீண்டாது. ஆகவேதான் பசியின்றி வாழவும் பசித்திருக்கும் உயிர்களின் துன்பங்களைப் போக்கி மகிழவும் செய்வது ஈகை என்ருயிற்று. ஈதலாவது தானுண்டு மகிழ்தலும், பிறர் உண்ண மகிழ்தலும் ஆகிய இருவகை நிலையினை உடையது என்பதை அறிவோமாஞல் பொருளின் பயன் தெரிந்து பிறருக்கு ஈந்து இன்பமடைந்து வாழலாம். அங்ஙனமன்றி ஈதலாலாகிய இன்பத்தினை அறியாமலும் பொருளின் பயனைத் தெரியாமலும் வருந்தி உழைத்துத் தேடிய பொருளை வைத்து

இழக்கும்படியான வன்கண்மையில் வீழ்ந்து மடித லாகாது.

> " ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
> வைத்திழக்கும் வன்க ணவர்."

இரத்தலே தீது; துன்பமானது; தாழ்வு தருவது என்று நூல்கள் வாயிலாகவும் அனுபவ வாயிலாகவும் அறிகிறேம். ஒரு செல்வமுடையான் தானீட்டிய பொருளைத் தானே உண்டு உடுத்து அனுபவித்து விடுவது எப்படி? ஒருவன் தான் மாத்திரம் இன்ப மடையவா இவ்வளவு பாடுபடுகிருன்? அப்படியே தேடிய பொருளை அவனே உண்டும் உடுத்தும் கழித்துவிட முடியுமா? முடியாதே? ஆகையால், தன் உழைப்பின் பயனைத் தன் கண்முன்னேயே பலரும் உண்டு மகிழக் காணுனின், அவன் செல்வம் பயன்பட்டதாகுமோ? ஆகாது. பொருளின் பயன் எய்தாதோடு, இரந்துண்டு வாழ்வான் எப்படித் தனியனுய் உண்கிருனே அப்படியே இவனும் தனியன். இரப்பான் எப்படிப் பிறர்க்குப் பயனிலனே அப்படியே தனித்துண்பானும் பிறர்க்குப் பயனிலன். ஆனுல் இரப்பவன் பொருளிலன். இவன் பொருளிருந்தும் பயனிலன். ஆகையால் அவனினும் கொடியவன். இதனை வள்ளுவர்,

> " இரத்தலின் இன்னுது மன்ற நிரப்பிய
> தாமே தமியர் உணல்"

என்று விவரித்தோதுகிருர்.

துன்பங்களிற் கொடியது சாதற்றுன்பமே. ஏனெனில், உயிர் உடலை நீங்கும்போது, எலும்பு மயிர்த் துவாரங்களில் அமைந்துள்ள அத்தனைத் துடிப்பும், சிறிது சிறிதாகவோ அன்றி ஒரு கணப் போதிலோ ஒடுங்கி ஒரு வழியிற் பிரியவேண்டுதலின், அவ்வளவு துன்பம் என்று அறிகிறேம். அல்லாமலும் எல்லா இன்பங்களையும் துய்க்கலாம் என்றிருந்தான் ஒருவன்,

திடீரென உயிர்விடும்போது, இத்தனை இன்பங்களை யும் விட்டுப்பிரிகிறோமே என்ற ஏமாற்றமும் துன்பப் படுத்துகிறது. மேலும், உடல் வேறு, உயிர் வேறு என்ற எண்ணமின்றியே வாழ்வார் பலர். அவர் உடலி னின்றும் உயிர் பிரிவதைத் தாமே அழிந்து போவதா கவே நினைத்து வருந்துவர். இப்படியெல்லாம் நோக் கினால், சாதலே துன்பங்களிற் கொடியது என்றறிகி றோம். ஆனால், இரக்க உள்ளம் உடையானுக்குச் சாத லினும் கொடிய துன்பமாக அமைந்தது ஒன்று உண்டு.

அஃதியாதெனின், தன்னிடத்து வந்து இரந் தார்க்கு இல்லை என்று சொல்லும் நிலை உண்டாய் விடுவது. தான் இன்பமடையாது இறந்துபடுதலே துன்பத்திற் சிறந்தது என்போமானால், இவன் இன்ப வாழ்வு வாழ்கிறான், இவனையடைந்தால் நம் துன்பம் தணியும் என்றே ஒருவன் இவனிடம் வந்து இரக்கின்றான். இவன் அந்த இரந்தவனிடம் தன் தாழ்வினை வெளிப்படுத்தும் நிலை வருமாயின், இல்லை என்று சொல்ல நேருமாயின் அதுபோது, தான் இன்பமடையாது இறப்பதினும், தன் துன்ப நிலையை இரந்து நிற்கும் இழிமகனிடம் தெரிவிக் கும் இழிநிலை பெரிதாகலின், இரத்தலைவிட, ஈதல் இயலாமையால் இல்லை என்னும் இழிநிலையே பெருந் துன்ப நிலை என்றறிதல் வேண்டும் என்கிறார் நம் வள்ளுவப் பெருந்தகை.

"சாதலின் இன்னாதது இல்லை இனிததூஉம்
ஈதல் இயையாக் கடை."

இத்தகைய ஈகையால் ஒருவனுடைய உள்ளம் அன்பென்னும் அருங்குணத்தால் விரிந்து மலர் கிறது. அன்பின் உயர்ந்தபடியே, செயலே, ஈகை என்ற அருஞ்செயல். ஈகையில், தகுதி தகுதியின்மை மேல் கீழ், உயர்வு தாழ்வு என்ற வேற்றுமை கிடை யாது. அவன் நம்மிடம் வந்து கேட்க வேண்டும்

என்ற எண்ணமும் கிடையாது. துன்பங் கண்ட போது, துன்பங் கேட்டபோது, உள்ளம் இரங்கி உடனே ஒல்லும் வகையால், செய்வதே ஈகை என்ற அருஞ்செயல். இதனை ஆசிரியர்,

" ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வாய் எல்லாம் செயல்"

என்றருளினர்.

ஆகையால் இத்தனை பெருமை நிறைந்த மனத்தூய்மை, சொல் தூய்மை, செயல் தூய்மை என்று கூறப்பட்ட, மூன்று அறநிறைவுகளும் நிகழும் இடம ஈகை என்ற செயற்கண்ணே யாகும். ஒருவன், இல்லறத்தின் பயனாகத் தனக்குத்தானே பெறக்கூடியது ஒன்று உண்டெனின் அஃது ஈகையே ஆகும். நாமனைவரும் இயற்கையோ டியைந்த வாழ்வை நடத்துகிறோமா என்று சிறிது சிந்தனை செய்யவேண்டும். இயற்கை நமக்குப் பல நுண்மைகளை உண்மைப் படுத்துகின்றது. மரஞ் செடி கொடிகள், மழையால் மண்ணின் சாரம் பெற்று வளர்ந்து, பிறர்க்கும் பிற உயிர்கட்கும் உணவு நிழல் உரம் முதலிய உதவிகளைச் செய்து பயன்பட்ட பிறகே உயிர்விடுகின்றன. இங்ஙனமே பிற உயிர்களும், தம் தம் ஆற்றலுக்கும், செயலுக்கும் ஏற்பத் தொண்டாற்றிப் பற்றுதல் உடையனவாய்க் கழிகின்றன. அங்ஙனமே, மனிதன் பிற உயிர்களின் உதவியால், உணவு உடை முதலியன பெற்று, உடல் வாழ்வும், அறிவு நிறைவு முதலியன தாய் தந்தை ஆசான் முதலியவர்கள் உதவியால் பெற்று உயிர் வாழ்வும் பெறுகிறான். இவன் செய்யக்கடவது என்ன என்று இவன் இயற்கை வாழ்வால் உணரவேண்டும். அங்ஙனம் உணர வருங்கால் தான் பெற்ற உதவியைத் திருப்பிப் பிற உயிர்கட்குச் செய்துவிடுவதும், தன் வாழ்க்கையைப் பிறர்க்கும் பயன்படும்படிச் செய்துவிடு வதுமே இன்றியமையாத உடல் வாழ்க்கை

யாகும் என்பதனை மறவாது கடைப்பிடிக்க வேண்டும். அந்த அருங்குணச் செயலே, ஈகை என்ற அருஞ்செயலாம். அவ்வாறு அவன் ஈந்து வாழ்வதாற் பெறுவதுதான் என்ன? அவன் அன்புச் செயலால் - ஈகையால் பலரும் அவரைப் பாராட்டுவர். துன்பமுடையார் உள்ளந்தோறும் துன்பவிலக்குக்கு ஓர் உறுதுணையாய் இவன் பெயரும் உருவமும் முன் நிற்கும். தான் துன்பப்பட்டகாலையும், பிறர் துன்பம் நீக்கும் பெருந்தகையாளன் நினைவு வந்து தன் துன்பத்தைப் போக்கும். அவன் உயிர் பலப்பல உயிர்களில் நிலைத்து நிற்பதால், பலப்பல உயிர்கட்கு ஆறுதலளிப்பதால், பலப்பல உயிர்கட்குத் துன்பம் நீக்குவதால், தெய்வநிலை பெற்ற உயிராகக் கருதப்படும். அதுபோது, அவன் உயிர் இன்னும், எல்லா உயிர்களுடைய எண்ணத்திலும் நிலைத்து நிற்கும் அருளை நாடும். அதுவே உயிர் வாழ்க்கையின் குறிக்கோளாகும். உடல் வாழ்க்கையின் குறிக்கோள் ஈகை யென்றால் உயிர் வாழ்க்கையின் குறிக்கோள் கொல்லாமை என்ற பேரறச் செயலே யாகும். எனவேதான் ஆசிரியர், இல்லற வாழ்க்கையின் லட்சியமே ஈகை என்று முடித்துக் காட்டினர்.

## புகழ்

அதன் பயன் புகழ். ஒருவனது மனந் தூய்மையை, சொல் இனிமையை, செயல் அருமையைப் பலரும் பாராட்டுவது புகழாகும். ஒருவன் உயிரும் உடலும் கூடி வாழும்போதும், பிரிந்து இறந்துபட்ட ஞான்றும் அவன் செய்த அருஞ்செயலைப் பாராட்டலே புகழ் என்று கூறப்படும். அங்ஙனம் அவன் பிறர்க்குப் பயன்பட்டமை, அவன் உயிர் ஞானம் என்னும் நல்லறிவு பெற்று, மற்றும் பிறந்து துன்பவாழ்வில் வீழாது

தடுக்கும் நல்வாழ்வை யளிக்கிறது. அங்ஙனம், உடலோடு கூடிவாழும்போது ஈந்து புகழடைந்து, உயிர்க்கு ஆக்கம் தேடிக்கொள்ளவேண்டும் என்பதை ஆசிரியர்,

"ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை யுயிர்க்கு"

என்று கூறினர்.

உலகத்தில் ஒருவன் பெருமையும் புகழும் அடைதற்கு எத்தனையோ துறைகள் உள்ளன. கல்வியால், ஒழுக்கத்தால், நல்லறிவால், சான்ருண்மையால், இன்னோரன்ன பிற துறைகளால் ஒருவன் பெருமையும் புகழும் அடையலாம். ஆனால், உணவின் முதற்றே உடல் ஆதலின் உணவுகொடுத்துப் பசிப்பிணி மருத்துவனாய் வாழுமவன் புகழே புகழ் எனப்படும். அறிவான் மிகுந்த புலவரும் முடியுடை மூவேந்தரை வீரங்கண்டு போற்றினும், பாரி முதலிய வள்ளலை அவனளித்த உணவு உண்டு புகழ்ந்தனர் என்றறிகிரேம். ஆகையால் உலகிடைப் பயிலும் உரையும் பாட்டு ஆகிய இருவகைப் புகழுரைகளும் உணவளித்துக் காக்கும் உயர்நலமுடையானையே சாரும்.

"உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்கு ஒன்று
ஈவார்மேல் நிற்கும் புகழ்."

மனிதன் வளர்ச்சியடையும்போது, அன்பு வளர வளர அறிவும் உடன் வளரவேண்டும். இவ்வறிவு வளர்ச்சியும் அன்பு வளர்ச்சியும் தொடரும்போது, உடல் நிலையும், பொருள் நிலையும், உலக நிலையும் உள்ளத்தில் விளங்கும். முதுமையும் பிணியும் முன்னின்று அச்சுறுத்தும். செல்வ நிலையாமை தோன்றும். அப்போது, அன்பும் அறிவும் தொழிற்பட்டு இரக்கமும் ஈகையும் வெளிப்படும். ஈகை மேலோங்க மேலோங்கப் புகழ் வளரும். புகழ் நிலைக்கும். பூத உடலும்,

அதனைச் சார்ந்த பொருளும் பின்நிற்கும். உடல் நிலையாது, பொருள் பின்வாராது. உயிர்க்குத் துணை யறம், உடல்வாழ்வு புகழால் நிலைபெறுவது என்றறிந் தால், இந்த உலகத்தில் அழியாது நிற்பது ஒன்று உண்டு என்றால், அது புகழ் ஒன்றே என்றறிகிறோம். அதனால்தான் சங்கச் சான்றோரும்,

" செல்வத்துப் பயனே ஈதல்
துய்ப்பேம் எனினே தப்புந பலவே"

என்று அழகுபடக் கூறினர்.

நம் ஆசிரியர், பின் தொடரும் என்று கூறியதோடு அமையாது மன்னு உலகத்து மன்னு உடலை மன்னுப் பொருளோடு கூடி வாழ்பவன், மன்னிய பெரும்புகழ் நிறுத்தவேண்டும் என்ற உண்மையை வெளியிடுகிறார்.

" ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்பதுஒன்று இல்."

இந்த அருமைத் திருக்குறளை மனத்தகத் தடக்கிய சங்கப் புலவர்,

" மன்னு உலகத்து மன்னியது குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாம்மாய்ந் தனரே"

என்று உரை எழுதினர்.

இனி, இந்த உலகத்தின் கண்ணே புகழுடம்பைப் பெற்று மறு உலகத்தில் புத்தேளுடம்பைப் பெறுதற்குத் துணை செய்வது ஈகையாதலின் இவ்விரண்டு பெருமை யினையும் பெறாத ஞானிகளினும் ஈகையாளரே மிகச் சிறந்தவராவர். உடல் நிலையாமை கண்டு, பொருள் நிலையாமை அறிந்து அந்நிலையாப் பொருளும் உடலும் இருக்கும்போதே நிலைத்த புகழையும் உயிருக்கு ஆக்கம் தரும் அறத்தையும் செய்துவிடுவது அரியதினும் அரிய செயலாகும். அங்ஙனம் செய்வது சதுரப்பாடுடை யார்க்கே கூடிய செயலாம் என்பதைத் திருவள்ளுவர்,

" நத்தம்போல் கேடும் உளதாகும் சாக்காடும்
வித்தகர்க்கு அல்லால் அரிது"

என்று கூறினர்.

பொருளிழந்து புண்ணியத்தையும், பூத உடம்பை இழந்து புகழுடம்பையும், நிலை நிறுத்துகிருன் ஆதலின் வளர்வதாகிய கேட்டையும், உளதாகிய சிறப்பையும் பெறுகிருன் ஈகையாளன் என்பதனை அறிகிரும். இதனைச் சங்கப் புலவரும்,

" புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
வலவன் ஏவா வானவூர்தி
எய்துப என்பதம் செய்வினை முடித்து"

என்று பாடினர்.

நிலையாதனவற்ருல் நிலையினவாகிய புகழையும் அறத்தையும் பெறுவது அரிய செயல் என்பதை அறிகிரும். அதனுல்தான் சிறப்புடை மனிதப் பிறவி எடுத்தவன், ஈதல் என்னும் பேரறத்தால் புகழாகிய நிலைத்த உடம்பினைப் பெறுதலே பிறவியின் நோக்க மாகக் கொள்ளவேண்டும். அகப்புகழ் நிறுத்தாதவன் மனிதனுகப் பிறந்தும் பிறந்தவனுகான். ஒரு மனிதன் இறக்குங்கால் பலரும் பாராட்டும் புகழைப் பெருனயின் அதுபோது அவன் தன்னைப் பழிக்கும் பலரையும் பார்த்து மனம் வருந்துகிருன். அஃது இழிந்த செய லாகும். அதற்கு முன்னே பலரும் புகழ்தற்குரிய அறச் செயலைச் செய்யாது கழித்தேனே என்று தன்னையே நொந்துகொள்ள வேண்டும். தனக்குப் பின் எச்சமாக நிறுத்துவன பல. மக்கள் ஓர் எச்சம். பொருள் ஓர் எச்சம். புகழ் ஓர் எச்சம். இதனைத் 'தம் பொருள் என்ப தம் மக்கள்' என்பதனுலும், 'அவரவர் எச்சத் தாற் காணப்படும்' என்பதாலும், 'எச்சம் என ஒருவன் மக்கட்குச் செய்வன' என்பதனுலும் அறியலாம். இம் மூவகை எச்சங்களுள் இங்குப் பேசப்படும் புகழ் என்னும் எச்சமே தனக்குத் தானே செய்து கொள்வதாகும். பிற

பொருளும் மக்களுமாகிய எச்சங்கள் தன்னேடு தொடர்ந்து வருவன அல்ல. ஒளி இல்லை என்றல் இருளும், இன்பம் இல்லை என்றல் துன்பமும் தாமே வந்து நிற்பன போல, ஈகை இல்லை என்றல் ஈயாமையும், அதன் பயனுகிய இசை இல்லை என்றல் வசையும் தாமே வந்து நிற்கும். ஆகையால், இசைபட வாழாதார் வசைபட வாழ்ந்தவராவார். ஆகையால் அவர் வாழ்வு உப்புக்கும் காடிக்கும் கூற்றய் முடிந்ததே தவிர உயிருக்கும் உலகுக்கும் உறுபயன் அளிப்பதாய் வாழ்ந்ததாகாது. அத்தகைய தீயனைப் பொறுத்த நிலமும் பலகாலும் ஊணவு கொடுத்து உணவு கொடுத்துத் தன் விளையுளும் குன்றும். அதனுல்தான் உலகத்தினரும் அத்தகையாளனைச் 'சோற்றுக்குக் கூற்று பூமிக்குப் பாரம்' என்பார்கள். இவ்வருங் கருத்துக்களை வள்ளுவப் பெருந்தகை இரண்டு திருக்குறள்களால் விளக்குகிருர்.

> " வசையென்ப வையத்தார்க்கு எல்லாம் இசையென்னும்
> எச்சம் பெருஅ விடின்"

> " வசையொழிய வாழ்வாரே வாழ்வார் இசையொழிய
> வாழ்வாரே வாழா தவர்"

என்பன அவை.

> " தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
> தோன்றலின் தோன்ருமை நன்று."

எனவே, இதுவரை மனிதனுகப் பிறந்தவன் தாய் தந்தையரால் வளர்க்கப்பட்டு ஆசானிடம் கல்வி பயின்று அறிவுடை நன்மகனுய் வளர்ந்தான். பின் தன் வாழ்வு தனித்திருப்பதன்றிக் கூட்டுறவால் அன்பு வளர்ச்சி பெற வேண்டும் என்று கருதி இன்ப வாழ்க்கைக்கென இல்லாளோடு கூடி நல்லறம் மேற்கொண்டு நன்மகவு பெற்று வாழுகிருன். அதுகாலை உலகக் கூட்டுறவில் உண்டாகின்ற தீய எண்ணங்களை விலக்கி மனந் தூயனுய் நல்லெண்ணங்களை வளர்த்துத் தீய சொற்களை விலக்கிச் சொல் தூயனுய் இன்சொற்

களைப் பயின்று தீய செயல்களை விலக்கிச் செயல் தூயனாய் நல்ல செயல்களை மேற்கொண்டு முதலாவதாகத் தன்னிடம் வரும் விருந்தினரைப் பாதுகாத்து இரக்கமேலீட்டால் மனித சமுதாயத்தில் உணவின்றி வாடுவாரை உணவு கொடுத்துக் காக்கிறான். இவ்வறச் செயலால் அவன் வாழ்வு பல்லாற்றானும் பாராட்டப்படும் படியான புகழுடைய பெருவாழ்வாய் அமைகிறது. இதுவே இல்லறத்தான் எய்தக்கூடிய பெருஞ் சிறப்பு. இதனடியாக அவன் தன்னலமற்றவனாய், பிறர் நலம் பேணும் பெரியனாய், உலக நிலையாமை, பொருள் நிலையாமை, உடல் நிலையாமை அறிந்து உயிர் வாழ்க்கையின் உயர்வு கருதிப் பொருள்களில் பற்றின்றி வாழக் கருதுகிறான். முதலில் எவ்வுயிர்க்கும் தன்னுயிர் போல் எண்ணி இரங்கும் தெய்வ அருள் நிலை பெறுகிறான். அதுவே அன்பின் வளர்ச்சி ஆகும். அன்பு வளர்வதற்கு ஈகை துணையாய் நின்றது. ஈகையின் பயனாய் அருளைப் பெறுகிறான். அருளைப் பெற்றான் ஒருவனுக்கு எல்லா உயிர்களையும் தன்னுயிர் போல் நினைக்கும் நினைவும், கொல்லாமை, இன்னா செய்யாமை, புலாலுண்ணாமை முதலாய பேரறங்களும், நிலையாமை, துறவு, வாய்மை, தவம் முதலாகிய நற்பண்புகளும் அமைந்து அவா அறுத்து, மெய்யுணர்ந்து வீட்டின்பம் அடைகிறான். அவனே மெய்ஞ்ஞானி. இதுவே இயற்கையாக மனித வாழ்வில் மலர்கின்ற வளர்ச்சி எனப்படும். இத்தனையும் சேர்ந்துதான் அறனென ஆசிரியரால் கூறப்படுகின்றது.

## அருளுடைமை

முதலில் அருளுடைமை என்பதை ஆராய்வோம். தொடர்பு கருதாது முன் செய்துவந்த ஈகையின் பழக்கத்தால் இயல்பாக எல்லா உயிர்கள் மேலும் செல்லுகின்ற இரக்க உள்ளமே அருளெனப்படும். இல்லறத்

தான், தான் பிறருக்குப் பயன்படப் பொருளைப் பாது காப்பது போல உயிர் வாழ்வை மேற்கொள்ளும் ஒருவன் அருளைப் பொருளினும் பெரிதாகக் கருதிப் பாதுகாக்க வேண்டும். பொருளை இழந்தால் மறுபடி முயற்சி செய்து பெற்றுக் கொள்ளலாம். பொருளைத் தீய வழிகளினாலும் தேடிக்கொள்ள முடியும். பொரு ளானது அற்பர்களிடத்தும் இருக்கக் காண்கிறோம். ஆனால், அருட்செல்வம் தீய வழிகளில் வாராது. ஒருகால் இழந்தால் மறுபடியும் பெற முடியாது. அற் பர்களிடத்தும் நில்லாது. நல்லொழுக்கம் நிறைந்து தீமைகளை அகற்றி அன்பின் வளர்ச்சி பெற்றானுக்கே கைகூடுவது அருளாகலின், எவ்வித வேற்றுமையையும் களைந்து எல்லா உயிர்களையும் ஒன்றெனக் கருதும் நிலையே அருளாகலின்,

> "அருட்செல்வம் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
> பூரியார் கண்ணும் உள"

என்று கூறினர்.

உலகத்தில் ஒரு பொருளை மூவகை அளவை களான் அறியலாம். அவை காட்சி அளவை, கருதல் அளவை, நூல் அளவை எனப்படும். இம் மூவகை அளவைகளினாலும் ஆராய்ந்து பார்த்து உயிர்க்குத் துணையாக நிற்பது இஃது என முடிவு செய்ய வேண் டின் அவ்வருளைத் தவிர வேறொன்றும் துணையாவ தில்லை. பல சமயங்களிலும் உயிர் நன்மை அடைதற் குப் பல வழிகள் கூறி இருப்பினும் அருள் இன்றி உயிர் முன்னேற முடியாது என்பதில் எல்லாச் சமயத் தினரும் ஒரே கருத்தினை உடையர். ஆகையால் நல்ல வழிகளில் நல்ல முறையில் ஆராய்ந்து அருளைக் கடைப்பிடித்து ஒழுகுவானாயின் அவன் பல சமயங் களிற் சென்று பல வழிகளில் திரிந்து பாழ்பட வேண் டியதில்லை. இவ்வருள் ஒன்றே அவனுக்கு நன்மை செய்யும்.

''நல்லாற்ருன் நாடி அருளாள்க பல்லாற்ருன்
தேரினும் அஃதே துணை.''

உயிரானது உடலில் மனத்தைத் துணையாகக் கொண்டு இன்ப துன்ப நுகர்ச்சிகளை அனுபவிக்கிறது. மனமானது உடலில் பொறிகளின் வழியாகச் சென்று புலன்களைப் பற்றி நன்மை தீமைகளைச் செய்து உயிருக்கு இன்ப துன்ப நுகர்ச்சிகளைச் சேர்க்கிறது. அந்த மனம் பொறி வழியாக உலகத்தின் மேற்செல்லும் பொழுது அருள் சேர்ந்த நெஞ்சமாகச் செல்லுமாருல் அனைத்துயிர்க்கும் நன்மையே செய்யும். அதருல் விளைவும் நன்மையாகவே முடியும். எனவே அந்த உயிர் பிறிதோர் உடலிற் சென்று புகும்போதும் இன்ப நுகர்ச்சிகளையே அனுபவிக்கும். துன்ப நுகர்ச்சிகள் கூடா. அன்றியும் தான் எல்லா உயிருக்கும் அருளுடைய நெஞ்சத்தனுய் நன்மை செய்தலின் தனக்குப் பிற உயிரால் தீங்கு வரும் என்ற அச்சமே தோன்ருது. உலகம் தோன்றினது முதற்கொண்டு இன்றுவரை பல காலங்களில் பல இடங்களில் தோன்றி பல்லுயிருக்கும் தன் அருளொழுக்கங்களால் நன்மை செய்த பெரியோர்கள் துன்பமடைந்தார்கள் என்பதற்கு ஒரு வரலாறும் சான்று பகர முடியாது.

''அல்லல் அருளாள்வார்க்கு இல்லை வளிவழங்கும்
மல்லல்மா ஞாலம் கரி.''

ஆகையால் உயிர்களிடத்துச் செய்யப்படும் அருளை நீக்கி உயிர்களுக்குச் செய்யக்கூடாத தீமைகளைச் செய்தவர்களே இந்த உலகத்தில் துன்ப வாழ்க்கையை அடைகிருர்கள் என்பதை அறிகிரும். உலகத்தில் துன்பம் அதிகமாக ஆக துன்பத்திற்குக் காரணமாகிற கொடுமைகள் மலிவும் அன்பு வளர்ச்சி அருள் வளர்ச்சி குறைவும் உலகில் தாண்டவமாடுகின்றன என்பதையும் அறிகிரும். இந்த உலக வாழ்க்கைக்கும் உடல் வாழ்க்கைக்கும் பொருட் செல்வமானது எப்படி இன்பத்

யைக் கொடுக்கிறதோ, அது போலவே மறு உலக வாழ்க்கைக்கும் உயிர் வளர்ச்சிக்கும் அருட் செல்வ மானது ஆக்கத்தையும் இன்பத்தையும் கொடுக்கிறது. பொருட் செல்வத்தை இழந்து இன்பத்தைப் பெற வேண்டும். பொருட் செல்வத்தை முன்னே செலவு செய்து பின்னே பெரிதாகப் பெருக்கவேண்டும். ஆனால் அருட் செல்வமானது இழந்து இன்பம் பெறுவதுமல்ல. முன் இழந்து பின் பெருக்கிக் கொள்வதுமல்ல. தன் அனுபவத்தால் உள்ளம் விரிந்து எல்லா உயிர்களிடத் தும் செல்லும் இரக்க உள்ளமாதலின் ஒருமுறை தவறி விடுவானானால் பின்னால் அவ்வருள் வந்து கூடுவதென் பது ஒருகாலும் இல்லை.

"அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்கு
இவ்வுலகம் இல்லாகி யாங்கு."

"பொருளற்றார் பூப்பர் ஒருகால் அருளற்றார்
அற்றார்மற்று ஆதல் அரிது."

அருளுடை நெஞ்சமில்லா ஒருவன் செய்கின்ற நற் செயல்களும் பேசுகின்ற நற்சொற்களும் உண்மைப் பொருளைச் சொல்லுகின்ற மெய் நூல்களில் காணப் படும் உண்மைகளை அறியாதவன் பேசுகின்ற உண் மைகள் போலத் தெளிவின்றிப் பிறர்க்குப் பயன் படாது கழியும். ஆகையால் அருளுடை நெஞ்சத் தான்தான் அறங்கள் செய்யும் கடப்பாடுடையன். அவன் செய்யும் அறங்கள் அனைத்துயிருக்கும் பயன் படும். அறம் செய்யும்பொழுதும், அருள் வளர்க்கும் பொழுதும் ஒருவன் மறவாது காப்பாற்ற வேண்டுவது ஒன்று உண்டு. ஒருவன் தனக்குக் கீழிருப்பானுக்கு நன்மையோ தீமையோ செய்யுங்கால் அவன் மனோ நிலை அறிந்துகொள்வதற்கு ஒரு வழி உண்டு. அஃது யாதெனின், தான் தன்னின் வலியார் முன்னே நின்று ஒரு நன்மையோ தீமையோ பெறும் பொழுது தன் மனோ நிலைப்படி எப்படி இருக்கும் என்பதைச்

சிந்தித்துத் தன்னின் மெலியாரை நடத்தவேண்டும். தன்னின் வலியார்முன் தன்னை நினைப்பானானால் அந்த இழி நிலை தன் மனத்துக்கு வந்து, தன்னின் மெலியார் தன்முன் வந்தபொழுது தீங்கு செய்யானாய் அருள் பெருகி நன்மையே செய்வான். வந்தவனை எளியன் என்றும் கருதான். தன்னை உயர்ந்தவன் என்றும் எண்ணான். எனவே அருள் வளர்தற்குரிய சிறந்த வழியாகும்.

*"வலியார்முன் தன்னை நினைக்கதான் தன்னின்*
*மெலியார்மேல் செல்லும் இடத்து."*

# புலான் மறுத்தல்

இங்ஙனம் அருளைப் பொருளாகப் பேணி அனைத்துயிர்மாட்டும் இரக்கம் பூண்டொழுகும் இயல்புடையான் முதலாவதாக இரக்கத்தைக் கெடுக்கும் தீய உணவை நீக்கி நல்லுணவு உண்டு வாழ்வான். உணவானது மனத்தைப் பாழ்படுத்தும் ஒரு சிறந்த கருவியாகும். உணவால் உடலும், உடலால் மனமும் நலம்பெறும் என்பது விஞ்ஞானிகள் கண்ட உண்மை. 'நல்ல உடல் நல்ல மனம்' என்பது மேலை நாட்டினர் கண்ட பழமொழி. உணவின் பிண்டமாகிய உடல் அத்தீய உணவை உண்டால் தீய உடலால் தீய மனம் எழுந்து தீய செயல் நிகழும் ஆகையால் தீய எண்ணங்கள் எழாமல் இருப்பதற்குத் தீய உணவை நீக்க வேண்டும். ஆகையால், அருளாளனுக்குத் தீய உணவாகிய புலாலுண்ணல் மிகவும் கடிந்து விலக்க வேண்டிய ஒன்று. தன்னுடைய உடல் செழிப்பாகவும் அழகாகவும் வளர்க்கவேண்டிப் பிறிதோர் உயிரின் உடலைக் கொன்று தின்பானானால் அனைத்துயிரையும் தன்னுயிர் போல் கருதும் அருள் எங்ஙனம் தன்னிடத்தில் வந்து கூடும்?

" தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பான்
எங்ஙன மாளு மருள்."

செல்வத்தை இன்பம் பயக்கும் என்று கருதி ஒருவன் பெரிதும் முயன்று ஈட்டுகிறான். ஈட்டின பொருளை உண்பதற்கும் மனைவிக்கும் மக்களுக்கும் சுற்றத்தார்க்கும் விருந்தினருக்கும் மற்றையார்க்கும் ஓரளவு பகிர்ந்து கொடுத்து எஞ்சியவற்றை உயிரினும் பெரிதாகப் பாதுகாக்கிறான். ஏன்? அப்பொருளானது அவனுக்குத் தன் முதுமையிலும் தனக்குப் பிறகும் இன்பத்தைக் கொடுக்கும் என்ற எண்ணத்தால். பொருளைப் போற்றாதவனிடத்துப் பொருள் நிற்பதில்லை. அவன் இன்பமடைவதும் இல்லை. அதுபோலவே ஊன் தின்பவன் அருள் என்னும் செல்வத்தால் அடையும் இன்பத்தை அடையமாட்டான். வில்லும் வேலும் வாளும் கையிற் கொண்ட வீரமுடையான் ஒருவன் போர்க்களம் புகுந்தபோது அவன் மனம் பகைவனைக் கொல்லுதலாகிய கொலைத் தொழிலையே நாடி நிற்பதுபோல, புலாலுண்பானுடைய மனமும் பிறிதோர் உயிரின் உடலைச் சுவைப்பதனால் அருள் என்ற குணமே இல்லாமல் கொலைத் தொழிலையே நாடிநிற்கும் என்பதை அறிகிறோம். இந்த உரைகளால் இந்த உண்மைகளால் அருள் என்பது எல்லாஉயிர்களிடத்தும் செலுத்தும் இரக்கம் என்பதை அடிப்படையாகக் கொண்டது. அருளல்லது என்பது அவ்வுயிர் உடம்பைக் கொல்லுதலை அடிப்படையாகக் கொண்டது என்று அறிந்து அதன் வழி நடப்பான் ஒருவன் அக்கொலைத் தொழிலும் பிறிதோர் உயிரின் உடம்பைத் தின்னுதலால் உண்டானது என்று அறிந்து, விலக்கவேண்டும். அருள் யாதெனின், கொல்லாமை; அருளல்லது யாது எனின், கொல்லுதல்; பொருள் யாதெனின், ஊனுண்ணாமை; பொருளல்லது யாதெனின், ஊன்தினல் என்ற அழகிய நால்வகைக் கருத்துக்களை,

"அருளல்லது யாதெனில் கொல்லாமை கோறல்
பொருளல்லது அவ்வூன் தினல்"

என்னும் குறளில் கூறியுள்ளார்.

உயிர் நின்ற உடம்போடு நீண்டகாலம் விலங்கு முதலாயின வாழவேண்டுமானால் ஊன் தின்பார் கொலைத் தொழிலை நிறுத்தி ஊனுண்ணுதலை மறுக்க வேண்டும். தன் உடம்பில் உள்ள ஊன் தனக்கு வெறுப்புத் தருவதை அறிவான் ஒருவன் பிறிதோர் உயிரின் உடம்பைச் சுவைத்துண்பது அறியாமையாலும் கொடுமையாலுமே தவிர அறிவுடைமை ஆகாது. செத்த பிணத்தைத் தின்பார் அரியர். ஆகலின் கொன்று தின்பாரே மிகப் பலர். தின்பவன் ஒருவன், ஊனைத் தின்பதற்கும் இரக்கத்திற்கும் தொடர்பில்லை, தின்பவன் கொல்லுவதில்லை என்று சொல்லுவானாயின் ஊனை விலைகொடுத்து வாங்குவாரில்லையானால் கொல்லுவாரும் இல்லை எனக் கூறி, பாவச் செயலைப் பணம் கொடுத்து வாங்கும் இழிதகையை எடுத்துக் காட்டுகிறார் திருவள்ளுவர்.

"தினல்பொருட்டால் கொல்லாது உலகெனின் யாரும்
விலைப்பொருட்டால் ஊன் தருவார் இல்."

மனிதன் தான் உணவு கொடுத்து வளர்த்த தன்னுடம்பின் ஊனைச் சீ என்றும் குருதி என்றும் புண் என்றும் விலக்குவது உண்மையானால், தான் உண்ணுகின்ற ஊனையும் பிறிதோர் உயிரின் உடலில் உள்ள சீ, குருதி, புண் என்று அறிந்து அதன் நிமித்தமாயினும் புலாலுண்ணலை விடுக்க வேண்டும். பிணத்தை உண்ணும் நரி, கழுகு முதலாயின எப்படித் தாழ்ந்தனவோ அப்படியே பிணத்தை உண்ணும் மனிதனும் தாழ்ந்தவனாவான். ஆகையால் நல்லறிவு பெற்ற சான்றோர், உயிர் நீங்கிய உடலைப் பிணமென்று அறிந்து புலாலுண்ண மாட்டார்கள். நெருப்பிலே நெய் முதலிய அவிகளைச் சொரிந்து ஆயிரம் வேள்விகளைச் செய்து

அடையும் பயனிலும் தம் உணவிற்காக உயிரின் உடம்பைக் கொல்லாது அருளொழுக்கம் பூண்டான் அடையும் பயனே பெரியது. எவனொருவன் தானும் கொல்லாது கொலைத் தொழிலால் வரும் ஊனையும் உண்ணாது அனைத்துயிர்க்கும் அருள் கொண்டு வாழ்கிறானோ அவனை உலகத்தில் உள்ள எல்லா உயிர்களும் தமக்குத் தமக்கு நன்மை செய்பவன் என்று அறிந்து கைகூப்பி வணங்குகின்றன. அவனே தேவநிலை பெறுகிறான்.

" அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத்து உண்ணாமை நன்று."

" கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும்."

## தவம்

இவ்வாறு புலாலுண்ணான் ஒருவன் அருளொழுக்கம் தலைப்பட்டபொழுது தவம் தானே வந்து கை கூடுகிறது. அவன் ஓர் உயிருக்கும் தீங்கு செய்யாது வாழக் கருதுகிறான். அதனால் தனக்கு வரும் துன்பங்களைத் தானே அடைகிறான். அதுவே தவம் எனப்படும்.

தனக்கு வருகின்ற துன்பங்கள் பலப்பல. உணவால், மனம் பொறி வழிச் செல்லலால், உலகியலால், வாழ்க்கைத் துறையால் துன்பங்கள் வரும். அதுபோது தன்னுடைய இன்பம் கருதிப் பிற உயிருக்குத் தீங்கு பயவாத வாழ்க்கை நிலைக்க வேண்டுமானால் ஒருவன் பல சோதனைகட்கு உட்படல் வேண்டும். தன் துன்பத்தை அவன் அனுபவிக்கும்போதே இத் துன்பம் பிற உயிர்கட்கும் இதே நோயைத்தானே செய்யும் என்று கருதுவதால் அத்துன்பம் அவனைப் பாதிப்பதில்லை. அவனும் பிறவுயிருக்குத் தீங்கு செய்ய அஞ்சுகிறான். அன்றியும், பிறவுயிர் படும்

துன்பத்தைக் கண்டவுடன், அருள் உள்ளத்தில் இரக்கம், இயல்பாகவே அவன்மாட்டு எழுதுகிறது. இந்நிலே, உலகில் மக்களிற் சிறந்தானிடம் காணும் உயர்ந்த பண்பாகும். உயிர்க்குரிய அன்புக்குணம் வளர்ந்து, தன் துன்பத்திற்கு வருந்தி, பிறவுயிர் துன்பத்திற்கும், வருந்தும் நிலேயும் அடையக்கூடியது என்பதனை மனிதப் பண்பால் வெளிப்படுத்தும் செயல் அது. அவன் ஒருகாலும், பிறவுயிர்க்குத் தீங்கு செய்யான். அதனேயே வள்ளுவர்,

'' உற்றநோய் நோன்றல் உயிர்க்குஉறுகண் செய்யாமை
அற்றே தவத்திற்கு உரு''

என்று அமைக்கிருர்.

தவம் என்பதை நம்மனோர் (தமிழர்) நோன்பு என்பர். நோன்பு என்ற சொல்லின் முதல் நோல் என்பது. நோல் என்பதற்கு, மன உறுதி கொளல் என்பது பொருள். 'உண்ணது நோற்பார் பெரியர்' என்ற வள்ளுவர் வாக்கே அதற்குச் சான்ருகும். நம்முடைய அருந் தமிழ்த் தாயாகிய ஔவையார், 'நோன்பென்பதுவே கொன்று தின்னுமை' என்று கூறுகிருர். கொல்லுதல் பிறவுயிர்கட்குத் தீங்கு செயல். தின்னுதல், தன்னின்பத்தைத் தேடல். இவ்விரண்டும் மன அலேச்சலேக் குறிப்பிடும். மன உறுதியுடையான் தன்னின்பத்திற்காகப் பிறவுயிர்கட்குத் தீமை செய்ய மாட்டான் என்பதை வலியுறுத்தவும், துன்பத்தைத் தானே அனுபவிப்பானேயன்றிப் பிறவுயிர்மேற் சென்று தன் இடுக்கணேப் போக்க முயலான் என்பதை விளக்கவுமே ஔவையார் அவ்வாறு கூறினுர். இத்தகைய மன உறுதியுடையானுக்கன்றித் தவம் கைகூடாதாகையால்,

'' தவமும் தவமுடையார்க் காகும் அவம்அதனே
அஃதிலார் மேற்கொள் வது''

என்று கூறுகிருர்.

இங்ஙனமே எவன் ஒருவன் இடையறாது சோதனையில் ஈடுபட்டுத் தன் துன்பத்தைப் பொறுத்துப் பிறர் துன்பங் களைய முற்படுகிறானோ, அவன் எச்செயலையும் தான் நினைத்தவாறே செய்து முடிக்கும் ஆற்றல் பெறுகிறான். அவனை இடை நிறுத்த யாராலும் முடியாது. அவன் நெஞ்சுறுதியே ஆக்கவும் அழிக்கவும் கூடிய ஆற்றலைக் கொடுத்துவிடுகிறது என்பதை,

"ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்
எண்ணின் தவத்தான் வரும்."

என்ற குறளால் அறியலாம்.

இல்லற நெறியில் நிற்பார் எத்தனையோ இடையூற்றைக் கடக்க நேரினும், ஒரோருகால் நெஞ்சுறுதியின்மையால், வருந்த நேரிடும். வறுமை, நோய், விருந்தோம்பா நிலை, சுற்றப்பிணக்கு, குடும்பத் தொல்லை இவற்றால், இல்லறத்தான் வருந்த நேரிடும். இஃது இயல்பு. ஆனால் தவமுடையான் எதனாலும் வருந்த மாட்டான். அவன் வருத்தத்தைச் சுகமாக நினைப்பவன். ஆகையால்தான் துறவறத்தாரின் வலிமை கருதி அவர்களை உணவு, உடை, இடம் கொடுத்து ஆதரிக்கக் கடமைப்பட்டிருக்கிறான் இல்லறத்தான். இதனையே,

"துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்
மற்றை யவர்கள் தவம்."

என்றருளுகிறார்.

மனித வாழ்வில் அடையக் கருதும் குறிக்கோள்கள், அவனவனுடைய அறிவு, ஆற்றல், தகுதி, செல்வம் இவற்றிற்கேற்ப அமைகின்றன. ஆனால், தவத்தால் ஒருவன் எந்தக் குறிக்கோளையடையக் கருதினும் அது கடைகூடும். அதற்கு உலகில், எத்தனையோ சான்றுகள் உள. அதனால்தான்,

"வேண்டிய வேண்டியாங்கு எய்தலால் செய்தவம்
ஈண்டு முயலப் படும்"

என்று கூறுகிருர்.

மனிதன் மற்றைய விலங்கு முதலிய உயிர்களைப் போலன்றித் தான் பிறந்த மனித வாழ்வை மதித்து நடக்கக் கடமைப்பட்டவன். வாய்த்த பிறவியைப் பாழ் போக்காது பண்படுத்தித் தனக்கும், பிற உயிர்க்கும் நன்மை தேடுபவன் வீழ்நாள் படாது நன்ருற்றும் கடமையுடையவன். பிறவியில் வரும் துன்பத்தையும் பிறவாமையால் வரும் இன்பத்தையும், நூலறிவு, நுண்ணறிவு, அனுபவம் இவற்ருல் அறியவேண்டியவன். அத்தகைய குறிக்கோளையடைவதற்குத் தவமே உறுதுணை அவனுக்கு. அதனையறிந்தவனே சாலச் சிறந்தவன். ஆகையால்தான், வள்ளுவர், தவம் செய்வானைத் தம் கருமம் செய்வான் என்றும் கூறுகிருர்.

"தவம்செய்தார் தங்கருமம் செய்வார் மற்றையார்
அவம்செய்வார் ஆசையுட் பட்டு."

துன்பத்திஞல் தவம் செய்வானுக்கு மனச் சோர்வோ உடற் சோர்வோ நிகழும். ஆஞல் அவற்றை அவன் பொருட்படுத்துவதில்லை. மலையிடை, சுரங்கத்திடை, மண்ணோடு மண்ணாய்க் கலந்து கிடக்கும் பொன்னை, நெருப்பிலிட்டுப் பலகால் சுட்டுச் சுட்டு உருக்குவதஞல் அப்பொன் எப்படித் தன்னிடத்துள்ள அழுக்கு நீங்கித் தனித்து ஒளி விடுகிறதோ, அதுபோல உலகிடை, பல தீயநினைவுகளையுடைய நெஞ்சத்தோடு கூடி வாழும் மனிதன், துன்பம் என்னும் நெருப்பால் சுடச்சுட, அவன், தீய நினைவுகள் என்னும் உள் அழுக்கும், தன் நலன் கருதிப் பிறர்க்குத் தீங்கு செயலாகிய புற அழுக்கும் நீங்கித் தூய தங்கமாய் ஒளிவிடுவான். அவன் உயிர், அகங்காரம் என்னும் அக அழுக்கும், மமகாரம் என்னும் புற அழுக்கும் நீங்கித் தனியாக ஒளி வீசுகிறது.

"சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு."

எப்படி மண்ணில் பொன் போற்றப்படுகிறதோ, அப்படியே மனிதனில் தவமுடையானும் போற்றப் படுவான். மண்ணிலே தோன்றிய பொன் எப்படி ஒளி வீசி மதிக்கப்படுகிறதோ, அப்படியே மனிதனில் தவமுடையானும், ஒளியுடையனாய் அனைவராலும் வணங்கப்படுவான். இதனை,

"தன்உயிர் தானறப் பெற்றானை ஏனைய
மன்உயிர் எல்லாம் தொழும்"

என்றருளுகிறார்.

எவன் ஒருவன் தவத்தால், உடலினின்றும் பிரிந்து வாழவும், உடல் வேறு, உயிர் வேறு என்று அறிந்து அனுபவத்தால் தனித்து வாழவும் அறிகிறானோ அவனுக்கு இறப்பு அச்சப்படுத்துவதில்லை. அவன் இறப்பதற்கும் அஞ்சுவதில்லை. அவன் இறப்பதும் இல்லை. உடலை நானென்று மயங்கிக் கிடப்பவன் தானே உடலைவிட்டுப் பிரிவதை இறப்பதாக-அழிவதாக நினைக் கிறான். உடல் நானில்லை என்றறிந்து அனுபவிப்பவன் உடலைவிட்டுப் பிரிவதை அழிவதாக-இறப்பதாக நினைப் பதும் இல்லை; வருந்துவதும் இல்லை. அவன் ஒரு பறவை கூடுவிட்டுக் கூடுபாய்வது போலவும், ஒரு மனிதன், கிழிந்த ஆடை களைந்து புத்தாடை அணிவது போலவும், ஒரு பாம்பு, உவாக்காலத்தில், தன் உடலில் உள்ள பழைய தோலை, ஒரு கிடுக்கில் கொடுத்து உரித்துவிட்டு ஒளியோடு வெளி வருவதுபோலவுமே கருதுகிறான். அதனால் அவனுக்கு மரணபயம் என்பதே கிடையாது.

"கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு"

என்ற அரிய வாக்கினால் இந்த உண்மையைக் கூறுகிறார். இத்தனை பெருமைகளை அளிக்கும் தவத்தை

மேற்கொண்டு கைவரப் பெற்ருன் ஒருவன், தவறியும் கூடா ஒழுக்கத்தில் அடிவைத்திடப்படாது. எத்துணைப் பெருமைகளையுடையானும் தவமுடையானைக் கண்ட போது தலைவணங்கி நிற்றலைக் காண்கிருேம். புத்தர், ஏசு, திருநாவுக்கரசர் போன்ற தவவாணர்களுக்கு உலகம் எத்தகைய வணக்கம் செய்தது, செய்து வருகிறது என்ற உண்மை நாமறிந்தது. சமயம் வேறு, தவம் வேறு. தவம் ஐம்புலனை வென்று அடங்கி ஆன்ம சோதனை செய்து, அனைத்துயிர்க்கும் அன்பு பூண்டு, ஒழுகுவது. சமயம், ஆன்ம நல வழிகளைக் கூறுவது. சமயம், உண்மைகளை (தத்துவங்களை) அறிந்தவாறே எடுத்துக் கூறும் வழிகள். ஆனல் தவம், ஆன்ம நலனை அடைய அடங்கி முயற்சிப்பது. ஆகையால்தான், திருவள்ளுவர் மனித சமுதாயத்தின் குறிக்கோளைக் கூறும் பொது நூலாகிய திருக்குறளில், சமயங்களைக் கூருது, சமய உண்மைகளை அறிவதால் செயலாற்ற வேண்டிய தவத்தினைக் கூறுகிருர்.

நிற்க. அத்தகைய தவமேற்கொண்டான் உலகக் கூட்டுறவாலும், மன எழுச்சியாலும், முக்குண வசத்தாலும் நிலைதடுமாறி, ஒழுக்கத்தினின்றும் தடுமாறி, தீய நினைவால் எரிப்புண்டு மயங்கி, ஒரொருகால் தவறுவன். அங்ஙனம் தவறும்போதும், தவத்தின் உயர்வு அவனுக்குத் தெரியும். ஆகையால், அத்தவற்றை மறைத்துத் தவமுடையானைப் போலவே நடிப்பான். ஆனல் உலகம் அவனைத் தவமுடையான் என்று கோலத்தாலும் சொல்லாலும் கருதுமே? ஆனலும், அவன் மனம் அவனைப் பலகால் இடித்துக் கண்டிக்கும். ‘ஏ மகனே! என் செய்கிருய்? உலகத்தை வஞ்சித்து நீ வாழ்வதாற் பயன் என்? நீ பூண்ட கோலம் உனக்கா? பிறருக்கா? உன் ஆன்ம நலனை இழந்து, உடல் இன்பங்கருதி, உறுதியற்று, உலகை ஏமாற்றி என்ன பெறப் போகிருய்?’ என்று அவனை அவன் மனமே எள்ளி நகைக்கும்.

" வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
அஞ்சும் அகத்தே நகும்."

முன்னும் கூடா ஒழுக்கம் கூறியது இல்லறத் தாற்கு. உலகிலே ஒருவன் அணியும் ஆடையும், உண்ணும் உணவும், வாழும் இடமும், அவனுக்கு இன் பத்தைக் கொடுத்துப் பிறராலும் போற்றப்படுவதற்கே அமைந்தன. பிறரெல்லாம் போற்றினும், தான் அவ் வுணவால், உடையால், இடத்தால், செல்வம் பிற வற்றால் இன்பமடையாதபோது அவை எற்றுக்குப் பயன்! இல்லை. தோற்றம் என்பது புறக்கோலம். ஒருவன் அகத்தேயடையும் இன்பங்களை முகம் மலர்ச்சி யால் காட்டுமாறுபோல, ஒருவன், அகத்தேயடையும் சிறப்புக்களை உணவு உடை இடம் முதலாயின புறத்தே தோற்றமாய்க் காட்டுகின்றன. தவமுடையான் அகத்தே பூண்ட மன உறுதியாம் ஆற்றலை அவன் பூண்ட கல்லாடை, மழித்தல், நீட்டல், இலைக்குடிசை, கையுணவு முதலிய புறக்கோலம் காட்டும். இத்தகைய புறக்கோலத்தை உலகினர் கண்டு, இத் தவவாணன் ஆன்ம நலம் கடைப்பிடித்த நல்லறவாணன் என்று கருதி வணங்குவர்.

ஆனால், அவன் அத்தோற்றத்தால் ஆய பயனை அடைந்தானோ! இல்லை. வழுக்கி விழுந்து வஞ்சித்து நெஞ்சிற் கரந்து, புறநல இன்பத்தை அவாவி இடுக் கட்படுகிறான். உலகத்தாரை வணங்கச் செய்த தவக் கோலமான அத்தோற்றம் அவனுக்குத் தீமை செய்த தன்றி நன்மை செய்யவில்லை. ஆகையால், பிறரை மதிக்கச் செய்வதற்காகத் தனக்கு நன்மை பயவாத ஒரு செயலைச் செய்வது அறிவுடைமையாகாது. அன்றி யும், அத்தவத்தையும் உண்மைத் தவம் செய்வாரையும் பழிப்பது ஆகும். ஆகையால், அங்ஙனம் மன உறுதி யில்லாதவன் தவம் செய்யற்க என்கிறார்.

''வானுயர் தோற்றம் எவன்செய்யும் தன்னெஞ்சம்
தானறி குற்றப் படின்''

என்பது குறள்.

பிற்காலத்தில் தவத்தின் அருமை தெரிந்து தவம் செய்ய வேண்டும் என்ற எண்ணமும், செய்ய முடியாமையினாலே தவ வேடமணிந்து வாழும் வாழ்க்கையும் மலிந்துவிட்டது. வேடத்திற்கு ஏற்ற செயலும் மனமும் இல்லாதபோது புற வேடம் பழிக்கப்படுகிறது. இந்த நிலை திருவள்ளுவர் காலத்திலேயே இருந்தது. பின்னும் திருமூலர் காலத்திலேயும் பொய்யொழுக்கப் புற வேடர்கள் இருந்தார்கள் என்பது தெரிகிறது.

''வேடநெறி நில்லார் வேடம் பூண்டு என்பயன்?
வேடநெறி நிற்பார் வேடம் மெய்வேடமே''

என்பது திருமூலர் வாக்கு. திருவள்ளுவர் பொய் வேடத்தாரை மிகவும் கடுமையாக எச்சரிக்கிறார்; கண்டிக்கிறார். பொய் வேடம் பூண்டவர் கொடியவர், கொலைஞர், பாவிகள், பதடிகள் என்று பழிக்கிறார். இத்தகைய பொய் வேடர்களால் உலகினர் போற்றும் தவமும்கூட பழிக்கப்பட்டு விடுமே என்று அஞ்சுகிறார்.

மனவலி இழந்து வாழத்தெரியாத வன்கண்ணர்கள் மறைந்து ஒழுகுவதற்கோர் புக்கிடமாய் விடும் தவ வேடம் என்று கூறுகிறார். புலியின் தோலைப் பசு போர்த்துக் கொண்டு புல் மேய்வதுபோலவும், புதரில் மறைந்து கொலைஞனாகிய வேடன் வலையில் பறவைகளைச் சிக்க வைப்பது போலவும், உடலெல்லாம் செம்மை நிறம் காட்டி மூக்கில் கருமை நிறமுடைய குன்றிமணி போலவும், உள்ளக் கொடுமையை மறைப்பதற்குத் தவ வேடத்தைத் துணையாகக் கொண்டோர் பலர் வாழ்ந்தனர் என்பதைத் திருக்குறளால் அறிகிறோம். உயர்ந்த தவவேடமும்கூட தாழ்ந்த செயலால் பழிக்கப்படும் என்பதற்குத் திருக்குறளே ஒரு சான்று.

தாழ்ந்த செயலை உயர்ந்த வேடம் அணிந்து செய்தார் பலர் என்பதை,

> "மனத்தது மாசாக மாண்டார்நீர் ஆடி
> மறைந்தொழுகும் மாந்தர் பலர்"

என்ற திருக்குறளால் அறியலாம். 'பலர்' என்ற சொல்லாலே வேடநெறி நின்றோர் சிலர் என்பதை அறிய வைக்கிறார். கூர்மை தீட்டி நெய்பூசி வழவழப்பாய் ஒளி உடையதாய்க் கண்ணுக்கழகாய் வீரனுடைய கைக்கு அணியாய் அம்பு விளங்குமேயாயினும் செயலால் கொலைத் தொழிலைச் செய்வதால் கொடிது என்று அறிகிறோம். வளைந்த கோடும் சிதறிய நரம்புகளும் பின்னிக்கிடக்கும் முறுக்காணியும் பெரிதும் சிறிதுமாய் அமைந்த வளைந்த வடிமும் உடையதேயாயினும் யாழ் என்னும் இன்னிசைக்கருவி எடுத்து முடுக்குவானுடைய விரல்பட்டதனால்றே ஏழிசை எழுப்பி இன்பம் தருகிறது. ஆகையால் தோற்றம் பெரிதல்ல; தொழிலே பெரிது என்ற முடிவுக்கு வர வைக்கிறார் திருவள்ளுவர்.

தோற்றமும் தொழிலும் ஒருங்கமையுமாயின் நன்றேதான். தொழில் சிறந்து தோற்றம் கெடுமாயின் தீது அன்று. தோற்றம் சிறந்து தொழில் கெடுமாயின் மிகக் கொடியது. எட்டி அழகாகப் பழுத்து எடுப்பாரைக் கசக்க வைப்பது போலவும், நஞ்சு குளிர்ந்து உண்பாரைக் கொன்று விடுதல் போலவும், தோற்றம் சிறந்து தீமை செய்வது மிகக் கொடியதன்றோ? கரும்பு கணு உடையதாயினும் இனிப்பது போலவும், தாமரை சேற்றின் முளைப்பதாயினும் தோற்றம் அளிப்பது போலவும், பலா முள்ளை உடையதாயினும் முழுச் சுவை அளிப்பதுபோலவும், தோற்றம் இலரேயாயினும் பிறர்க்கினியராய், தம் ஆன்ம நலப் பேறு பெற்றவராய் விளங்குவரேல் அவரே பெரியர் என்ற கருத்தினை,

> "கணைகொடிது; யாழ்கோடு செவ்விது ஆங்கு அன்ன
> வினைபடு பாலால் கொளல்"

''மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்தது ஒழித்து விடின்''

என்ற இவ் இரு குறள்களானும் தெளிவாக்குகிறார் திருவள்ளுவர். கூடா ஒழுக்கத்தைப் பற்றிப் பின்னும் கூறியது, துறவுக்கு என அறிக.

இப்படியே கூடா ஒழுக்கம் கடிந்தவன் செய்யக் கூடாத செயல்களாகிய பிற பொருளை வஞ்சித்தல், பிற உயிரைக் கொல்லல், புலால் உண்ணல், இன்னு செய்தல் இவற்றில் மிகவும் எச்சரிக்கையாய் நடந்து கொள்ள வேண்டும். களவினாலே தன் முயற்சி குறையும்; அவா மிகும்; இன்ப வேட்கையுண்டாகும். பொருட் பற்று எழும். இவை யனைத்தும் மனிதப் பண்பாட்டிற்கு முரணானவை. ஆகையால் பழியும் பாவமும் நிற்கும். அன்பு குறையும். பிறர் துன்பம் கண்டவுடன் இரக்கம் தோன்றாது. இத்தனைக்கும் மூலமாகிய களவினைக் கடிதல் அருள் உள்ளத்தானுக்கு இன்றியமையாததாகும். இதனை வள்ளுவர்,

''அருள்கருதி அன்புடைய ராதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்கண் இல்''

''அளவின்கண் நின்றொழுகல் ஆற்றார் களவின்கண்
கன்றிய காத லவர்''

என்று கூறுகிறார்.

களவு வெளிப்பட்ட பொழுது இன்பத்துக்குப் பதிலாகத் துன்பமே விளையும். களவினாலே அறியாமையே மிகும். களவு செய்பவனிடத்தில் வஞ்சகமே நிறைந்து நிற்கும். இன்பம் கருதி அறியாமையால் வஞ்சித்து அவ் வின்பத்தை அடைய முடியாது துன்பமே பெறுகிறான். ஆகையால் களவு உண்மை யின்பத்தை வேண்டினவனுக்கு ஒதுக்கப்படுவதாயிற்று. இதனை,

''களவின்கண் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமம் தரும்''

"களவென்னும் காரறி வாண்மை அளவென்னும்
ஆற்றல் புரிந்தார்கண் இல்"

"அளவறிந்தார் நெஞ்சத்து அறம்போல நிற்கும்
களவறிந்தார் நெஞ்சில் கரவு"

என்று கூறினர்.

பிறரை வஞ்சித்து வாழ்பவன் பலரால் வஞ்சிக்கப் படுவான். அவன் பிந்திய வாழ்வு பெருமை பெறாது. அவன் கொலைத் தொழிலுக்கும் அஞ்சமாட்டான். அவனும் தன் வாழ்வு எங்ஙனம் முடியும் என்பதை அறியான். வாழ்வு முழுதுமே ஒரு நிலையற்றதாய் இருக்கும். அதனை, 'கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை' என்று கூறுகிறார். உயிர்நிலை தள்ளுதலாவது எப்போதும் திடுக்கென்ற அச்சநிலை யுடையனாய் வாழ்தல். அவனுக்கு அமைதியே இல்லை. தன்னுடைய களவு வெளிப்பட்டபொழுதே தனக்கு வரும் ஆபத்தை எண்ணி அஞ்சிக்கொண்டேயிருக்கிறான். அதனால் அவன் வாழ்வு அவனுக்கே துன்பத்தைத் தருகிறது என்பது கருத்து. இத்தகைய களவாளன் பிறருக்குத் தீமை செய்தற்கும் கொலை செய்தற்கும் அஞ்சான். ஆகையால் களவே கொலைக்கும் தீமைக்கும் பிறப்பகமாகிறது. எனவே அறங்களிற் சிறந்ததாகிய கொல்லாமையும் இன்னா செய்யாமையும் களவாளனிடத்துத் தோன்றமுடியாது. அதனால்தான் கொல்லாமை அறத்தையும் இன்னா செய்யாமை அறத்தையும் சிறப்பித்துக் கூறி இவ் அறங்கள் நிலைக்கக் கள்ளாமை வேண்டும் என்று கூறுவார்.

'ஒன்றாக நல்லது கொல்லாமை'

'அறவினை யாதெனின் கொல்லாமை'

'நல்லாறு எனப்படுவது கொல்லாமை'

என்று கொல்லாமையின் சிறப்புக் கூறுகிறார். எத்தனை பெரிய நன்மை ஏற்படினும் கொலை செய்யற்க; தன் உயிர்க்கே தீமை நேரினும் கொலை செய்யற்க என்பதனை,

''நன்றாகும் ஆக்கம் பெரிதெனினும் சான்றோர்க்குக்
கொன்றாகும் ஆக்கம் கடை''

''தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது
இன்னுயிர் நீக்கும் வினை''

என்று கூறுகிறார்.

இவ்வுலகத்திலே துன்பப்படுபவர்கள், குறையுடையவர்கள், நோயுடையவர்கள் இவர்களை மலியக் காண்கிறோம். இவ்வாறு நிகழ்ச்சிக்குப் பல காரணங்கள் கற்பிக்கப்படுகின்றன. முயற்சியின்மை, ஒழுக்கமின்மை, கட்டுப்பாடின்மை இன்ன பிற காரணங்களால் சமுதாயம் சீரழிகிறது என்று கூறுவர். இவை வெளித் தோற்றத்தில் காணப்படும் புறக்காரணங்கள். உண்மையில் மனித வாழ்விலே வஞ்சனையும் களவும் கொலையும் குறையுமானால் மனித வாழ்வு சிறந்த நிலையடையும். நோயற்ற வாழ்வும், குறையற்ற உடலும், நிலைத்த இன்பமும் உண்டாகும். இதனை எதிர்மறை முகத்தால்,

''உயிர்உடம்பின் நீக்கியார் என்பர் செயிர்உடம்பில்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்''

என்று கூறுகிறார்.

இக்குறளிலே 'செயிர் உடம்பு' என்பது குறையுடலைக் குறித்தது. 'செல்லா வாழ்க்கை' என்பது வறுமை வாழ்க்கையைக் குறித்தது. தீ வாழ்க்கை என்பது நோயுடை வாழ்வைக் குறித்தது. இம் மூன்று நிலையும் 'உயிருடம்பின் நீக்கும் கொலைச் செயலால் நிகழ்வது' என்பது ஆசிரியர் கருத்து. இதனாலேயே,

''கொல்லாவிரதம் குவலய மெல்லாம் ஓங்க
எல்லார்க்கும் சொல்வது என்இச்சை''

என்று தாயுமானவர் கூறுகிறார்.

இப் பேருலகில் வாழ்ந்த பெரியார் அனைவருமே மக்கள் நன்றாக வாழவேண்டுமென்றே கருதினர்.

மக்கள் வாழ்வில் நோயும் வறுமையும் நுழையக்கூடாது என்பது அவர்கள் கருத்து. அந்த அருளாளர்கள்,

'எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பது
அல்லாமல் வேறொன் றறியேன்'

என்றே கூறினர்கள்.

ஆகையால் இன்ப நினைவை உடையவர்கள் துன்ப நினைவை எண்ணமாட்டார்கள். அறிவு, முயற்சி செய்ய முயற்சி செய்யத் துன்ப நினைவுகள் குறையும். தனக்குத் துன்பமானவற்றைப் பிறர்க்குச் செய்ய நினையார். தான் பிறர்க்கு ஒரு துன்பம் செய்தால் தன்னை அத் துன்பம் வந்து சாரும் என்பதை அறிவார். ஆகையால் தன்னைத் துன்பம் அணுகாதபடியும் தான் பிறர்க்குத் தீமை செய்யாதபடியும் முதலில் பாதுகாத்துக்கொள்ளுகிருன். பின்னர் வளர்ச்சியினுல் தனக்குத் துன்பம் நிகழினும் பிறர்க்குத் தீமை செய்யாது வாழ்கிருன். இன்னும் வளர்ந்த அனுபவ நிலையில் தனக்குத் துன்பம் செய் தோனுக்கும் நன்மை செய்கிருன். இதுவே மனிதப் பண்பாட்டின் வளர்நிலை, உயர்நிலை என இரு பிரிவினதாய் அமைகிறது.

''அறிவினுன் ஆகுவது உண்டோ பிறிதின்நோய்
தன்நோய்போல் போற்ருக் கடை''

''தன்உயிர்க்கு இன்னுமை தான்அறிவான் என்கொலோ
மன்னுயிர்க்கு இன்னு செயல்''

''இன்னு எனத்தான் உணர்ந்தவை துன்னுமை
வேண்டும் பிறன்கண் செயல்''

''பிறர்க்கின்னு முற்பகல் செய்யின் தமக்கின்னு
பிற்பகல் தாமே வரும்''

''கறுத்தின்னு செய்தவக் கண்ணும் மறுத்தின்னு
செய்யாமை மாசற்ருர் கோள்''

''செய்யாமல் செற்ருர்க்கும் இன்னுத செய்தபின்
உய்யா விழுமம் தரும்''

''இன்னு செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நல்நயம் செய்து விடல்''

என்னும் குறள் தொடர்களில் அறியக் கிடக்கிறது.

# நிலேயாமை

எவ்வுயிரும் தன்னுயிராய் எண்ணி இரங்கும் உயர் நிலேயாகிய தெய்வநிலே பெற்றவன் உலக நிலேயாமை, செல்வ நிலேயாமை, யாக்கை நிலேயாமை என்ற மூவகைப் பிரிவிஃனயும் உள்ளவாறு அறிகிருன். பொருளின் தன்மையை உள்ளவாறு அறிவதனுல்தான் உயர் பொருளில் விருப்பும், இழிபொருளில் வெறுப்பும் உண்டாவது. உலகமும், செல்வமும், உடலும் நிலேயா தன என்பதை அறிவதால் உலகப் பற்றும் செல்வப் பற்றும் உடற்பற்றும் முன்னே குறையும். பின்னே உலகமும் அழிவது, செல்வம் பிரிவது, உடம்பு நானல்ல என்ற உண்மை புலப்படும்போது இவற்றில் உவர்ப்பு இயல்பாக எழும். அதனுல் துறவும் ஞானமும் தானே வரும். நிலேயாமை என்பது மூன்று பிரிவானது. அழிதலும் இடம் மாறுதலும் நிலேமாறுதலும் என. உலகம் நிலே மாறும். செல்வம் இடம் மாறும். உடல் அழிதல். இம் மூவகை நிலேயாமையையும் முறையாக அறிதல் நிலேயாமை அறிதல் ஆகும். உலகத்தையும் செல்வத்தையும் உடம்பையும் நிலேத்தன என்று அறிவது மயக்க உணர்வாம். அதனே அறியாமை என்கிருேம். திருவள்ளுவர்,

''நில்லா தவற்றை நிலேயின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை''

என்பார். செல்வமானது பிறக்கும்போது கொண்டு வந்து இறக்கும்பொழுது உடன் கொடுபோவது அன்று. இடைநடுவில் முயற்சியாலும், பெற்ருேராலும், பிற செயல்களாலும் வந்து, குறித்த சிலகாலம் தங்கிப் பிரிவது; இடம் மாறும் தன்மையுடையது. நாடக அரங்கில் நடிப்பாரைக் காண நாற்றிசையிலிருந்தும் மக்கள் தனித் தனியாகவந்து கூடி நாடகம் முடிந்ததும் ஒருசேரப் பிரிவதுபோல முயற்சி வயத்தால் சிறிது சிறிதாகச் சேகரித்த பொருள் ஊழ்வயத்தால் ஒருசேரப் பிரிந்துவிடும்.

ஓரிடத்தும் நிலைத்திருக்காத செல்வத்தை நிலைத் திருப்பது என்று அறிவதும், அதனையே உடன் தொடரும் பொருள் என்று கருதுவதும் பேதைமையாகும். ஆகையால் பொருளின்றி வாழமுடியா இவ்வுலகத்தில் பொருளைப் பெற்ருனுல் பொருளின் தன்மையறிந்து தன்னை நிலைத்திருக்கச் செய்வதாகிய அறச்செயல்களைச் செய்துவிடவேண்டும். இக் கருத்தினை,

'' கூத்தாட்டு அவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று''

'' அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்ருல்
அற்குப ஆங்கே செயல்''

என்று வள்ளுவர் விளக்கம் கூறுகிருர்.

உலக நிலையாமை, செல்வ நிலையாமையை உள்ள வாறு அறிந்தவன் உடம்பையே தான் என்று உணர்ந் திருப்பதால் யாக்கை நிலையாமையை அறிவது கடினமா கிறது. அதனுல் யாக்கை நிலையாமையை உணர்வ தற்குச் சாதனங்கள் பல வேண்டும். கண்கூடாக நேற்று ஒருவன் வாழ்ந்து இன்று இல்லையாஞன்; அப் படித்தானே நம்முடலும் என்று அறிவது ஒன்று. ஒரு பறவையானது முட்டைக்குள்ளே உருவம் பெறும் வரை யில் ஒடுங்கிக் கிடந்து வளர்ந்த பிறகு வெளிக் கிளம்பி விடுவது போல இந்த உடம்பில் ஏதோ ஒரு உயிர் காலவரையறைக்கு உட்பட்டு வாழ்கிறது என்று அறிவது ஒன்று. உறங்குங் காலத்து உணர்ச்சியின்றி நினைவின்றி வெறும் மூச்சு மாத்திரையாய்க் கிடக்கின்ற நான் விழித்த காலத்து மன நினைவும் ஐம்புல நுகர்வும் தானே அமைவது போல இறப்பும் பிறப்பும் அமைந் திருக்கிறது என்று அறிவது ஒன்று. மாறி மாறி நிலை யற்ற இவ் உடலில் வாழ்வது உயிருக்கு உண்மை வாழ்வாகாது. மாருத—நிலைத்திருக்கக் கூடிய—சொந்த வாழ்வுக்குரிய ஒரு வீடு ஒன்று இவ் உயிருக்கு உண்டு என்று அறிவது ஒன்று. வாழ்கின்ற உடல் நமக்குச்

சொந்தமாயின் நாம் கருதுகிற காலவரையறை வரையிலும் நாம் கருதுகிறபடி வாழ இடம் கொடுக்க வேண்டும், சொந்த வீடுடையான் தன் வீட்டினைச் செப்பனிட்டுத் தன் இச்சைப்படி வாழ்வதுபோல. ஆயின் நம் இச்சைக்கு ஒவ்வாத வாழ் நாளும் நாம் எண்ணும்வரை அனுபவிக்க முடியாத நிலையும் பெற்றுள்ள உடம்பு நம்முடையது அன்று என்று அறிவது ஒன்று. வாழ்கின்ற வாழ்நாளும் கூட இன்ப துன்பச் சேர்க்கை உடையதாய் ஏற்றத் தாழ்வுகளைக் கொடுப்பதாய் நன்மை தீமைகளைச் செய்வதாய் அமைந்துள்ளது. வாழ்வு மேற்கொண்டவனுடைய நாளை, குடியிருப்பவனுக்குக் கூலிக்குரிய நாளைக் கணக்கிடுவதுபோல பகல் அறுதியிட்டு வரையறுத்துக் கொண்டு வருகிறது என்று அறிவது ஒன்று. இங்ஙனமாக உடல் நிலையாமையைப் பல்லாற்றானும் அறிந்து நாச்செற்று விக்குள் மேலெழுந்து உயிர் உடலை விட்டுப் பிரியுமுன் நல்வினையை—குறிக்கோளைச் செய்துவிட வேண்டும் என்று உள்ளம் துடிப்பான் உண்மை உணர்பவன்.

"நெருநல் உளன்ஒருவன் இன்றுஇல்லை என்னும்
பெருமை உடைத்துஇவ் வுலகு"

"குடம்பை தனித்துஒழியப் புள்பறந் தற்றே
உடம்போடு உயிரிடை நட்பு"

"உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு"

"புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்
துச்சில் இருந்த உயிர்க்கு"

"ஒருபொழுதும் வாழ்வது அறியார் கருதுப
கோடியும் அல்ல பல"

"நாளென ஒன்றுபோல் காட்டி உயிர்ஈரும்
வாளது உணர்வார்ப் பெறின்"

"நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும்"

என்ற குறள் தொடரால் அறிக!

## துறவு

மேற்கூறிய மூவகை நிலையாமையை முற்றும் உணர்ந்தவன் அவற்றிடத்தில் இதுகாறும் செலுத்தி வந்த பற்றினைச் சிறிது சிறிதாக விலக்கிக் கொள்ள முயற்சிக்கிறான். உலகப் பற்று அறுகிறான். செல்வப் பற்றைக் குறைக்கிறான். உடலின் உண்மை அறிகிறான். அதனால் அவற்றினின்றும் பிரிய—அவற்றை விட்டு விலகி வாழ அவன் உள்ளம் தூண்டுகிறது. எந்த எந்தச் சிறு பொருளினிடத்திருந்தும் விலகுகிறானோ அந்த அந்தச் சிறு பொருளினால் வருகின்ற துன்பமும் அவனைச் சாருவது இல்லை. ஒரு எடுத்துக் காட்டு: ஒரு பெருமகன் ஒரு நாயை வளர்க்கிறான். நாய்க்கும் அவனுக்கும் தொடர்பு இல்லை. பிறப்போ தகுதியோ பெருமையோ அதனாற் பெரும் பயனோ அவனுக்கு இல்லை. ஆயினும் தான் வளர்த்த நாய்க்கு ஒரு நோய்-ஒரு துன்பம் நிகழின் தான் வளர்த்த தொடர்பால் அவன் வருந்த நேரிடுகிறது. இஃது உலகியற்கை. இதனால் நாமறிவது தொடர்பும் பற்றும் அதனால் வரும் துன்பமும் ஒரு கூட்டம். எவனொருவன் எந்தப் பொருளினிடத்திருந்து பிரிகிறானோ, எந்தப் பொருளின் தொடர்பை அறுத்துக் கொள்கிறானோ அவனுக்கு அந்தப் பொருளால் வரும் துன்பமும் அந்தப் பொருளைப் பற்றிய துன்பமும் இல்லை. இதனை,

> "யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
> அதனின் அதனின் இலன்"

என்கிறார். முப்பற்றைக் குறைப்பது, அவைகளின் தொடர்பை அறுத்துக் கொள்வது எளிமையான செயலன்று. பொறிவழியோடும் புலனுணர்வை மனவலியால் அறிவுத் தெளிவால் அறிந்து அடங்கியானுக்கே-அடக்கும் ஆற்றலுடையானுக்கே ஏற்ற செயலாகும். மற்றையார்க் கரிது. உலகப் பற்றையும் செல்வப்பற்றையும்

விடுவதற்கு ஆன்மநலனை அழிக்கும் ஐம்புல வேடரை அடக்கும் ஆற்றல் வேண்டும். ஆற்றலிலாதாரைத் துன்பங்கள் அரித்துத் தின்னும். இதனை,

"அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை"

என்றும்,

"இயல்பாகும் நோன்பிற்கு ஒன்று இன்மை"

என்றும் கூறுகிறார். செல்வத்தையும் உலகத்தையும் பிரிந்து வாழும் பெருந்துறவு உடையானுக்கு உடம்பின் நிலையாமை ஒருதலையாய் உணரப்படும். அவ்வுணர்ச்சி உடம்பை ஒரு சுமையாக அவனுக்குக் காட்டும். அது போது 'நானல்ல இவ்வுடம்பு; என்னுடையதல்ல இச் சூழ் பொருள்' என்று அறிகிறான். எனக்கும் இச் சூழ் பொருள்கட்கும் தொடர்பில்லை என்றும் அறிகிறான். புளியம்பழத்தின் உள்ளிருக்கும் விதை போலவும், சேற்றில் வாழும் பிள்ளைப் பூச்சி போலவும் அவன் தனித்து வாழும் நிலை பெறுகிறான். புளியம்பழம் ஓடு, நரம்பு, தசை இவற்றோடு கூடியிருந்தும் உள்ளிருக்கும் விதை இம்மூன்றனுக்கும் தொடர்பின்றி ஒளி உடையதாய்க் காணப்படுவதைப்போல, ஓடுபோன்ற உலகத்திற்குள் நரம்பு போன்ற செல்வத்தைத் தசைபோன்ற உடலோடு புளியங்கொட்டை போன்ற உயிர் பிறந்து தனித்து வாழும் தன்மையை அடைந்துவிடுகிறது. சேற்றிடையே பிறந்து சேற்றையே உண்டு சேற்றிலே வாழும் பிள்ளைப் பூச்சி சேற்றிலிருந்து வெளிவரும் பொழுது சேற்றின் தொடர்பு சிறிதும் இன்றி ஒளியோடு வெளிவருவதைப்போல, இவ் உலகமாகிய சேற்றில் தோன்றிச் செல்வமாகிய சேற்றை உண்டு உடம்பென்னும் சேற்றில் வாழுமாயினும் உள்ளத் துறவாளனுடைய உயிர் என்னும் பிள்ளைப் பூச்சி இம் முச்சேற்றினையும் முற்றும் துறந்த ஆன்மஞானம் என்னும் ஒளி வீசி வெளிவருகிறது. இதனை,

' மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல்? பிறப்பறுக்கல்
உற்ருர்க்கு உடம்பு மிகை''

'' யான்எனது என்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்''

என்னும் குறட்பாக்கள் விளக்குகின்றன. இத்தகைய முத்துறவும் முற்றுப் பெற்றவனுக்கு மெய்யுணர்வு என்னும் தத்துவஞானம் தானே எழுகிறது. ஒரு பொருளிலும் பற்றில்லாது விளங்கும் உண்மைப் பொருளாகிய மெய்ப்பொருளை அவன் ஆன்மா பற்றுகிறது. பற்றற்ற பொருளைப் பற்றுவதனுல் இப்பற்றுக்கள் தானே கழிகின்றன. பற்றுக்களை ஒழித்த உயிர் பற்றின்றி வாழ முடியாதாகையால் பற்றற்ற மெய்ப்பொருளை அவ்வுயிர் பற்றிக்கொள்ளுகிறது. பற்றுதலாவது ஒரு பொருளோடு தான் போய் ஒன்று சேர்தல்.

'' பற்றுக பற்றற்ருன் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு''

'' பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும்; மற்று
நிலையாமை காணப் படும்''

என்ற குறள்கள் இவ் உண்மையை விளக்கி நிற்கின்றன.

பற்றற்ருன் பற்றினைப் பற்றினவர்க்கு முப்பொருளின் உண்மை புலனுவது இயல்பு. அதாவது தான் சார்ந்திருந்த உலக நிலையும் இப்போது பிரிந்த தன் நிலையும் தான் பற்றிக்கொண்ட முதற்பொருள் நிலையும் அறிவுக்குப் புலனுகிறது. உலகம் நிலையாதது என்று அறிகிருன்; அணுத் தன்மையாகிய ஆன்மாவாகிய தான் ஒரு சார்பின்றி வாழ முடியாது என்று அறிகிருன். தான் சாரும் முதற்பொருள் எல்லாமாய் அனைத்துக்கும் பற்றுக்கோடாய் உள்ளது என்றும் அறிகிருன்.

# மெய்யுணர்வு

இந்த உண்மை யுணர்வையே மெய்யுணர்வு என்றும் தத்துவஞானம் என்றும் கூறுவர். மனிதப் பிறப்பு எத்தனை பெருமை உடையது? அப்பிறப்பை அறியாமையினால் தொடர்பில்லாப் பொருளின்மேல் பற்றுச்செய்து பாழ்படுத்திவிட்டோமோ என்று நாணுகிறான். பொருளின் இழிவும் தன்னுயர்வும் அடையும் பொருளின் அழியா நிலையும் அவன் அறிவிற்குப் புலனாகிறது. அங்கே தோன்றும் உணர்ச்சி,

*'' பொருள் அல்லவற்றைப் பொருள்என்று உணரும்*
*மருளானும் மாணாப் பிறப்பு''*

என்று வெளிவருகிறது.

புலனடக்கம் பெற்றஞான்றும் அவனுக்கு மெய்யுணர்வு தோன்றுவதில்லை. முன்னே அனுபவித்த உலக இன்பங்கள் ஓரொருகால் அவன் நினைவுக்கு வரும். நாம் கருதும் வீட்டின்பம் என்பது வெறும் கற்பனையோ என்றுகூட ஐயம் எழும். பொருளின் தன்மை மாறி மாறி அழிவுடையதும் நிலைபேறுடையதுமாய்க் காட்சியளிக்கும். அவன் தெளிவில் பெறான் ஆயின் தெளிவில் நிலை நிற்கானாயின் உண்மையுணர்வு ஒருக்காலும் நிலைக்காது. மெய்ப் பொருளைக் காண்பதும் அரிது. அச்சமுடையானுக்கு, ஐயம் உடையானுக்கு, அறிவிலானுக்குப் பொருள்கள் எப்படித் துன்பத்தையும் மாறுபாட்டையும் விளக்காமையையும் உண்டாக்குமோ, அதுபோலப் புலன் அடக்கம் இல்லாதவனுக்கும் ஐயம் உடையானுக்கும் அறிவிலானுக்கும் மெய்ப்பொருளின் தன்மையறிவது இயலாததது ஒன்றாகும்.

*'' ஐஉணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே*
*மெய்யுணர்வு இல்லா தவர்க்கு''*

"ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணிய துடைத்து"

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு"

என்னும் குறட்பாக்கள் இவற்றைச் சுட்டுகின்றன.

## வாய்மை

இங்ஙனம் தெளிவு பிறந்தான் ஒருவன் பேசும் சொல், நினைக்கும் எண்ணம், அவன் செய்யும் செயல் மூன்றும் வாய்மையாய் உண்மையாய் மெய்ம்மையாய் நிகழும். வாய்மை என்பது வாயினால் பேசப்படும் சொல். உண்மை என்பது மனத்தில் நிகழும் எண்ணம். மெய்ம்மை என்பது உடலால் செய்யப்படும் செயல். உள்ளத்தில் நிகழும் எண்ணத்தின் வழி சொல் பிறந்து செயல்படுகிறது. எனவே உண்மை வாய்மை மெய்ம்மை என்பன மனம் தூயானது நினைவையும் சொல்லையும் செயலையும் குறிப்பனவாம். முற்றும் துறந்த அகப் பற்றுப் புறப்பற்றுக்களைக் களைந்த, மெய்யுணர்வுடை யானது நினைவும் சொல்லும் செயலும் நிலைத்ததாய் இன்பம் தருவதாய் உண்மையாய் இருக்கும். அதனால் அவன் பேச்சே வாய்மை எனப்படும். அவன் நினைவே உண்மை எனப்படும். அவன் செயலே மெய்ம்மை. இதனை,

"புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும்"

என்று கூறுவார். தீய நினைவு கலவாத சொல்லே இன் சொல். தீமை கலவாத செயலே நற்செயல். தீமை கல வாத நினைவே உண்மை. இதனை, 'யாதொன்றும் தீமை யிலாத சொலல்' என்றும், 'புரை தீர்ந்த நன்மை பயப்பது' என்றும், 'உள்ளத்தால் பொய்யாது ஒழுகல்' என்றும், 'மனத்தொடு வாய்மை மொழிதல்' என்றும்

கூறுவார். இங்ஙனம் நல்லன பேசி நல்லன எண்ணி நல்லன செய்து வாழ்வானது வாழ்க்கை உலகத்திற்கு ஓர் ஒளி விளக்கம். அவன் செய்யும் நற்செயலே பேரறம். அவனையே உலகத்தினர் அனைவரும் சாதி, சமயம், நாடு,மொழி வேற்றுமை கருதாது உயர்ந்தவன் என்று போற்றுகின்றனர். கொல்லாமை, வாய்மை யாகிய இவ்விரு பேரறங்களை இறுகப் பிடித்த காந்தி அடிகளையும் புத்தரையும் ஒளி விளக்கங்களாக உலகத் தார் போற்றுவது வெளிப்படை. இதனை வள்ளுவப் பெருந்தகை,

> '' எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
> பொய்யா விளக்கே விளக்கு''

என்றும்,

> '' உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் உலகத்தார்
> உள்ளத்துள் எல்லாம் உளன்''

என்றும் கூறினர். அனைத்துயிர்க்கும் அன்பு பூண்டு, மன்னுயிரைத் தன்னுயிரென மதித்து நடக்கும் நல் வாழ்க்கை உயர்ந்தது என்று எவ்வாறு போற்று கிறோமோ, அப்படியே நண்பர் பகைவர் அயலார் என்ற முத்திறத்தாரிடத்தும் வேற்றுமை கருதாது அன்பு கலந்து இன்சொல் பேசும் அருளாளனையும் போற்று கிறோம். ஆகையால் கொல்லாமையும் வாய்மையும் இரு பேரறங்களாய் அமைந்தன. பௌத்த மதத்திலும் 'அஹிம்சா பரமோ தர்மம்' என்றும், 'தயாதர்ம மூலம்' என்றும் பேசப்படும். அதனையே நம் வள்ளுவப் பெருந்தகை 'ஒன்றாக நல்லது கொல்லாமை' என்று கூறினர். வாய்மை எல்லோரையும் இன்பப்படுத்தும் நற்சொல் ஆதலின், உண்மைப் பொருளை அனுபவித் தான் பிறர்க்கு எடுத்துக்காட்டும் இன்சொல் ஆதலின், புலன் உணர்வுக்கு எட்டாத நுண் பொருளை அறிவுக்குப் புலனாகும்படி அறிவுறுத்தும் ஆற்றலுடையது ஆதலின், உபதேச மொழியால் அனுபவத்தை உண்டாக்கும்

அருமை உடையது ஆதலின், வாய்மை அறங்களில் தலை சிறந்ததாக விளங்குகிறது. அதனை வள்ளுவனார் 'மற்று அதன் பின்சாரப் பொய்யாமை நன்று' என்றும்,

> "யாம்மெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்
> வாய்மையின் நல்ல பிற"

என்றும் கூறுகிறார். திருவள்ளுவர் அறுதியிட்டுச் சொல்லும் நல்லது ஒன்று. பேறு ஒன்று.

அறங்களுள் சிறந்தது வாய்மை என்றும், பேறுகளில் சிறந்தது நன்மக்களைப் பெறுதல் என்றும் அறிவுறுத்தியிருக்கிறார். இல்லறத்தான் சமுதாய வளர்ச்சியில் நன்மக்களைப் பெற்று அறிவுடையவனாய் அன்புடையவனாய் வளர்த்து வாழ்வுக்கு வாழ வகை செய்யவேண்டும். அதுவே அவனடையும் பேறு. துறவறத்தான் அருளுடையவனாய் அனைத்துயிரையும் ஒன்றெனக் கருதித் தன்னலம் கருதாது பிறர்நலம் பேணி மனம் தூயனாய்ச் செயலினியனாய், யாரிடத்தும் சிறப்பென்னும் செம்பொருளைக் காண வகை செய்கின்ற இன்சொல் பேசுதலாகிய வாய்மை ஆகிய பேரறமே அவன் பெறும் பேரறமாகும். அதனையே,

> "பொய்யாமை பொய்யாமை யாற்றின் அறம்பிற
> செய்யாமை செய்யாமை நன்று"

என்றார்.

## அவாவறுத்தல்

இவ்வாறு வாய்மைவழி நிற்பான் கொல்லாவிரதம் பூண்டு குவலயத்தில் எல்லார்க்கும் நல்லவனாய் வாழுங்காலத்தில் சிறப்பென்னும் செம்பொருளை மெய்யுணர்வால் அறிகிறான். பிறப்பு தீயது; பிறவாமை இன்பமானது. பிறப்புக்குக் காரணம் அவா. பிறவாமை வேண்டுமேல் அவா ஒழியவேண்டும் என்று அறிகிறான். அவாவாவது யாது? பற்று வேறு; அவா வேறு. பற்று

என்பது தான் பெற்ற பொருளில் மனம் நெகிழவிடாமல் இறுகப் பிடிப்பது. உலகம் செல்வம் யாக்கை என்பன முன்னமே பெற்ற பொருள்கள். இவற்றின் நிலையாமை அறிந்தும் விடமுடியாமல் அதனிடத்திலேயே மேலும் மேலும் மனத்தையும் முயற்சியையும் செலுத்துவது பற்றுள்ளமாகும். அவா என்பது கிடைக்காத பொருளிலே—தான் அடையவேண்டும் என்று கருதிய பொருளிலே மனத்தைச் செலுத்துவது. பெற முடியாததும் பெற்றால் இன்பம் என்று கருதுவதும் ஆகிய பொருளை அடைய முயற்சிப்பதும் அதனிடத்தில் மனத்தைச் செலுத்துவதும் அவாவாகும். இதனை ஆசையென்றும் காமம் என்றும் கூறுவர். அவா பிறப்புக்கு விதை. எங்ஙனம் எனின் ஒரு பொருளை அடைய விரும்புவான் அப்பொருளிருக்கும் இடம் தேடித் தான் செல்வதுபோல உயிரானது இன்பவேட்கையினால் உலகப் பொருளை அவாவுமானால் அவ்வின்பத்தை அனுபவிக்க ஏற்றதொரு உடலைத் தேடிச் செல்கிறது. இங்ஙனமே பெற்ற பொருளில் பற்றும், பெறாத பொருளில் அவாவும் மாறி மாறி முழுதும் கடைகூடுகிற வரையில் பற்றும் அவாவும் வளர்ந்து வளர்ந்து உயிர்களுக்குப் பல பிறவிகள் உண்டாகும். உலகப் பொருள்களிடத்துள்ள பற்றை விலக்கிக் கொண்டானாயினும், உயிர்க்குணமாகிய அவா அவனை விட்டு விலகாது. அவா எழ எழ உயிர் பிறவிகளில் சென்று சென்று பாயும். பிறவி, துன்பம் என்று அறிந்தாலன்றி பற்று அறாது. பற்று அற்றால் நிலையாமையை உணர்வான். பிறவி துன்பம் என்று அறிவான். அதுபோது அவனுக்கு ஆராய்ச்சி எழுகிறது. பிறவிக்குக் காரணம் அவா என்ற முடிவுக்கு வருகிறான். மெய்யுணர்வு தலைப்பட்டனாென்றும் அவா விடவில்லை என்றால் பிறப்பு அறாது என்று அறிகிறான். அங்கே அவனது உள்ளத்து உணர்ச்சியோடு எழுகின்ற வேகம்,

"பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்றும்
நிலையாமை காணப் படும்"

"சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரும் நோய்"

"அவாஎன்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்
தவாஅப் பிறப்பீனும் வித்து"

"வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை; மற்றது
வேண்டாமை வேண்ட வரும்"

என்ற திருக்குறள்களாக வெளிவருகின்றன.

விதைக்குள் இருக்கிற ஜீவசக்தி போல உயிரிலே அவா என்ற ஆணவசக்தி அமைந்துகிடக்கிறது. அந்த உண்மை அறிவு எல்லார்க்கும் புலப்படுவது ஒன்று அன்று. செம்பில் களிம்பு போலவும், கரும்பிற் சுவை போலவும் பிரிக்கமுடியாத் தன்மையாய் அமைந்துவிட்டது அவா. அந்தச் செம்பினை ரசவாதியானவன் பச்சிலைச் சாறுகொண்டு புடமிட்டுக் கனம் குறையாமல் எப்படிப் பொன்னாக்குகிறானோ அதுபோலவும் கரும்பை ஆலையிலாட்டிச் சாறுகொண்டு காய்ச்சிச் சர்க்கரையைத் தனித்துப் பிரிப்பது போலவும் ஆணவத்தின் சேர்க்கையை மெய்ஞ்ஞானி உடலை வாட்டியும் தியாகத்தினாலும் புலனடக்கத்தினாலும் ஆணவத்தைக் குறைக்கிறான். அப்போதுதான் அவனுக்கு மெய்ப்பொருள் காட்சியளிக்கிறது; அவா நீங்குகிறது. இதனை,

"அற்றவர் என்பார் அவாவற்றார்; மற்றையார்
அற்றாக அற்றது இலர்"

என்பார்.

அவாதான் துன்பத்திற்குக் காரணம்; பற்றுக்கு இருப்பிடம்; பிறவிக்கு விதை. பிற அனைத்துவித சேர்க்கைக்கும் அவாவே மூலமாய் முன்னிற்கிறது. அவாவினை அறுத்தவன் செய்கின்ற செயல் அனைத்தும் தவ வினையாய் முடியும். அவா ஒருவனை வஞ்சித்து வீழ்த்திவிடும்; தவத்தைக் கெடுக்கும்; துன்பத்தை

உண்டாக்கும். ஆகையால்தான் ஒருவனை வஞ்சிப்ப தோரும் அவா என்றும், அவா உண்டேல் துன்பம் தவா அது மேல் மேல் வரும் என்றும் கூறுகிருர்.

அவாவினை அறுத்து இன்பம் இடையருது ஈண்டிய நல்வாழ்க்கை உடையான் வாழ்வே வாழ்வு. அவன் பிறப்பதும் இல்லை; இறப்பதும் இல்லை. அவனை 'ஜீவன் முக்தன்' என்று சொல்லுகிருர்கள். ஜீவன் முக்தனு வது உயிரானது எந்த அவாவினுல் துன்பநிலையில் கட்டுப்பட்டு வாழ்ந்ததோ அந்தக் கட்டு விடுபட்ட நிலை என்பது பொருள். அவாவானது எதனைப்பெற்ருலும் அமைதி பெருத இழி நிலையைத் தருவது. அதனுல் அதனைத் திருவள்ளுவர், 'ஆரா இயற்கை அவா' என்பார். அப்பெருங் கேட்டினைத் தரும் ஆரா இயற்கை அவாவினை நீத்தவன் அப்பொழுதே உலகியலிலும் உண்மையியலிலும் பிறர் எவராலும் பெற முடியாத பெரு நிலையைப் பெறுகிருன். அதுவே முக்தி நிலை எனப்படு கிறது.

*'' ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே*
*பேரா இயற்கை தரும்.''*

# முடிவுரை

இங்ஙனமாக உலகில் தோன்றின உயிர்ப்பொருள் களுள் உயர்பிறவி எடுத்தவனுகிய மனிதன் பல்லூழி காலம் வளர்ந்து வளர்ந்து, பலப்பல இன்ப துன்பங் களைப் படைப்பின் நோக்கத்தோடு பட்டுப் பட்டு, பின் ஞல் முன்னேர்களின் மொழிவழிப்படியும், தான் கண்ட அனுபவத்தின்படியும் பல இன்ப துன்பங்களை அனுபவித்து அனுபவித்து, ஒன்ருென்றனுலும் அடை கின்ற இன்பம் பின்னுல் துன்பமாய் அடைவதை அறிந்து அறிந்து, அவற்றினிடம் உவர்ப்பு உண்டாகி, உண்மை வேருென்று உண்டு என்பதை உறுதியாய்க்

கடைப்பிடித்துத், தன் வாழ்வைத் தன் நலனைக் குறைத்துப் பிறவுயிர் வாழ்வு மன்னுயிர் நலனை மதித்து, மாண்புறு வாழ்க்கையால் ஐம்புல வேடரை வென்று பற்றற்று ஆரா இயற்கை அவா நீங்கி அருளுடையனாய், அறவாணனாய் உலகியலையும், அரசியலையும் உண்மைப் பொருளின் இயல்பையும் உள்ளவாறு உணர்ந்து மனிதப் பிறவியின் ஒரு பெரும் குறிக்கோளை உடையவனாய் வாழ்கிறான். அவனே 'உலகிற் பெரியான்' அவன் செயலே 'செய்தற்கரிய பெருஞ்செயல்.' வானவீதியில் அடுக்கடுக்காய் அமைந்து கிடக்கும் அண்டகோஷங்கள் அத்தனையும் ஒருமுறை வழிப்படுத்தி அவற்றுள் அனைத்துயிரையும் ஆக்கி அழித்து ஆட்டிக்கொண்டிருக்கும் அற்புதச் சக்தியின் ஆற்றலை அணுவாகிய இவ்வுயிர் அறியமுடியுமோ? முடியும். அறிகிறது; அனுபவிக்கிறது. அனுபவித்துக் காட்டுகிறான். அப் பெரும் பொருளை அப் பேராற்றலைத் தன்னிடத்தில் காணும் தனியாற்றல் அவனிடத்தில் நிகழ்கிறது. இதனை வாழவந்த மக்களாகிய நாம் வள்ளுவன் வகுத்த வழிப்படி ஓராற்றான் அறிந்து உய்ய வேண்டும் என்பதற்குத் தனி மனித வாழ்க்கையின் வழிபாடுகளையும் வளர்ச்சிகளையும் முறைப்படுத்தி, எல்லா மக்கட்கும் ஏற்புடைத்தாகிய செந்நெறியினை - நன்னெறியினை - இயல்பு நெறியினை இல்லறம் துறவறம் எனப் பிரித்து, அன்பு வளர்ந்து அருள் வழி நின்று, தன்னலம் குறைந்து பிறநலம் பேணிப் பற்றுக் குறைந்து அவா நீங்கிப் பேரா இயற்கைப் பெரும்பேறு பெறவேண்டும் என்று திருவள்ளுவர் அறம் கூறுகிறது.

*'' அன்பின் வழிநின் றருளைக் கடைப்பிடித்தால்*
*இன்பநிலை வந்தெய்தும் என்பரால்—துன்புறுத்தும்*
*ஆரா இயற்கை அவாநீங்கி அந்நிலையே*
*பேரா இயற்கை பெறும்.''*

---